வாணன்பெயரெழுதாமார்புண்டோமாகதர்கோன்
வாணன்புகழெழுதாவாயுண்டோவாணன்
கொடிதாங்கிநில்லாதகொம்புண்டோவுண்டோ
அடிதாங்கிநில்லாவரசு ௧௩

உமையவளுநீயுமொருங்கொப்பேயொப்பே
உமையவளுக்குண்டக்கோருனம் உமையவடன்
பாகந்தோய்ந்தாண்டான்பலிகருழன்றான்பாண்டியனின்
ஆகந்தோய்ந்தாண்டனரசு ௧௪

மோட்டெருமைவாவிபுகமுட்டுவாற்கன்றென்று
வீட்டளவும்பால்சொரியும்வெண்ணெயே நாட்டில்
அடையாநெடுங்கதவுமஞ்சலென்றசொல்லும்
உடையான்சடையப்பனூர் ௧௫

வெற்றிபுனைதாதகிக்கும்வேம்புக்கும்பெண்ணைக்கும்
சுற்றும்பெருநிழலாய்த்தோன்றுமே சற்றோர்
திறந்தாங்குந்தாங்குஞ்செகமுழுதுந்தாங்கும்
அறந்தாங்குந்தொண்டவரசு ௧௬

கந்தமலர்ப்பிரமன்கன்னிமடவார்க்கெல்லாம்
அந்தவிளநீரைமுலையாக்கினன் சுந்தரஞ்சேர்
தோற்றமிகுவல்லிக்குத்தோப்பைமுலையாக்கினன்
ஏற்றமிதில்யார்தானியம்பு ௧௭

இருந்தவளைப்போனவளையென்னையவளைப்
பொருந்தவளைபறித்துப்போனான்-பெருந்தவளை
பூத்தத்தடந்தோன்சொரியும்பொன்னிவளநன்னாட்டின்
மாத்தத்தன்வீதியினில்வந்து ௧௮

ஆழியானாழியயனெழுத்தாணியென்பார்
கோழியான்குன்றெறியவேலென்பான்-பூழியான்
அங்கைமழுவென்பானருள்பெரியமாவண்டூர்ச்
சிங்கனுலக்கைத்திறத்தினை ௧௯

குடகர்குணகடலென்பர்குடகுக்
கிடகர்வடகடலென்பர்-வடகடலோர்
தென்கடலென்பர்திருந்துதாரச்சுதனின்
முன்கடனின்றூர்க்குமுரசு ௨௰

தினைவிளைத்தார்முற்றந்தினையுணங்குஞ்செந்நெ
றனைவிளைத்தார்முற்றமதுதானுங்-கனையு
முரசுணங்கச்சங்குணங்குமூரித்தேர்த்தானை
அரசுணங்குமச்சுதன்முற்றம் ௨௧

குறையுளாரெங்கிரார்கூர்வேலிராம
விறையாறுதிங்களிருந்தான் முறைமையால்
ஆலிக்குந்தார்மார்பாவச்சுதாவுந்நாளில்
வாலிக்கிளையான்கடை ௨௨

அரசனகளங்கனச்சுதன்முற்றத்
தரசரவதரித்தவந்நாள் முரசதிரக்
கொட்டிவிடுமோசையினுங்கோவேந்தர்காற்றளையை
வெட்டிவிடுமோசைமிகும் ௨௩

தளையவிழ்நாண்மாலைத்தாயரோபாவி
களையினுமென்கண்டிறந்துகாட்டேன்-வளைகொடுபோம்
வன்கண்ணன்மாவிசயன்மால்யானைதன்னொடும்வந்
தென்கண்புகுந்தானினி ௨௪

பாண்டியனைப்பேர்மாற்றிப்பாணர்க்கரசளித்த
வாண்டகையென்றுன்னையறியேனோ மூண்டெழுந்த
கார்மாற்றுஞ்செங்கைக்கடகரிவாணவுனது
பேர்மாற்றுவதரிதோபேசு ௨௫

வாட்டானைத்தென்னவர்கோன்மாகதற்குத்தோற்றசெய்தி
கோட்டானத்தீங்குரலுங்கேட்டதற்பினொட்டம்
பொருந்தாயிரவிழியான்பொன்முடியைச்சாய்த்தங்
கிருந்தானிங்கென்னொருகுமென்று ௨௬

பாணன்மதுரைப்பதியாளவைத்தபிரான்
வாணர்புகழ்வருமேகம்ப வாணன்
கரும்போதகமேநின்கால்பணிவேன்மீண்டு
வரும்போதகமேவரின் ௨௭

படுபருந்துஞ்சூர்ப்பேயும்பன்மிருகஞ்செந்நாய்
கொடிகழுதுமித்தானையுங்கூடி-வடிவுடைய
கோமான்களப்பாளன்கொள்யானைபோமாறு
போமாறுபோமாறுபோம் ௨௮

என்சிவிகையென் கவிகையென் றுவசமென்கவசம்
என்பரியீதென்கரியீதென் பரோ மன்கவன
மாவேந்தன்வாணன்வரிசைபரிசுபெற்ற
பாவேந்தனைவேந்தர்பார்த்து ௨௯

சேற்றுக்கமலவயற்றென் றுறைவாணனையான்
சோற்றுக்கரிசிதரச்சொன்னச்சால்-வேற்றுக்
களிக்குமாவைத்தந்தான்கற்றவர்க்குச்செம்பொன்
அளிக்குமாறெவ்வாறவன் ௩௰

தேருளைப்புரவிவாரணத்தொகுதிறைகொணர்ந்துவருமன்னநின்
தேசமேதுனதுநாமமேது புகல்செங்கையாழ்தடவுபாணகேள்
வாருமொத்தகுடிநீருநாமுமகதேவனுறைநகர்காவலன்
வாணபூபதிமகிழ்ந்தளிக்கவெகுவரிசைபெற்றுவருபுலவன்யான்
நீருமிப்பரிசுபெற்றுமீளவரலாகுமேகுமவன்முன்றில்வாய்
நித்திலச்சிகரமாடமாளிகைநெருங்குகோபுரமருங்கெலாம்
ஆருநிற்குமுயர்வேம்புநிற்கும்வளர்பனையுநிற்குமதனருகிலே
அரசுநிற்குமரசைச்சுமந்தசிலவத்திநிற்குமடையாளமே ௩௧

அலங்கலணிமார்பனுறைபர்கோன்வாணன்
விலங்குகொடுவருகவென்றான்-இலங்கிழையீர்
சேரற்கோசோழற்கோதென்பாண்டிநாடாளும்
வீரற்கோயார்க்கோ விலங்கு ௩௨

பரப்போதனாலொருகம்பியாளப்பனிமதியம்
தாரப்போனொருதம்பிபின்வரத்தானுந்துணைவியுடன்
வரப்போனமைந்தற்குத்தாதைபொருதுயிர்மாய்ந்தனனெஞ்
சுரப்போவெனக்கிங்கினியாருவமையுரைப்பதற்கே ௩௩

சண்டாயோபார்வேந்தாகானகத்துக்கள்ளியின்கீழ்
வெண்டாழைபூத்துவிளக்கெரியப்-பெண்டாலி
பூட்டுதற்குமுன்னமொருபுத்திரனைப்பெற்றெடுத்தாள்
காட்டிற்கழுகோட்டுங்கை ௩௪

கன்னிக்கலசமுலைபாடன்காமக்குரோதபஞ்சத்தில்
என்னுக்கெழுதிக்கெடுத்தேனென்றியம்பக்கேளாயிகல்வேந்தே
மின்னுக்கெழுதியிடைக்கெழுதிவேண்டும்பொருட்கு மெழுதியருட்
பொன்னுக்கெழுதிக் கொடுத்தன்யான் பொய்யுமுறைபேன் புகல்
வேந்தே ௩௫

பாண்டியன்பாடியது

போற்றினும்போற்றுவர்பொருள்கொடாவிடிற்
றூற்றினுந்தூற்றுவர்சொன்னசொற்களை
மாற்றினுமாற்றுவர்வன்கணாளர்கள்
கூற்றினும்பாவலர்கொடியராவரோ ௩௬

மன்னவனுநீயோவளநாடுமுன்னதோ
உன்னையறிந்தோதமிழையோதினேன்-என்னை
விரைந்தேற்றுக்கொள்ளாதவேந்துண்டோவுண்டோ
குரங்கேற்றுக்கொள்ளாதகொம்பு ௩௭

அன்றையிலும்வையமசன்றதோவல்லவென்று
குன்றெடுத்துநீதிருத்திக்கொண்டாயோ-என்றும்
அடைந்தாரைக்காக்குமகளங்காதுங்கா
கடந்தாயோநாலாறடி ௩௮

சாதமிருபத்துநான்கொழியக்காசினியை
ஓதக்கடல்கொண்டொளித்ததோ-மேதினியிற்
கொல்லிமலைத்தேன்சொரியுங்கொற்றவாநீமுனிந்தால்
இல்லையோவெங்கட்கிடம் ௩௯

நீரொலாஞ்சேற்றுநாற்றநிலமெலாங்கல்லுமுள்ளும்
ஊரொலாம்பட்டிதொட்டியுண்பதோதம்பஞ்சோறு
பேரொலாம்பொம்மன்திம்மன்பெண்களோநாயும்பேயுங்
காருலாங்கொங்குநாட்டைக்கனவிலுநினைத்தொணாதே ௪௰

குமிண்டியும்பண்ணையுங்கூடமுளைக்கின்றகொல்லைக்கம்பை
நிமிண்டியுமூதியுந்தின்னவல்லோரிந்தநீணிலத்திற்
றுமிண்டியங்காய்தன்னைமொட்டையம்பிலெய்யுஞ்சூரர்சண்டர்
நமிண்டியிற்பள்ளிகளத்தனைபேர்களுநல்லவரே ௪௧

செட்டிமக்கள்வாசல்வழிச்செல்லோமேசெக்காப்
பொட்டிமக்கள்வாசல்வழிப்போகோமே-முட்டிபுகும்
பார்ப்பாரகத்தையெட்டிப்பாரோமேயெந்நாளுங்
காப்பாரோவேளாளர்கண் ௪௨

மேழிபிடிக்குங்கைவேல்வேந்தர்நோக்குங்கை
ஆழிதரித்தேயருளுங்கை-சூழ்வினையை
நீக்குங்கையென்றுநிலைக்குங்கைநீடூழி
காக்குங்கைகாராளர்கை ௪௩

மற்கொண்டதிண்புயத்தான்மாநகர்விட்டிங்குவந்து
சொற்கொண்டபாவின்சுவையறிவாரிங்கிலையே

விற்கொண்டவாணுதலாள்வேல்விழிக்கூலி
நெற்கொண்டுபோமளவுநில்லாய்நெடுஞ்சுவரே ௪௪

## விருத்தம்

தேனாயார்செவ்விளநீருணணுப்பழிசுமப்பர்
நாரிபாக்காமறிவார்நாமலனைநத்தாமை
கோனாவாய்ப்பொன்சொரியுங்கொல்லிமலைநன்னாடா
ஊனாவாய்மூடவுலைமூடிதானிலையே ௪௫

மட்டுப்படாக்கொங்கைமானார்கலவிமயக்கத்திலே
சட்டுப்பட்டாயென்னகாதல்பெற்றாய்மதன்கையம்பினாற்
பட்டுப்பட்டாயினுந்தேறுவையேயென்றுபார்த்திருந்தேன்
வெட்டுப்பட்டாய்மகனேதலைநாளின்விதிப்படியே ௪௬

வில்லம்புசொல்லம்புமேதினியிலிரண்டுண்டு
வில்லம்பிற்சொல்லம்பேமேலதிகம்-வில்லம்பு
பட்டதடாவென் மார்பிற்பாண்டியாநின்குலத்தைச்
சுட்டதடாவென்வாயிற்சொல் ௪௭

கனைக்குவடக்கிருக்குங்காளிகாளம்மைக்
கனைத்துவழிசாங்கைத்தொட்டப்பேய்-உனைத்தும்
மறைத்தவறியாதவன்பேயின்கைகைக்
குறைக்குமாங்கூன்கத்திகொண்டு ௪௮

காலப்புபனிகர்காராளர்தம்மைக்கடலுடுத்த
தாலக்குலமங்கைபெற்றதனாற்சதாகாலமுமால்
மேகாலத்திருமுகத்தாலேமுகுந்தனங்கூடலிலே
சூலகராப்படையான்தலைமீதுசுமந்தனனே ௪௯

கல்லங்கட்டுதனில்விளையாக்கடுகனிலத்திற்றான்முளையா
அல்லனிருந்தகருங்கூந்தலணங்குக்கணங்குபோலாவாள்
செல்லன்றேவிமனைகடொறுங்கேடித்திருந்துங்காணுதை
நெல்லஞ்சோறேகப்பஞ்சோற்றினைச்சுமந்துதிரிவாயே ௫௰

கம்பர்கற்றுச்சொல்லி

மாவுறங்கினபுள்ளுறங்கினவண்டுறங்கினதண்டலைக்
காவுறங்கினவெண்கண்மானிருகண்ணுறங்கிலளையகோ
கோவுறங்குகடைத்தலைக்குலதீபவள்ளைகுதட்டிவாய்
ஆவமங்குபகாரசஞ்சலமஞ்சலென்னவடுக்குமே ௫௧

அம்பிகாபதியும்கம்பரும்பாடியது.

இட்டடிநோகவெடுத்தடிகொப்புளிக்க
வட்டில்சுமந்துமருங்கசையக்-கொட்டி
கிழங்கோகிழங்கென்றுகூறுவாணாவில்
வழங்கோசையவம்பெறும்

அம்பிகாபதி

சற்றேபருக்கதனமேகுலுங்கக்கரள்வடந்
துற்றேயசையக்குழையூசலாடத்துவர்கொள்செவ்வாய்
நற்றேனொழுகநடனசிங்காரநடையழகின்
பொற்றேரிருக்கத்தலையலங்காரம்புறப்பட்டதே ௫௩

வெங்கண்சிவக்குவெடிவான்முழக்கிக்கொண்டெழுந்தென்
அங்கம்பிளக்கவருங்களிலேயன்றிரணியனைப்
பங்கம்படவாக்கீண்டேயுகிரம்பருதர
சிங்கமிருக்குதுகாண்கெடுவாயென்றன்சிந்தையிலே ௫௪

வீரமுண்டோமதன்கையம்பினால்வெந்துவீழுகைக்கு
நேரமுண்டோவஞ்சிநேர்பட்டகாலையினெஞ்சைவிடப்
பேரமுண்டோசொல்லொண்ணாதகாமப்பெருநெருப்புக்
கீரமுண்டோவையனேயென்னபாவமினிச்சொல்வதே ௫௫

உருகியுடல்கருகியுள்ளீரல்பற்றி
எரிவதவியாதென்செய்வேன்-வரிபாவ
நஞ்சிலேதோயந்தநளினவிழிப்பெண்பெருமாள்
நெஞ்சியிலேயிட்டநெருப்பு ௫௬

வாணன்புகழ்க்கெல்லைவாழ்த்துவோர்நாவெல்லை
வாணன்புகழ்க்கெல்லைமண்ணெல்லை-வாணன்
படைக்கெல்லைதிக்கெல்லைபைந்தமிழ்தேர்வாணன்
கொடைக்கெல்லையேற்பவர்தங்கோள் ௫௭

நில்லாதபல்லும்பறிபட்டகூந்தலுநீண்டகரிப்
பொல்லாவழுக்குப்புடைவையுமாய்வெகுபூச்சியம்போய்ச்
செல்லாப்பணத்துக்குத்தேட்டேனுமற்றுத்தியங்கியொன்றும்
இல்லாதபாவிதனக்கார்துணைபொன்னிராட்டினமே ௫௮

வாசமலர்மடந்தைபோல்வார்மருதனைத்
தீனடியாரெழுபதின்பமர் நேசத்
திரவலர்மேனீட்டிவர்கையீண்டிலகையாளும்
புரவலர்மேனீட்டுவர்பொற்றான் ௫௯

இடைக்காடர்பாடிய ஊசிமுறி

ஆற்றங்கரையினருகிருக்குமாமரத்திற்
காக்கையிருந்துககககெனக்-காக்கைதனை
எய்யக்கோலில்லாமல் 0 0 0 என்றானே
வையைக்கோனாரின் மகன் ௬௰

ஏகம்பவாணன்மனைவி.

சேனைதழையாக்கிச்செங்குருதிநீர்தேக்கி
ஆனைமிதித்தகருஞ்சேற்றின்-மானபரன்

பாவேந்தர்வேந்தன்பறித்துநட்டானேகம்பன்
மூவேந்தர் தங்கண்முடி ௬௧

## கம்பர்வீடடுவெள்ளாட்டி

நெற்படிவிளைகழனிபுடைசூழ்நென்மலிவாழ்தச்சன்
கற்படிதோளான்பெயரோகங்கணகணகணவன்
விற்படிவாணுதலாண்மனைவிமின்மினிமினிமி
சொற்படிவேலைசெய்யுமவளோதுந்துமிதுரிதுரிதி ௬௨

வட்டமதிபோலிருக்கும்வன்னிக்கொடிதாவுங்
கொட்டுவார்கையினின்றுகூத்தாடும்-சுட்டால்
அரகராவென்னுமேயமபலசோமாசி
ஒருநாள்விட்டேனீதுறை ௬௩

தென்னவாமீனவாசீவிலிமாறுமதுரை
மன்னவாபாண்டிவாராமா-துன்னுஞ்
சுரும்புக்குத்தாரளித்ததுய்யதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலேகண் ௬௪

மாப்பந்தார்க்கல்லமுத்துவண்ணத்தார்க்கல்லவஞ்சி
வேப்பந்தார்க்காசைகொண்டுவிட்டாளே-பூப்பைந்தார்
சேர்ந்திருக்குநெல்வேலிச்சீவிலிமாறுதமிழை
ஆய்ந்திருக்கும்வீரமாறு ௬௫

வேம்பாகிலுமினியசொல்லுச்குநீபுனைந்த
வேம்பாகிலுமுதவவேண்டாமோ-மீன்பாயும்
வேலையிலேவேலைவைத்தமீனவாநின்புயத்து
மாலையிலேமாலைவைத்தாண்மான் ௬௬

இலகுபுகழாறையேகம்பவாணன்
அலகைவருமன்றுமென்றஞ்சி-உலகறிய
வானவர்கோன்சென்னிமிசைவண்ணகவளையெறிந்த
மீனவர்கோன்கைவிடான்வேம்பு ௬௭

## பாண்டியன்மனைவி

வேண்டியபோதின்பம்விரும்புமடந்தையரைத்
தீண்டியகையாலென்னைத்தீண்டாதே-பாண்டியா
முல்லைக்கதிபாமுகம்பார்த்தகலநின்று
சொல்லக்கடவதெல்லாஞ்சொல் ௬௮

தலையான்முலைமூடிக்கண்வலைக்குள்ளாக்கும்
விலைமாதர்தாம்வரவிட்டாரோ-விலைமாதர்
கொங்கையிலேதோய்ந்தகுறைதீரதுய்யசிவ
கங்கையிலேமூழ்கிவா ௬௯

ஆக-செய்யுள்-௩௧௫



இலக்கணக்கவிகளாகிய ஒட்டக்கூத்தரும் புகழேந்திப்புலவரும்

அவ்வவ்வமயங்களிற்கூறியதனிபபாடற்றிரட்டு

கலைவாணிநீயுலகிலிருப்பதுகல்வியுணர்கவிவல்லோரைத்
தலையாகக்காப்பதுநாவில்வாழ்வதுஞ்சத்தியமேயன்றோ
சிலைவாணனுவிருந்தாயிரம்புயங்கடுணிந்துமுயர்சீவனுற்றான்
தலையாவிகொடுத்திடுஞ் செங்குந்தருயிர்பெற்றிட நீ தயைசெய்வாயே

நிலைதந்தாருலகினுக்குமியாவருக்குமானமறைநிலைக்கத்தந்தார்
கலைதந்தார்வணிகருக்குச் சீவனஞ்செய்திடவென்றே கையிற்றந்தார்
விலைதந்தார்தமிழினுக்குச்செங்குந்தரொன்கவிக்கேவிலையாகத்தான
தலைதந்தாரெனக்குமொட்டக்கூத்தனெனப்பெயரினையுந் தாந்தந்தாரே

பத்துக்கொண்டனதிக்குர்பதறிப்போயுலையப்
பைம்பொற்றாரகைசிந்தப்பகிரண்டத்திடைநீள்
மத்துக்கொண்டுமதிக்குந்திரையாழிநெடுமால்
வடிவாகிப்பலிகைக்கொண்டருண்மாணபரண

முத்துப்பங்கரினிற் றுங்கடளைக்குஞ்சினவேன்
மூநகற்கும்பொதியையர்கோமுனிவர்க்குஞ்சடிலக்
கொத்துசுற்கும்பதுமக்கோந்தயனுக்குமலதிக்
கூழைத்தணடமிழுக்கேன்கொடியுங்காளமுமே ௩

இன்றல்லோகம்பனிறந்தநாளென்கவிதை
இன்றல்லோராசசபைக்கேற்குநாள்-இன்றல்லோ
பூமடந்தைவாழப்புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைநூல்வாசுதநாள் ௪

இன்றல்லோகம்பனெழுந்தநாளென்கவிதை
இன்றல்லோராசசபைக்கேறுநாள்-இன்றல்லோ
பூமடந்தைவாழப்புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைநூல்பூட்டுநாள் ௫

கட்டளைக்கலித்துறை

மாங்குயிலால்வில்லிதன்னம்பிறைற்கம்பவாரிதியால்
ஓங்கியபூமெல்லணைபொன்றினுமடநேர்மதியாற்
தீங்குறுமோநல்லெழில்குன்றுமோகொம்புசீர்கெடுமோ
காங்கையனேசொல்லகளங்கனேகம்பைக்காவலனே ௬

சரண்டகண்டத்தொனிக்கஞ்சியமான்கருங்கங்குலிலே
திரண்டவெள்ளத்திற்பிணமீதுசென்றனள்சேர்ந்தவனே
அரண்டவின்பங்கொடுமீளக்கராப்பற்றவங்கொலுசால்
குரண்டகன்னத்திலுதைத்தனள்காணக்குலோத்துங்கனே ௭

கோரத்துக்கொப்போகனவட்டம்மானை
கூறுவதுங்காவிரிக்குவையையோவம்மானை
ஆருக்குவேம்புநிகராகுமோவம்மானை
ஆதித்தனுக்குநிகரம்புலியோவம்மானை
வீராக்குள்வீரனொருமீனவனோவம்மானை
வெற்றிப்புலிக்கொடிக்குமீன்கொடியோவம்மானை
ஊருக்குறைந்தைநிசர்கொற்கையோவம்மானை
ஒக்குமோசோணாட்டுக்குப்பாண்நாடம்மானை ௮

புகழேந்தி

திருநெடுமாலவதாரஞ்சிறுபுலியோவம்மானை
சிவன்முடியிலேறுவதுஞ்செங்கதிரோவம்மானை
ஒருமுனிவனேரியிலோவுரைதெளிந்ததம்மானை
ஒப்பரியதிருவிளையாட்டுறைந்தையிலோவம்மானை
கரைபெதிரோடேறியதுகாவிரியோவம்மானை

கடிப்பகைக்குத்தாதகியங்கண்ணியோவம்மானை
பரவைபடிந்ததுஞ்சோழன்பதந்தனிலோவம்மானை
பாண்டியனார்பராக்கிரமம்பகரொளிதோவம்மானை ௯

ஒட்டக்கூத்தனும் சோழராசனும் பாடியது

ஆடுங்கடைமணிநாவசையாமலகிலமெங்கும்
நீடுங்குடையைத்தரித்தபிரானிந்தநீணிலத்தில்
பாடும்புலவர்புகழொட்டக்கூத்தன்பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனென்றேயெனைச்சொல்லுவரே ௰

ஒட்டக்கூத்தன்

இன்னங்கலிங்கத்தில்வேந்தருண்டென்றோ
தென்னன்றமிழ்நாட்டைச்சீறியோசென்னி
அகளங்காவுன்றனயிராவதத்தின்
நிகளங்கால்விட்டநினைவு ௰௧

புகழேந்தி

தென்னவன்றென்னர்பெருமான்றிறன்மதுரை
மன்னவன்கோக்களிற்றின்வல்லிக்கும்-பொன்னிநா
டாலிக்கும்வேந்தாமபயகுலன்மகளிர்
தாலிக்குமொன்றேதளை ௰௨

புகழேந்தி

சத்தம்பயிலும்புலவோர்கதலித்தண்டோட்டம்புகும்
பித்தனிவனென்பரென்னைக்கண்டாற்பெருந்துப்பணைத்துத்
தததம்பிறகிடும்பார்வேந்தர்தங்கட்டமகுட
சத்தம்பசத்தங்காண்கங்குல்யானைச்சயதுங்கனே ௰௩

ஒட்டக்கூத்தன்

மானிற்குமோவிந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கானிற்குமோவிவ்வெரியுங்கனன்முன்கனைக்கடலின்
மீனிற்குமோவிந்தவெங்கண்சுறாமுனம்வீசுபனி
தானிற்குமோவிக்கதிரவன்றோற்றத்திற்றார்மன்னனே ௰௪

புகழேந்தி

மானவனானந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கானவனானவ்வெரியுந்தனன்முன்கனைகடலின்
மீனவனானந்தவெங்கண்சுறாமுனம்வீசுபனி
தானவனானக்கதிரவன்றோற்றத்திற்றார்மன்னனே ௰௫

ஒட்டக்கூத்தன்

நானேயினியுனைவேண்டுவதில்லைநளினமலர்த்
தேனேகபாடந்திறந்திடுவாய்திறவாவிடிலோ
வானேறனையவிரவிகுலாதிபன்வாயில்வந்தாற்
றானேதிறக்குநின்கையிதழாகியதாமரையே ௰௬

புகழேந்தி

இழையொன்றிரண்டுவகிர்செய்தநுண்ணிடையேந்துவளைக்
குழையொன்றிரண்டுவிழியணங்கேகொண்டகோபந்தணி
மழையொன்றிரண்டுகைமானாபரணனின்வாயில்வந்தாற்
பிழையொன்றிரண்டுபொறாரோகுடியிற்பிறந்தவரே ௰௭

ஒட்டக்கூத்தன்

வெள்ளத்தடங்காச்சினவாளைவேலிக்கமுகின்மீதேறித்
துள்ளிமுகிலைக்கிழித்துமழைத்துளியோடிறங்குஞ்சோணாடா
கள்ளக்குறும்பர்குலமறுத்தகண்டவண்டர்கோபாலா
பிள்ளைமதிகண்டம்பேதைபெரியமதியுமிழந்தாளே ௰௮

ஔவையார்

ஒட்டாவொருமதிகெட்டாய்

புகழேந்தி

பங்கப்பழனத்துழுமுழவர்பலவின்கனியைப்பறித்ததென்று
சங்கிட்டெறியக்குரங்கிளநீர்தனைக்கொண்டெறியுந்தமிழ்நாடா
கொங்கைக்கமராபதியளித்தகோவேராஜகுலதிலகா
வெங்கட்பிறைக்குங்கரும்பிறைக்கும்மெலிந்தப்பிறைக்கும்விழிவே

ஒட்டக்கூத்தன்

புள்ளிருக்குந்தார்மார்பன்பூம்புகார்வாழ்களியேம்
கள்ளிருக்குங்கள்ளையுண்டுஞ்சோர்விலேம்-உள்ளபடி
செல்லிவாவாலிதுரோபதையைமூக்கரிந்த
நல்லவாமாபாரதம் வாலி - அரவக்கொடியையுடைய துரியோதனன்

என்றுபெறுவேன்பாணிசன்றிருமுடிமேல்
சென்றுவிளையாடுகின்றதீபமே என்றும்
செருப்புக்குத்தோல்வாங்குஞ்சென்னியகளங்கன்
பொருப்புக்குத்தோலாய்புயம் (தோல்-யானை) ௨௧

வேளாளன்

கோக்கண்டுமன்னர்குறைகடற்புக்கிலர்கோகநகப்
பூக்கண்டுகொட்டியும்பூவாதொழிந்திலபூமுழுதும்

காக்கின்றமன்னன்கவியொட்டக்கூத்தனின்கட்டுறையாம்
பாக்கண்டொளிப்பர்களோதமிழ்பாடியபாவலரே ௨௨

கருமான்

செல்லன்புதல்வன்றிருவேங்கடவன்செகத்குருவாங்
கொல்லன்கவியைக்குறைசொல்லுவோரைக்குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப்பருந்தாட்டமாட்டிப்பகைவர்முன்னே
அல்லும்பகலுமடிப்பேன்கவியிருப்பாணிகொண்டே ௨௩

அம்பட்டன்

விண்பட்டகொக்கெனவெல்லும்வல்லூறின்விலவிலத்துப்
புண்பட்டநெஞ்சொடுமிங்குநின்றாய்பொட்டையாய்புகலாய்
கண்பொட்டையாயினுமம்பட்டன்கவிவாணர்முன்னே
பண்பட்டசெந்தமிழ்நீயுந்திடுக்கிடப்பாடுவனே ௨௪

குயவன்

மோனைமுத்தமிழ்மும்மதமும்பொழி
யானைமுன்வந்தெதிர்த்தவனாரடா
கூனையுங்குடமுங்குண்டுசட்டியும்
பானையும்வனையணங்குசப்பையல்யான் ௨௫

தச்சன்

சொன்னசந்தக்கவியாவருஞ்சொல்லுவர்சொற்சுவைசேர்
வன்னசந்தங்கெடாவாயைக்கிழித்திந்தவாய்ச்சியினாற்
கன்னசந்தங்களினிற்கவியாப்பைக்கடாவுவனே ௨௬
இன்னசந்தக்கவியேதென்றபோதிலெதிர்த்தவனை

தட்டான்

திகிரிவட்டக்குடைச்செங்கோலபயன்செழுஞ்சிலம்பிற்
பகுதியொட்டக்கூத்தபட்டனைநானப்பணைக்கவியின்
மிகுதவொட்டத்தட்டிவிட்டகையோட்டிலுருக்கிக்குத்திப்
புகுதவொட்டித்தட்டிமேலணுகாவண்ணம்போர்செய்வனே ௨௭

ஒட்டக்கூத்தனும் புகழேந்தியும்

வென்றிவளவன்விறல்வேந்தர்தம்பிரான்
என்றுமுதுகுக்கிடான்கவசம்-துன்றும்
வெறியார்தொடைசமழுமீனவர்கோன்கைவேல்
எறியான்புறங்கொடுக்கினென்று ௨௮

பழியும்புகழுமெவர்க்குமுண்டாமிந்தப்பாரிலுனக்
கழியுஞ்சிலையுங்கயலுமென்றாலகளங்கதுங்கா
மொழியும்பொழுதெங்கள்பெண்சக்ரவர்த்திமுகத்திரண்டு
விழியும்புருவமுமாகியந்தோவுனைவெல்கின்றதே ௨௯

திக்குளெட்டுக்கயந்துக்கமுற்றுத்திக்கிட்டலற
வைக்கடற் [illegible] சாந்தைக்கவிட்டோர்க்கிடமாமதுர
இக்குமுற்றுக்கணுச்சற்றுவிட்டுத்தெறித்திட்டமுத்தைக்
கொக்குமொக்கிவிக்கிக்கக்கு பச்சோலைகுறுங்குடியே ௩௰

ஆக-செய்யுள்-௩௪௫.



கவிவீரராகவமுதலியார்

தேன்பொழிந்தவாயான்றிருவேங்கடத்துடனே
ஏன்பிறந்தான்கண்ணுக்கினியானே வான்சிறந்த
சீதேவியாருடனேசெய்யதிருப்பாற்கடலில்
மூதேவியேன்பிறந்தாண்முன் க

இம்பர்வானெல்லையிராமனையேபாடி
என்கொணர்ந்தாய்பாணனீயென்றாள்பாணி
வம்பதாங்களபமென்றேன்பூசுமென்றாள்
மாதங்கமென்றேன்யாம்வாழ்ந்தேமென்றாள்
பம்புசீர்வேழமென்றேன்றின்னுமென்றாள்
பகடென்றேனுழுமென்றாள்பழனந்தன்னைக்
கம்பமாவென்றேனற்களியாமென்றாள்
கைம்மாவென்றேன்சும்மா கலங்கினாளே உ

இல்லெனுஞ்சொல்லறியாதசீதக்கையில்வாழ்தானனைப்போயாழப்பாணன்யான், பல்லைவிரித்திரந்தக்கால் வெண்சோறும் பழந்தூசும் பாலியாமற், கொல்லநினைத்தேதனதுநால்வாயைப்பரிசென்றுகொடுத்தான்பார்க்குள், தொல்லையெனதொருவாய்க்குநால்வாய்க்கு மிரையெங்கேதரப்புவேனே ௩

முன்னாளிருவர்க்கும்யாக்கையொன்றாகமுயங்கினமால்
பின்னாட்பிரியன்விரியையென்றாயினம்பேசலுறும்
இந்நாட்சொழுநன்பனைவியென்றாயினமின்னமுமோர்
சின்னாளிலெப்படியோவையநீயின்றுசெப்புகவே ௪

வாழுமிலங்கைக்கோமானில்லை மானில்லை
ஏழுமராமரமோவீசக்கில்லை ஆழி
அலையடைத்தசெங்கைபபிரானாவின்று
சிலையெடுக்கவாறெனக்குச்செப்பு ரு

செஞ்சுடரின்மைந்தனையுந்தென்னிலங்கைவேந்தனையும்
பஞ்சவரிற்பார்த்தனையு மோராமே - விஞ்சு
விரதமேபூண்டிந்தமேதினியையாண்ட
பரதனையும்ராமனையும்பார் சு

வடவைக்கனலைப்பிழிந்துகொண்டுமற்றதொரு கல்வடித்தெடுத்து
வாடைக்கருத்திலைவைத்துகிமறுக்கக்காய்ச்சிக்குழம்புசெய்து
புடவிக்கயர்தமைப்பாடிப்பரிசுபெறுமற்றிரும்பிவரும்
புலவர்மனமபோற்சுடுநெருப்பைபுழு கென்றிறைத்தாற் பொறுப்
பாளோ, அடவிக்கதலிப்பசுங்குருத்தை தசச்சுக்குழ லென்றஞ்சியஞ்சி
அஞ்சொற்கிளிகள்பஞ்சரம்விட்ட கலாநிற்குமகளவகா
திடமுக்கடவாரணமுகைக்கமே கவேதேசிங்கமே
திசைகுவிசயஞ்செலுத்திவருசெங்கோனடாத்துமெங்கோனே எ

மாதரணிமென்முலைகோய்மாராசிதம்பரபூ
மாதரணிராசர்மகிழ்மாவசன - மாதர்
மறுகிடத்தேயம்பொன்மடவார்பழிக்கநெஞ்ச
மறுகிடத்தேங்குந்துறைப்பெண்வா அ

சொல்லுமல்லும்பகலுஞ்சோருங்கிடைஇடக்கும்
கல்லுமுருகக்கனிந்தரற்றும் - புல்லியணை
விண்கலக்குங்கீர்த்திவேள்சிதம்பரக்குமுணை
பெண்கலக்கங்கொண்டுகின்றன்பேர் கூ

வந்தனந்தமென்பூமணந்தோய்ந்துபாயப்பா
வந்தனம்விம்மிச்சோர்ந்தாள்வாகோடி - சந்தனங்கல்
அன்னமனங்கொள்ளாமலாளசிதம்பரக்குமுணை
அன்னமனங்கொண்டுயலேயாமகு ய

மாவாரிமுத்தவெண்பன்மாதுமயலைத்தணிசோ
மாவாரிமுத்தளித்தவைபோகர் மாவுச்
சிதம்பரவையாசீக்கிக்குளுயர்பூமா
சிதம்பரவையாசீதிக்கு யக

பங்கஜமேன்மேவியசௌபாக்கியசுமானளித்த
அங்கஜவேள்வெங்கணையாலாவிநொந்த எங்களிட
மாரஞ்சிதம்பரவுமாதினையாள்கோடிநமஸ்க
காரஞ்சிதம்பரயோகா யஉ

இன்னங்கலைமகள்கைமீதிற்புத்தகமேந்தியந்தப்
பொன்னம்பலந்தனிப்புகிருந்தாளென்னபுண்ணியமோ

கன்னன்களங்கைக்கவிவீரராகவன்கச்சியிலே
தன்னெஞ்சமேடெனக்கற்றுணருமுத்தமிழையுமே ௰௪

முன்னாட்டுத்தவமுனியுஞ்சேடனுஞான மீகனுமுன்முன்னில்லாமற்
றென்னாட்டுமலையிடத்தும்பாரிடத்தும்புற்றிடத்துஞ்சென்றுசேர்ந்தா
ரிந்நாட்டுப்புலவருனக்கெதிரிலையேகவிவீரராகவாநீ
பொன்னாட்டுப்புலவருடன்வாதுசெய்யப்போயினையோ புகலுவாயே

கோளரவேந்துலகிலிந்தப் புதுமையுண்டோ வெனமொழிந்தகுமுறுகேளாய், ஆளரைவந்தமைகதோய்ந்தகற்புடையபாஞ்சாலியனைந்தவீமன், வாளரிபோலநகிருகமலயவெற்பிலிருந்துவந்த யாமனைச்சாளரவாசலைத்திருந்துவரமழைக்குமுலையாரத்தழுவினளே ௰௫

பணியாரந்தோசையிலக்கொங்கைதோய்ந்திடப்பார்ப்பர்பல்லி
பணியாரந்தோசையிலாச்செந்துவாய்ப்பிறப்பார்களென்றே
பணியாரந்தோசைமுன்னேனுங்கிட்டேத்திப்பழனிச்செவ்வேள்
பணியாரந்தோசைவராகரன்னோர்க்கென்னபாவமிதே ௰௬

வீரஞ்சொரிகின்றபிள்ளாயுனக்குப்பெண்வேண்டுமென்றால்
ஆருங்கொடாருங்களப்பன்கபாலியம்மான்றிருடன்
ஊருஞ்செங்காடுநின்றன்முகம்யானையுனக்கிளையோன்
பேருங்கடம்பனுன்றாய்நீலிநிற்கும்பெருவயிறே ௰௭

கட்டிச்சோற்றைப்பறிகொடுத்தபோதுபாடியது

சீராடையற்றவைரவன்வாகனஞ்சேரவந்து
பாராருநான்முகன்வாகனந்தன்னைமுன்பற்றிக்கௌவி
நாராயணனுயர்வாகனமாயிற்றுநம்மைமுகம்
பாரான்மைவாகனன்வந்தேவயிற்றினிற்பற்றினனே ௰௮

மைவாகனன் - அக்கினிதேவன்

பாண்டியன்மாலைகண்டாய்மகளேநினைப்பார்த்தவர்க்கு
வேண்டியவின்பமிகவருமோவெண்ணெயேதிருடித்
தாண்டிக்குதித்தகற்கோதண்டராமன்றடவரைமேல்
ஆண்டியிருப்பிடந்தாதனிருப்பிடமானபின்னே ௰௯

சேனையுங்காத்துநல்லானையுங்காத்துத்துரோபதைதன்
தானையுங்காத்தடைந்தானையுங்காத்துக்கடத்தகலி
மானையுங்காத்தனுமானையுங்காத்துமடுவில்விழும்
ஆனையுங்காத்தவனேயெனைக்காப்பதரிதல்லவே ௨௰

பொய்யருக்குப்பொய்யுரைத்தால்வெற்றியாமவருக்குப்பொய்யாகாத, மெய்யருக்குப்பொய்யுரைத்தாற்றேய்பிறைபோற்றவக்குறையு மிடியுண்டாகும், துய்யதாய்தந்தையர்க்குப் பொய்யுரைத்தால்வறுமைபிணிதொலையாவென்றும், உய்யவருடேசிகற்குப்பொய்யுரைத்தானரகமதுவுண்மைதானே ௨௧

ஆக-செய்யுள்-௩௬௬



படிக்காசுத்தம்பிரான்

அடகெடுவாய்பலதொழிலுமிருக்கக்கல்வி
அதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திடமுளமோகனமாடக்கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத்தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப் பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத்தையலார்தம்
இடமிருந்துதூதுசென்றுபிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகிலிரக்கின்றோமே ௧

பெற்றுளொருபிள்ளையென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றுதகஞ்சிகுடிக்குந்தரமல்லபாலிரக்கச்
சிற்றாளுமில்லையிவ்வெல்லாவருத்தமுந்தீரவொரு
கற்றுதரவல்லையாவல்லமாநகாக்காளத்தியே ௨

வழிமேல்விழிவைத்துவாடாமலென்மனையாளுமற்றோர்
பழியாமற்பிள்ளையும்பாலென்றழாமற்பகைவோனுஞ்சொல்
மொழியாமலென்னைவரவிட்டபாவிமுசித்துச்சதை
கழியாமலாவளித்தாய்வல்லமாநகர்காளத்தியே ௩

சீதக்காதிபேரில்

ஓர்தட்டிலேபொன்னுமோர்தட்டிலேநெல்லுமொக்கவிற்குங்
கார்தட்டியபஞ்சகாலத்திலேதங்கள்காரியப்பேர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலேயன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால்சீதக்காதிவரோதயனே ௪

நேசித்துவந்தகவிராசர்தங்கட்குநித்தநித்தம்
பூசிக்குநன்கைப்பொருளொன்றுமேமற்றப்புலவர்பொருள்
வேசிக்குஞ்சந்துநடப்பார்க்குவேசிக்குவேலைசெய்யுந்
தாசிக்குமாகுங்கண்டாய்சீதக்காதிதயாநிதியே ௫

ஈயாதபுல்லரிருந்தென்னபோயென்னவெட்டிமரம்
காயாதிருந்தென்னகாய்த்துப்பலனென்னகைபரப்பிப்
போயாசகமென்றுரைப்போர்க்குச்செம்பொன்பிடிபிடியா
ஓயாமலீபவன்வேள்சீதக்காதியொருவனுமே ௬

காய்ந்துசிவந்ததுசூரியகாந்திகலவியிலே
தோய்ந்துசிவந்ததுமின்னார்நெடுங்கண்தொல்பலநூல்
ஆய்ந்துசிவந்ததுபாவாணர்நெஞ்சமனுதினமும்
ஈந்துசிவந்ததுமால்சீதக்காதியிருகரமே ௭

கேட்டாளன்காயற்றுறைசீதக்காதிசிறந்தவச்ர
நாட்டான்புகழ்க்கம்பநாட்டிவைத்தான்றமிழ்நாவலரை
ஓட்டாண்டியாக்கியவர்கடம்வாயிலொருபிடிமண்
போட்டானவனுமொளித்தான்சமாதிக்குழிபுகுந்தே ௮

வேல்கொடுத்தாய்திருச்செந்தூரர்க்கம்மியின்மீதுவைக்கக்
கால்கொடுத்தாய்நின்மணவாளனுக்குக்கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய்மதவேளுக்குமூவர்பயப்படச்செங்
கோல்கொடுத்தாயன்னையேயெனக்கேதுங்கொடுத்திலையே ௯

பொல்லாதமூர்க்கருக்கெத்தனைதான்புத்திபோதிக்கினும்
நல்லார்க்குண்டானகுணம்வருமோநவராத்திரியிற்
சல்லாப்புடவைகுளிர்தாங்குமோநடுச்சந்தையினிற்
செல்லாப்பணஞ்செல்லுமோதில்லைவாழுஞ்சிதம்பரனே ௰

மூவேந்தருமற்றுச்சங்கமும்போய்ப்பதின்மூன்றொடிரு
கோவேந்தருமற்றுமற்றொருவேந்தன்குடையுமற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம்பஞ்சாகப்பறக்கையிலே
தேவேந்திரதாருவொத்தாய்ரகுநாதசெய்துங்கனே ௰௧

முன்னநின்னன்னைமுலையூட்டிமையிட்டுமூக்குச்சிந்திக்
கன்னமுங்கிள்ளியநாளல்லவேயென்னைக்காப்பதற்கே
அன்னமுமஞ்ஞையும்போலிருபெண்கொண்டவாண்பிள்ளைநீ
இன்னமுஞ்சின்னவன்றானோசெந்தூரிலிருப்பவனே ௰௨

முற்கரையப்பனையேறவிட்டாட்கொண்முதல்வருள்ளக்
கற்கரைக்கும்படிபோதித்திடுங்கருணைக்கடலைச்
சிற்பரைக்குட்டியையெங்கெங்குந்தித்திக்குஞ்செங்கரும்பின்
சர்க்கரைக்கட்டியைக்கண்டேன்செந்தூரெனுந்தானத்திலே ௰௩

சின்னஞ்சிறுபிள்ளைசெங்கோட்டுப்பிள்ளைசிவந்தபிள்ளை
பொன்னன்மணிப்பிள்ளைபூலோகமெங்கும்புகழும்பிள்ளை
சொன்னெஞ்சழல்கின்றசூரனைவென்றசொக்கேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளைசெந்திக்குறத்திற்குமாப்பிள்ளையே ௰௪

நாட்டிற்சிறந்ததிருமலையாதுங்க நாகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற்கலைத்தமிழ்கோ
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்றொருபைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தாயினிதாவென்றுகூப்பிடுதே ௰௫

விண்ணுக்குமண்ணுக்கும்பேராய்விளங்கசகேவேந்திரனென்
கண்ணுக்கினியதுரைசீதக்காதிகமலநிகர்
தண்ணுக்கிசைந்தவதனசந்த்ரோதயசாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான்புலவோர்முகம்வாடியதே ௰௬

மறந்தாகிலுமனைக்காசுங்கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்தாவதென்னவிருந்தாவதென்னவிறந்துவிண்போய்ச்
சிறந்தாளுங்காயற்றுரைசீதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர்தமக்குப்பிழைப்பில்லையே ௰௭

விருத்தம்

என்னனைக்கன்றுமுத்தனைகுனிக்குமிறைவனையனைச்சுமேயன்று
மன்னனைக்கன்றிப் பின்னனைக்குதவாவன்புளால் வருந்திவாடுவனே
முன்னனைக்கொன்றுபின்னனைபுரந்தழுதுபகையவன்பிதாவுருமற்
கன்னனைக்கொன்றுவிசயனைபுரந்தகவுத்துவாகாயலாதிபனே ௰௮

கல்லடிக்குமுனியிரண்டுசாதடிக்குளடிப்ப தெனக்கவிதைகேட்
டுப், பல்லடிக்கக்கிடுகிடெனப்பறையடிக்கு நெஞ்சர்தமைப்பாடுவே
னேவில்லடிக்கும்பிரம்படிக்குங்கல்லடிக்கும்விரும்பிநின்ற மெய்யனீ
ன்ற,செல்லடிக்குந்தடவரையிற்சேறடிக்கவலையடிக்குஞ்செந்திலானே

குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக்
குறும்பியளவாக்காதைக்குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை
இரண்டொன்றுமுடிந்துதலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக்கூத்தனில்லை
விளையாட்டாக்கவிதைதனைவிரைந்துபாடித்
தெட்டுதற்கோவறிவில்லாத்துரைகளுண்டு
தேசமெங்கும்புலவரெனத்திரியலாமே ௨௰

சீதக்காதியின்பேரில்தாசிபாடியது.

தினங்கொடுக்குங்கொடையானே
தென்காயற்பதியானேசீதக்கா
இனங்கொடுத்தவுடைமையல்ல
தாய்கொடுத்தவுடைமையல்லவெளியாளாசை
மனங்கொடுத்துமிதழ்கொடுத்துமபிமானந்
தனைக்கொடுத்துமருவிரண்டு

தனக்கொடுத்தவுடமையெல்லாங்கள்ளர்கையிற்
பறிகொடுத்துத்தவிக்கின்றேனே ௨௧

ஆகசெய்யுள் ௧-௮௭



## சவ்வாதுபுலவர்

கிளைபாளன்சேதுபதிரகுநாயகிகன்கிஞ்சுகவாய்
இளையார்கலவியிடத்துநம்மீசரிடத்துமென்றும்
வளையாதபொன்முடிசற்றேவளையுமகுடமன்னா
தளையாடியகையிற்காளாஞ்சியேந்துஞ்சமயத்துமே ௧

பானுகிரணம்பார்க்கும்பங்கேருகநிலவு
தானும்வரப்பார்க்குஞ்சகோரங்கள்-வானமரும்
மையைப்பார்க்கும்மயில்கண்மாவிசயானந்தரங்கன்
கையைப்பார்க்கும்புலவோர்கண் ௨

பாலையிலாள்பின்னங்காற்பஞ்சுளியென்றேசுளிப்பாள்
பாலையிலாள்பின்னென்படுவாளோ-சோலையிலே
ஆடுமயிற்பிரம்பூரானந்தரங்கதுரை
நாடுதனிலென்னிளமின்னாள் (பஞ்சு-உளியென்றுகோவிப்பாள்)

அலையான்கவடுபடாநாருடனுங்காயான்
இலையென்பதோர்நாளுமில்லை-கலைநேர்ந்த
சாலைமுத்துகிருஷ்ணனருள்சற்குணசிந்தாமணியைச்
சோலையென்றுசொன்னவரார் சொல் ௩

செல்லப்பன்கச்சியிலேசேர்ந்ததம்பினுமணிகள்
நல்லதருமேகநிதியம்-சொல்லவே

முட்டின்றிப்பொன்றிரண்டுமூன்றுநான்கைந்தாறேழ்
எட்டொன்பான்பத்தானவே ௫

கச்சிச்செல்லப்பன்றோன்றினபின், அவனோடுசேர்ந்து ஆ - ஒன்று இரண்டாயின-மணி-மூன்று-நான்காயின-தரு-ஐந்து ஆறாயினமேக கம் ஏழு எட்டாயின-நிதியம்-ஒன்பது-பத்தாயின

ஆக-செய்யுள்-௩௯௨

காளிமுத்து

நெல்லைச்சொன்னபரணக்கைதக்கைம்மாவைநிதநிதமும்
வெல்லச்சொன்னவலர்க்கையங்குழந்தைவிசயநின்பாற்
செல்லச்சொன்னவென்னையிப்போதென்மைபலைத்தீர்க்கிடென்று
சொல்லச்சொன்னளாநதமின்னுள்பன்னுண்மலர்ச்சோலையிலே ௧

பழுத்தான்மரத்திற்பறவையைப்போலநற்பாவலர்க்குக்
கொழுத்தான்வழங்குங்குழந்தையென்கொங்கையைக்கூறுகிறால்
அழுத்தாதவேளையில்வெந்நீர்பன்னீர்மதியும்மழல்சேர்
கொழுத்தான்மதனுங்கொழுத்தானபருவக்குறிப்பரிந்தே ௨

பொன்னார்மருமத்தன்பூம்பாவைவேலப்பபூபனருள்
மன்னுகுழந்தைக்குருநாதநீதவரோதயனே
புன்னுண்மலர்க்குழற்பின்னுளென்னுளும்பரிந்தணைய
நன்னாளிந்நாள்வரச்சொன்னுண்மின்னுணமணநாளென்னவே ௩

மாகமழைக்கரன்பூம்பாவைவேலப்பன்மைந்தன்மின்னார்
மோகன்குழந்தைக்குருநாதன்வெற்பினின்மோடிவைத்துப்
பாகமொழிக்குழன்மாதேவிரித்துப்படமெடுக்கும்
நாகமறைத்துக்குழனமக்கீதனமல்லவே ௪

போதத்தைமேவுமயிலைக்குழந்தைக்குப்போர்மதன்செய்
கேதத்தையுங்குயினுதத்தையுந்தனக்கிண்ணத்தினு
மோதத்தையுந்துபிலாதத்தையும்மயன்மூட்டுதென்றல்
வாதத்தையுந்தரியாதத்தையுஞ்சொல்லிவாதத்தையே ௫

வண்டாங்கிசைபவின்மாலையன்வேலப்பன்மைந்தனிதி
கொண்டான்கிளையைவளர்த்தான்குழந்தைக்குவட்டின்மின்னே
பண்டாங்கிசையினண்மால்கொண்டுபாம்பன்குளத்தினடுக்
கண்டாங்கிலையைக்கிழித்தாலென்னபாவங்கருதுவதே ௬

பாம்பன், அரவாபரணன், நுதற்றினடுக்கண், நெற்றிக்கண்ணுகி,) அக்கினி, தாங்கி அவன், வாகனமாகிய ஆடு

வணங்கொங் களவஞ்சிபூஞ்சோலைசஞ்சிவளருமிரு
தனக்குன்றுசெய்யுந்தெமிழ்சொல்லமோதமியேனைக்கண்டாற்
சனக்கும்புளிக்கும்பாரிக்கும் பூரிக்குங்கண்கறுக்குஞ்
சினக்குந் தனக்குமையக்குமுண்டாக்குந்தினஞ்சண்டையே ௭

ஆகசெய்யுள், ௩௯௧

---

பாண்டியன்-கலித்துறை

சுரராஜசம்புரிவைரிபெண்மாதுசரீரமெல்லாம்
பொரராசரத்தாக்கினள்பொருட்டோபசுமபொற்கிரண
சுரராசதிவ்யகிரீடவிபாடத்துடித்தடக்கைப்
பரராஜராவணராமாபராக்கிரமபாண்டியனே ௧

காளைமுகிற்றலமெல்லாம்விலக்குகடிந்திட்டநீ
வேளையும்படிச்செய்திலேயேவிளைசெல்வயலில்
வாளைகுதித்துவளர்பூங்கமுகின்மடலொடியப்
பாளைமுறிக்குந்துறைவாபராக்ரமபாண்டியனே ௨

ஆர்க்குமைவிருநிலவுயர்கோனின்னலங்கல்பெரு
வார்க்குங்குமமுலையாட்கனலாகும்வடக்குந்தெற்கும்
மேற்குங்கிழக்குமொருவெளுப்பாய்நின்றுவிண்ணையெட்டிப்
பார்க்கும்புகழுக்கிறைவாபராக்ரமபாண்டியனே ௩

கூரம்பொறுததவிழியாள்சுதலிக்குருக்திவிட்ட
ஈரம்பொறுக்கவறிந்திலளேயிந்திரனிட்டசெம்பொன்
ஆரம்பொறுத்தபுயலேமீநிலாயிரநாவரக
பாரம்பொறுத்தபுயலேபராக்கிரமபாண்டியனே ௪

வெறிக்குங்குமக்கொங்கைமீதேயிளம்பிறைவெள்ளைநிலா
எறிக்குமடொழுதிவந்தாயிலேயேயிலங்காபுரியைக்
குறிக்கின்றராவணன்பொன்முடிப்பதுங்குரங்கைவிட்டுப்
பறிக்கின்றசண்டமாருதபராக்ரமபாண்டியனே ௫

சுரும்பேய்க்கும்வாடகண்ணிபங்காளர்கண்கொண்டுசுட்டுவிட்ட
பெரும்பேய்க்குவேப்பிலைக்காப்புதவாய்பிணர்சேர்பசுங்கோந்

கரும்பேய்க்குமென்முலையாரமுதூட்டியபார்ங்கொல்ல
வரும்பேய்க்குவாணுதவுங்குலசேகரமன்னவனே ௬

பூணித்திலத்துப்புயல்வீரமாறன்பகல்கவிக்கு
நாணிப்புலவர்சொல்லாதென்செய்வாரிந்நானிலத்தில்
ஆணிக்கனகமணங்கரிற்பூணமையார்கொள்ளுவார்
மாணிக்கந்தித்திக்கிலென்னுநற்றமதுரங்களை ௭

எண்ணீர்மைநூலுக்கத்தியனுமிவனென்பதெல்லாம்
வெண்ணீர்மையன்றிவிரகல்வகையிவ்வுலகிற்
பண்ணீர்மைதேருமபராக்கிரமமாறன்டதங்சமுழவுந்
தண்ணீர்குடித்தல்லவோகும்பயோனிதமிழ்கற்றதே ௮

காம்புவனம்புக்கதோளர்க்குநின்றன்கழுத்திலிட்ட
வேம்புதனக்கும்விதியில்லையோவெகுண்டாச்சியர்கள்
தாம்பினடிக்கவுரலோடுகட்டத்தடைப்பட்டுசசீப்
பாம்பினடிக்கின்றமாலேபராகரமபாண்டியனே ௯

சடந்தூங்குமேழுப்பிடர்க்கேவரக்கண்டுகண்கண்முத்து
வடந்தூங்கவாடும்கிளிக்கென்செய்வேன்மணிவாய்திறக்க
விடந்தூங்குபாம்பின்படத்தின்மிசைதிமிதித்தியெனப்
படந்தூங்கவாடும்புயலேபராக்ரமபாண்டியனே ௰

சடம்பழுக்குங்கிழட்டுக்குருகீர்தலைசாய்த்துநின்று
முடம்பழுக்குங்கைதைகற்றுறையிற்றெங்குமுப்புடைக்காய்
குடம்பழுக்குங்கொற்கையான்குலசேகரன்கூடலிலென்
உடம்பழுக்குஞ்சிறையும் பழிகாரநுணர்ந்திலரோ ௰௧

மற்றொப்பிலாக்கொடைச்சண்பகமாறவரோதயநின்
வெற்றிக்கிரண்டுண்டடங்காதகாரியமேருகிரிச்
சுற்றிலுங்கீர்த்தியடங்காதுநின்னுடைத்தோடமூவாக்
கற்றைக்குழலிக்கு மாலடங்காதிதுனே கண்டதே ௰௨

விருத்தம்

ஒருவானுதல்பண்டுளங்களிக்கவுயர்வான்முகடுகிழித்தெழுந்து
மருவாரகருவின்மாங்கொணர்ந்தமதுரைவடிவேலதிவீரா
அரவார்வேம்பின்பசுங்கண்ணியந்தியிறைக்கருளென்று
இரவாதிருக்கநீயளித்தற்கிரங்காதிருந்தாயிதுநாளே ௰௩

இரட்டையர்

கேங்குபுசழாங்கூர்சிவனையல்லாளியப்பா
நாங்கள்பசித்திருக்கைஞாயமோ-போங்காணும்

கூறுசங்குதோன்முரசுகொட்டோசையல்லாமற்
சோறுகண்டமூளியார்சொல் ௰௪

மூடர்முன்னேபாடன்மொழிந்தாலறிவரோ
ஆடெடுத்தென்புலியூரம்பலவர் ஆடகப்பொற்
செந்திருவைப்போலணங்கைச்சிங்காரித்தென்னபயன்
அந்தகனேநாயகனானால் ௰௫

வேயீன்றமுத்தர்தலைவெட்டினானேயிடையன்
தாயீன்றமேனிதயங்கவேபேயாகேள்
எத்தனைநாளென்றேயிடுவான்பாற்குடத்தை
அத்தனையும்வேண்டுமவர்க்கு ௰௬

மாங்காட்டுவேளாளன்மகளைமருமகன்பாற்
போங்காட்டியின்பம்புணர்ந்தானே ஆங்காணும்
மக்கண்மெய்தீண்டலுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ்செவிக்கு ௧௭

குன்றுங்குழியுங்குறுகிவழிநடப்ப
தென்றுவிடியுமெமக்கென்கோவே ஒன்றுங்
கொடாதானைக்கோவென்றுங்காவென்றுங்கூறில்
இடாதோநமக்கிவ்விடி ௧௮

காளமேகப்புலவரும் இரட்டையரும்

நாணென்றானஞ்சிருக்குநற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்றபாணமே-தாணுவே
சீராருர்மேவுஞ்சிவனேநீயெப்படியோ
நேரார்புரமெரித்தநேர் ௧௯

ஆசுகவியாலகிலவுலகெங்கும்
வீசுபுகழ்க்காளமேகமே-பூசுரா
விண்கொண்டசெந்தணலாய்வேகுதேயையையோ
மண்டின்றபாணமென்றவாய் ௨௰

கட்டளைக்கலித்துறை

புராதனமானதமிழ்ப்புலவீரிந்தப்புன்குரங்கு
மராமரம்விட்டிங்குவந்ததென்னோவகைகேட்டிலையோ
தராதலம்வென்றதமிழ்மாறனையுந்தன்றம்பியையும்
இராகவனென்றுமிலக்குவனென்றுமிருந்ததுவே ௨௧

ஆக செய்யுள் ௪௨௰

---

## ஒப்பிலாமணிப்புலவர்பாடிய அகவல்

ஆடெரிபடர்ந்தகோடுயாடுப்பில்
ஆம்பிபூப்பத்தேம்பசியுழல
இல்லிதூர்ந்தனபொல்லாவறுமுலை
சுவைதொறுஞ்சுவைதொறும்பால்காணாமற்
குழவிதாய்முகநோக்க
மனைவியென்முகநோக்கயாமும்
நின்முகநோக்கிவந்தனங்குமணா

### குமணராஜன்

அந்தநாள்வந்திலையருங்கவிப்புலவோய்
இந்தநாள்வந்துநீநொந்தெனையடைந்தாய்
தலைதனைக்கொடுபோய்த்தம்பிகைக்கொடுத்தான்
விலைதனைமீட்டுன்வெறுமைநோய்களையே ௨

மாங்கைதயிலேவாழுமகுடத்தியாகியுனக்
கேந்துதழும்போவிரண்டுளதே-வேந்தர்
முடித்தழும்புன்காலிலேமுத்தமிழோர்க்கீயும்
படித்தழும்புன்கையிலேபார் ௩

வெம்புங்காலைவெதும்பிவிழுஞ்சிரம்
செம்பொன்கோடிவிலையெனச்சிந்தித்தான்
உம்பர்நாடுமுலகினுந்தேடினும்
எம்பிபோலெமக்கியாவருரியரோ ௪

ஆறுபெருக்கற்றருந்திடர்தான்பட்டாலும்
ஊறலமையாதோஉலகாற்றத்-தேற
வறியையேயானாலுமென்கலியைமாற்றச்
சிறியையோசீர்க்குமணசெப்பு ௫

வில்லைவளையாதேமீசைமுறுக்கிச்சினத்து
முல்லைமலரம்பையென்மேமோதாதே-நில்லடா
வந்தாரடாமுருகர்வந்துசடப்பந்தாரைத்
தந்தாரடாமன்மதா ௬

செந்திற்குமாரன்றிருவழகைக்கண்டவுடன்
வந்திக்குமாரன்வதைக்கிறான்-அந்திக்கு

முன்னமேசென்றெதுமோகமெலாஞ்சொல்லிவந்தால்
அன்னமேகும்பிடுவேன்யான் எ

தங்கடனமிருக்கத்தார்வேந்தரெல்லோரும்
எங்கடனத்துக்கேயிச்சிப்பார்-எங்கடனம்
கச்சிருககும்பாலிருக்குங்காமபாணங்கள்பட்டுப்
பிச்சிருக்கும்வேண்டாம்பிளாய் அ

இடுவோர்சிறிதிங்கிரப்போர்பெரிது
கெடுவாய்நமனேகெவொய் படுபாவி
கூவத்துநாரணனைக்கொன்றாயேகற்பகப்பூங்
காவெட்டலாமோ கரிக்கு கூ

மையூருங்கண்ணார்மயங்கப்பொருகரும்பு
கையூருங்காமாவுன்கண்ணாணை செயயூர்
வளவனையினான்பிரிந்தவாறுனக்குச்சொன்ன
உளவனையினானென்றனா (வளவன்-நயினான்) ௰

ஆழிவாய்ச்சத்தமடங்காதோயான்வளர்த்த
கோழிவாய்மண்கூறுகொண்டதோ-ஊழி
திரண்டதோகங்குழினகரனுந்தேரும்
உருண்டதோபாதாளத்துள் ௰க

அரவங்கரந்ததோவச்சுமரமிற்றுப்
புரவிக்கயிறறுவிப்போச்சோ இரவிதான்
செத்தானோவில்லையோதீவினையோபாக்கியெனக்
கெத்தால்விடியுமிரா ௰உ

முலையுங்குழலுமுளைப்பதற்குமுன்னே
கலையும்வளையுங்கழன்றாள்-மலையில்
சிராப்பளியானேறிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பழியுங்கொள்ளாளிவள் ௰௩

பாண்டியன்றாராளேன்பசலைமுலைப்பாலானேன்
ஆண்டிகையிலேநதியதொன்றானேனே வேண்டியபோ
துள்ளவகைத்தேனானேனோர்மதலைபூத்தபின்
புள்ளங்கைத்தேனானுனக்கு கச

முட்டத்துப்பன்றிமுளரித்திருப்பதத்தைக்
கிட்டத்துப்பன்றிக்கிடந்தேனே-தொட்டு

மருங்கிலேசங்கெடுத்தமாலேயெனக்கு
வருங்கிலேசங்கெடுக்கவா ௰௫

மாதர்க்கிதங்கவிவாணர்க்குச்சாலவணக்கங்குரு
நாதர்க்குநீதியோடாசாரநண்பினயந்தார்க்குக்
கோதற்றவாசகம்பொய்க்குப்பொய்கோளுக்குக்கோளறிவி
லாதர்க்கிரட்டிப்பறிவுடையோர்செய்யுமாண்மைகளே ௰௬

குழற்காலாவிந்தங்கூம்பக்குமுதமுகையவிழ்ப்ப
நிழற்கான்மதியமன்றேநின்றிருக்குலநீயவன்றன்
அழற்காலவிர்சடைமீதேயிருந்துமவ்வர்திவண்ணன்
கழற்கால்வணங்குதியோவணங்காமுடிக்கைதவனே ௰௭

பாட்டானதைவண்டுபாடுங்குழற்சண்பகவல்லிதன்
ருட்டாமரையைத்தொழுதேனினியென்றலேயில்விதி
யிட்டான்கருமுகில்போலேவருமங்கச்சேட்டெருமை
மாட்டானினிவராமாட்டான்வந்தாலும்வணங்குவனே ௧௮

சீமானுநாமகள்கோமானுமேத்தித்தினம்பணிந்து
பூமாலேசாத்தியரத்னசபாபதிபொன்னடிக்குப்
பாமாலேசாத்திநின்றேனவனுன்மிகப்பாடுபட்ட
ஏமாவுன்னுலினியமாவென்பாலினியெய்துதற்கே ௧௯

தடங்கொண்டகல்வில்லின்மெல்லெனப்பூட்டித்தமதுரத்தில்
வடங்கொண்டசாத்திவிடங்கொண்டுபார்த்துமணிகிளரும்
படங்கொண்டபாம்பிற்பழகியபின்மலேப்பாவைதன்னே
இடங்கொண்டவொற்றித்தியாகேசர்புற்றினிடங்கொண்டதே ௨௰

விடங்காட்டிக்கண்டத்திற்றேலுரிகாட்டித்தன்வெய்யினைப்புற்
றிடங்காட்டிவாலேயொருபுறங்காட்டிவண்டேறுமலர்த்
தடங்காட்டியபொழிலாரூர்த்தியாகர்தமதுபொற்றுட்
படங்காட்டியாடிநின்றருலகேழும்பணியென்னவே ௨௧

புரந்தனேமாலேச்சதுராననத்தனேப்போகியையுமுப்
புரந்தானேச்சாதித்திமையாதநாட்டப்புலோமசைவாழ்
புரந்தனேமானுந்திருவொற்றியூரீன்பொன்மணிக்கோ
புரந்தனேக்கண்டனன்காணேனுதிக்கும்புரந்தனேயே ௨௨

வெண்பா

நல்லம்புலியணிந்தோனுளதனுக்கேட்டாநாள்
வில்லம்புடன்கூடிவிட்டாலும் வல்லி

இடையாளேமுன் னுலமேழுளந்தோன் மைந்தன்
குடையானதன்றேகொடிது (அம்புலியணிந்தோனுள் ஆதிரா) உ௩

எட்டாநாள் அத்தம்(கை)வில்-புருவம் அம்புகண்

வாழ்நிலைசேர்பொன் னுலகம்வண்களந்தைக்கோபுரத்தின்
ஏழ்நிலைமேறிடினுமேறலகம் பாழ்மனமே
அன்புன்னைக்காட்டவரனறிவதேபருமை
தென்புன்னைக்காட்டனடிசேர் உச

கஞ்சிகுடியாளேகம்பஞ்சோறுண்ணளே
வெஞ்சினங்களென் றும்விரும்பாளே நெஞ்சதனில்
அஞ்சுதலையாவாருக்காறுதலையாவாளே
கஞ்சமுககாமாட்சிகாண் உரு

சிகாரவிந்தபுயன்றென்னவன்றன்றிண்சிலம்பிற்
போதாலுங்கணனுலும்போர்செய்வோர்க்கோதும்
கொடியிடையார்தம்மாற்குணமாமோவிந்தத்
துடியிடையார்கொண்டதுயர் உசு

போதாற்போர்செய்வான் மன்மதன் கண்ணற்போர்செய்வான்பரமசிவன் இவர்கள்கொடிமீனம்-இடபம்-இவற்றிடையிலுள்ளதுமேஷம் ஆடு

அப்பிலேதோய்த்திட்டடுத்தடுத்துநாமதனைத்
தப்பினுைம்மையதுதப்பாதோ-இப்புவியில்
இக்கலிங்கம்போனலென்னேகலிங்கமாமதுரைச்
சொக்கலிங்கந்தானிருக்கச்சொல் உஎ

ஆக-செய்யுள்-சசசு

---

பட்டணத்துச்சுவாமிகள்

நாப்பிளக்கப்பொய்யுரைத்துநவநிதியந்தேடி
நலமொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவெழுகின்றபுற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப்புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவட்டுத்தொன்மரத்திற்காணுழைத்துக்கொண்டே
ஆப்பதனைப்பிடித்தசைத்தபேய்க்குரங்குபோல்
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீரோ



## சிவப்பிரகாசசுவாமிகள்

ஐயனின்சென்னிமிசையுறைகின்றமடமங்கையாரென்னவுமைவி
னவவும், அன்னதொரு மடமங்கை யன்றுவெண் டிரைகொழித் தெழு
கொழுகுதண் புனலெனச், துய்யவொளியானனங்கரியவிழிகா துலாய்
தோய்த்திலுண்டோவெனச், சொல்லருங்கமலமலர் காவிமலர்கொடி
வள்ளை தூயசெங்குமுதமென்னப், பொய்யெனகிளைத்துநற்கொங்கை
யுங்கூந்தலும்புனலினிடை யுண்டோவெனப், புற்புதஞ்சைவலமதெ
னவேமறுத்துப்புகன்றிடுதிங்காயெனத், தையலவளேயென்ன நா
ணெழவணங்கியென்றன் பிழைபொறுத்திடென்றே, சங்கானுளாத்தி
டத்திருவுளமகிழ்ந்தசிவசிசங்கரியுமைக்காக்கவே ௨

ஆனவனிடத்திலேயைங்கரன்வந்துதாயையவென் செவியமி
கவும், அறுமுகன்கிள்ளினனென்றே சிணுங்கிடவுமத்தன் வேலவனை
நோக்கி, வினாவுடன்வினவவேயண்ணனென்சென்னியில்விளங்கு க
ண்ணெண்ணினனென, வெம்பியும்பிள்ளையைப்பார்த்துநீயப்படிவி
கடமேன்செய்தாயென, மருவுமென் கைகநீளமுழமளந்தானென்னமயி
லவனைக்கத்துகிற்க, மலையரயனுக்கவவருமுமையவளை நோக்கிநின்மை
ந்தனைப்பாராயெனக், கருதரியகடலாடையுலகுபல வண்டங்கருப்ப
மாய்ப்பெற்றகன்னி, கணபதியையருகழைத்தகமகுழ்வு கொண்டன
ள்களிப்புடனுமைக்காக்கவே ௩

அம்பிகைபரன்றன்னை நோக்கியுன்னுடைபரணு மரவமெனவு மை
யைநோக்கி, அரியரவசயனத்தையரவுருவ மானத்தையறியார்கொல்
சிறிதுமென்ன, நம்பிமனைதொறுமிரந் துணுமாண்டிநீயென்ன நான்
றுதனறியேனென்ன, நாவுறும்பொய்புகன்றீரெனப்பாரதநடந்ததே
கரியாமென, வெம்பியொருவன்பிரம்பாலடித்தானென விளங்கிழை
பொருக்கிராம்பால், வீசினதுசொல்லென்ன வெண்ணுபிரம் பெண்
கண்மிகுநற்பைநீகேகிளையெனப், பாமபுநற்பினிலோரிரட்டிப்புநீக்கி
னதுபதருமனீக்களெனப், பாமருடனிவ்வாறுவிளையாடுபச்சைப் பசு
ங்கொடியுமைக்காக்கவே ௪

அச்சுதனளிப்பனிலமுமதுநேயன்வித்தையருளுவன்பலபத்திரன், அலமுதவுவன்சமன்பசுவனந்தமக்களதோவொருதுமுண்டே, முச்சிரவமிற்படையினைக்கொழுவதாக்குவோமொய்ம்பு னிழுச்திறுக்கமுந்தியவ க்கபிற்று ன் ற்றுநமதன்பர்முன் போயிரந்துகொள்வோம், இச்சையுடை நப தினை தனயனுகியகந்தனினிமையோடுமாடுமேய்ப்பன் இனியுழுதுபயிரிடுதனன்றுநன்றிதைவிட்டிரந்துண்பதினமெனவேகச்சுழுலைமா துமையுணர்த்திடும்புத்தியைச்சகக்கொண்டுளத்திலிதுநற, காரியமெனக்கருதிமெத்தக்களித்திடுங்கண்ணுதலுமைக்காக்கவே

கவரிகமலாயானிரந்தசோதிதுவெனக்கமலைமண்கண்டேனெனக், காளைபொன்றேயரற்கெனமாடுமேய்த்தகைக்கட்டிடையனுரோவெனக்' சிவனொருவர் தூதென்னவத்தா துசென்றகதைசெப்பிலொருயாரகமெனச் சேரோங்கிருடிஞனரனெனக்கட்டுண்டசெய்திநாமறிவோமென, அவையினடமாடிஞனரனென்னவவ்வாடலரவமறியாதோவென, ஆலமலைசயுண்டனன்னரனென்னமண்ணுண்டவதயறியோனோவென, விவாதொடுமலை மகளுமலர்மகளுமிவ்வாறுவிளையாடுமிவர்கடுணைபா, மேவிவருபுத்ரமித்ரகளத்திரருடன்மேன்மேன்மேலுமிகவாழியே, ௬

நிறையவுளதோவெளிதோகொளுவேம்
பிறையைமுடிக்கணிந்தபெம்மான்-உறையும்
திருக்காட்டுப்பள்ளிதிரிபவாய்நீயிங்
கிருக்காட்டுப்பள்ளி யெமக்கு (௭)

அடுத்துவருந்தொண்டனுக்காவந்தகநத்தாளால்
அ ர்த்துவுஞ்சத்தியமேயானல்- எடுத்தரொரு
பாங் னிக்காமவன்னைமடிபிடித்தமாபாவி
சாங னிக்கரிதிதன்வந்ததான் ௮

குடக்கோடுவானெயிறுகொண்டார்க்குக்கேழன்
முடக்கோடுமுன்னமணிவார்க்கு. வடக்கோடு
தேருடையான்றெவ்வுக்குத்தில்லைதோன்மேற்கொள்ளல்
ஊருடையானென்னுமுலகு?

விருத்தம்?

சேய்கொண்டாருங்கல்லச்செம்மலுடனையரவப்
பாய்கொண்டானும்பணியும்பட்டீச்சுரத்தானே
நோய்கொண்டாலுங்கொளலாநூறுவயதாமளவும்
பேய்கொண்டலுங்கொளலாமபெண்கொள்ளலாகாதே. (௯)

நிட்டை யிலேயிருந்து மனத்துறவடைந்த பெரியோர்கணிமலன்றுளைக். கிட்டை யிலெய்தி நித்து முத்திபெறுமளவும்பெரிய சுகங்கிடைக்குமகாம, வெட்டையி மல மதியயக்கிச்சிறுவருக்கு மணம்பேசிவிரு

ம்பித்தாலி, கட்டையிலேதொடுத்து நடுக்கட்டையிலேகிடத்துமட்டு கவலைதானே.

திருந்துதமிழலக்கணமைந்திணைக்கோவை விருத்தகிரிச்செல்வற்கோதும், பெருந்தகைமையுடையம் யாம்விடுமோலைவெங்கநார்ப்பிடாரிகாண்க, இரும்புவியிலொருமுருகனைக்கொம்பொடியாமற்காத்திங்கிருக்குநீநம், முருங்கைதனைவேரோடுங்களைந்தனையென்றாலுனக்குமுறைநன்றாமோ. (௧௨)

இவர்பிதா

கயல்வாய்த்தகண்ணியுலகீன்றவல்லிபங்காவுனது
செயல்வாய்த்தவம்பார்க்குமல்லாதவர்க்குஞ்சிறிப்பல்லவோ
இயல்வாய்த்தவென்னைதகப்பன்வாய்த்ததுவுங்கென்றெனக்கு
வயல்வாய்த்ததுமனைவாய்த்ததுமைந்தர்கள்வாய்த்ததுமே. (௧௩)

முன்னமொருதமிழ்ப்புலவன்றனையுண்டு கண்டசுவைமுதிர்ச்சியாலே தன்னியலைமுழுதுமுரைத் தமைய முன்னினைக்கவர்ந்துதடங்காளத்தி, மன்னவனுண்டானெனது மாதவத்தின் வல்லிரமண்ணிணமீதே, என்னுடன்வந்தவதரித்தவிளங்கன்றுணைப்பிரகாசனென்னுங்கோவே. (௧௪)

நானியென்பதைநாரியென்றுரைத்திடுசையா
வேணுவானதுவளைந்துபோய்புகுந்கதுவென்றாற்
காணலாவதோருருவமெய்ந்நாரியைக்கண்டால்
பூணுவார்மயல்காளையரென்பதுமபுதிதோ. (௧௫)
அல்லிமலர்ப்பண்ணவனுமாராய்ந்தறிகவிதை
சொல்லுமிருவரிடைத்தோன்றியயான் முல்லை
அரும்பிற்பொலியுமணிமுறுவனல்லாய்
கரும்பிற்கணுவிகர்த்தேன்காண். (௧௬)

வேலையசுவாமிகள்.

ஆண்டதனாலெனையொவ்வாய் வித்தையினிற்ற மயனினுமதிகமென்றே, பூண்டவுலகதனினுள் ளோர்புகல்வதுகேட்டிருந்துமென்னபுதுமைகாணோ? காண்டகுகண்மணியேநல்லிளங்கருணைப்பிரகாசக்காளாய்நீசான். மாண்டனையென்றறிந்திருந்துமுயிர்தரித்தேன்யானுமிகுவன்னெஞ்செனே. (௧௭)

சத்திமுத்தப்புலவர்,

நாராய்நாராய்செங்காணாராய்
பழம்படுபனையின்கிழங்குபிளந்தன்ன
பவளக்கூர்வாய்ச்செவ்ங்காணாராய்
நீயுநின்மனைவியுந்தென்றிசைக்குமரியாடி
வடதிசைக்கேகுவீராயின்
எம்மூர்ச்சத்திமுத்தவாவியுட்டங்கி

நனைசுவர்க்கூரைக்கனைகுரற்பல்லி
பாடுபார்த்திருக்குமெம்மனைவியைக்கண்டே
எங்கோன்மாறன்வழுதிகூடலில்
ஆடையின்றிவாடையின்மெலிந்து
கையதுகொண்டுமெய்யதுபொத்திக்
காலதுகொண்டுமேலதழீஇப்
பேழையுளிருக்கும்பாம்பெனவுயிர்க்கும்
ஏழையாளனைக்கண்டனமெனுமே. (௰௮)

வெறும்புற்கையுமரிதாங்கிள்ளைசோறுமென்வீட்டில்வரும்
எறும்புக்குமாற்பதமில்லைமுன்னாளென்னிருங்கலியாம்
குறும்பைத்தவிர்த்தகுடிதாங்கியைச்சென்றுகூடியபின்
தெறும்புற்கொள்யானைகவளங்கொள்ளாமற்றெவிட்டியதே. (௰௯)



வரதுங்கபாண்டியன்.

அஞ்சலென்றகரதலமுங்கணபணகங்கணமு
மரைக்கிசைந்தபுலியுடையுமம்புலிச்செஞ்சடையுங்
கஞ்சமலர்ச்சேவடியுங்கனைகழலுஞ்சிலம்புங்
கருணைபொழிதிருமுகமுங்கண்களொருமூன்று
நஞ்சையுண்டமணிமிடறுமுந்நூலுமார்பு
நலந்திகழ்வெண்ணீற்றொளியுமறிமானுமழுவும்
பஞ்சடிச்சிற்றிடையுமையாளொப்பனைபாகமுமாய்ப்
பால்வண்ணனுலத்திருக்கப்பயமுண்டோவெமக்கே (௨௰)

அவர்மனைவி.

ஆக்கையெனும்புழுக்குரம்பையனைந்தனையாப்பொருளை
யருளொளியைப்பராபரத்துக்கப்புறமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்குமிடமறவெங்கெங்கு
நிறைந்துநின்றமுழுமுதலைநினைவிலெழுஞ்சுடரைப்

பாக்கியங்கள்செய்தனந்தந்தவர்குறைகண்முடிக்கும்
பழவடியார்தமக்குதவும்பசுந்தணர்க்கற்பகத்தை
வாக்குமனவிகற்பத்காலளவுபடாவொன்றை
மாசற்றவெறுவெளியைமனவெளியிலடைப்பாம். (உ௧)

ஆ௧. செய்யுள்-௪௬௭.



பலபட்டடைச்சொக்கநாதப்புலவர்,

---

நின்றுபடியளக்குநீலக்கொடிகளிரண்
டென்றருளவாகுடந்தையீச்சுரனுக்?சொன்றுக்
குரைக்குமறையீந்தாரொன்றதனுக்கென்றே
வரைக்குமறையீந்தாரவர். (௧)

எடுத்தசனனங்கடொறுநின்றெடுத்ததாய்மார்
கொடுத்தமுலைப்பாலனைத்துங்கூட்டில்-அடுத்தமணிப்
பைந்நாகணைதுயின்மால்பாலாழியுஞ்சிறிதா
மன்னுசிதம்பரதேவா- (உ)

முக்கணனென்றாரைமுன்னோர்மொழிந்திடுவார்
அக்கண்ணற்குள்ளதரைக்கண்ணே-மிகக
உமையாள்கண்ணொன்றரைமற்றான்வேடன்கண்ணொன்
றமையுமிதனாலென்றறி. (௩)

பாணியிலேபுள்ளிமான்பாகத்தேபச்சைமான்
வேணிதனிலேயோர்வெள்ளமான்.காணுமலர்ச்
செம்மானுலவுந்திருமறைக்காட்டீசரே
எம்மானுக்கெங்கேயிடம், (௪)

கட்டளைக்கலித்துறை

வான்பணிந்தாலவனென்பேயுரைக்குமலரிலயன்
தான்பணிந்தாலவன்றன்றலையேசொல்லுந்தாரணியுண்

பான்பணிந்தாலவன்கண்ணேபரிந்துபரிந்துரைக்கும்
நான்பணிந்தாலெனக்கார்சொல்லுவார்சொக்கநாயகற்கே. (௫)

மெய்க்கையணியும்பணியேயென்பேமுடிமேற்கிடந்த
தொக்கேவெண்கூன்பிறையேயரைசேர்ந்தசொடும்புலியே
அக்கையுமக்குக்கிடைத்தவுபாயங்களாவொக்குஞ்
சொக்கேசர்பாதத்தைக்கிட்டுமுபாயத்தைச்சொல்லுங்களே. (௬)

தாண்டித்திரியும்விடையேறிபோடொன்றுதாங்கிப்பிச்சை
வேண்டிக்கலியுகசாலந்தள்ளாமல்விரும்பிச்சொக்கர்
ஆண்டித்தொழிலைவிட்டையோமதுரைக்காசிருந்து
பாண்டித்துரைத்தனஞ்செய்தேபிரம்படிபட்டனரே. (௭)

தணைபானநாரிபுவியையெல்லாம்பெருந்தொல்லைவடிக்
கணையானதுபுவியெல்லாமெடுத்துண்ணுங்கைச்சிலைகல்
லணையாகநின்றபுவியினைத்தாங்குமென்றாலினியான்
பணையார்களந்தைப்பதியார்செயலையென்பண்ணுவதே. (௮)

முன்னானைகூப்பிடவோடிவந்தானைமுளரிமலர்ப்
பொன்னானையேறியிருப்பானைப்பூழியன்கைச்சரும்பைத்
தின்னானையென்றுகல்லானைக்கிட்டானைத்திருமதுரை
மன்னானைவீதியிலேறிவந்தானைவணங்குதுமே. (௯)

நமக்கின்றொருவரநீர்தரவேண்டுநலந்திகழ்குங்
குமக்கொங்கைபாகத்துக்கொச்சையுள்ளீர்கொடுங்கோளரவிற்
கிமைக்கும்பிறையையளித்தாலதற்குமிரும்பசிபோ
முமக்குந்தலைச்சுமைபோமெங்கண்மானுமுயிர்பெறுமே, (௰)

ஆனையரித்துமதடனைப்போர்த்திட்டடியும்பாட்டு
மானபழிந்தக்கிரந்தெதிரிந்தமதுரைசொக்கர்
ஞானமிகப்பெற்றுவாழ்வெல்லாஞ்சொக்கநாயகியாள்
பானைபிடித்தமுகூர்த்தத்தினலவந்தபாக்கியமே (௰௧)

ஆய்முத்துட்பந்தரின்மெல்லணைமீதுன்னருகிருந்து
நீமுத்தந்தாவென்றவாகொஞ்சும்வேளையினித்தகித்தம்
வேய்முத்தரோடென்குறைகளெல்லாமெல்லமெல்லச்சொன்னால்
வாய்முத்தஞ்சிந்திவிடுமோநெல்வேலிவடிவன்னையே. (௰௨)

குதியானமனையுதைத்துள்ளங்காலினிற்கூனிமிர
மதியாகந்தேய்த்தவ்விலங்கேசன்மாமுடிபத்துநக
நதிபான்மிதித்துமுயலகன்மேனிநுறுங்கவின்னு
மிதியாநின்றாலருளெங்கேசொக்கேசர்தம்மெல்லடிக்கே. (௰௩)

மண்ணென்றமண்டலமெல்லாம்புரக்கும்வழுதிசற்றுந்
தண்ணென்றநெஞ்சந்தரித்திலனேதனுவேடனெச்சில்
உண்ணென்றபோதுண்டவர்சொக்கர்பாதியுடலம்பச்சைப்
பெண்ணென்றறிந்துமடித்தானெவ்வ றுபிரம்புகொண்டே. (௰௪)

ஆகத்திலேயொருபாதியென்னம்மைக்களித்தவடன்
பாகத்திலேபொன்றுகொண்டாயவண்மற்றைப்பாதியுமுன்
நேசத்திற்பாதியுஞ்சேர்ந்தாலிருவருண்டேசிவனே
ஏகத்திராமலிருப்பாய்களந்தையுமென்னெஞ்சுமே. (௰௫)

இன்றொக்கவேண்டிலெவ்வாறொக்குமோவெழில்சேர்களந்தைக்
குன்றொக்குங்கோபுரங்கோபுரமொக்குமக்கன்றதுபோல
அன்றொக்கவேண்டுமென்னல்வினைதீவினையாமிரண்டும்
என்றொக்குமோவினித்தென்களக்காடனையான்பெறவே. (௰௬)

மாதாம்படியுண்டுமெய்சிவந்தான்குழல்வைத்திசைத்துச்
சேதாம்பலங்கனிவாய்சிவந்தான்செம்மலர்த்திருவின்
சூதாந்தனந்தைத்துரஞ்சிவந்தானவர்தூதுசென்று
பாதாம்புயஞ்சிவந்தான்சிவந்தான்மல்லைப்பல்லவனே. (௰௭)

பாடுந்தமிழ்க்குச்சிவந்தெழுந்தான்மல்லைப்பல்லவர்கோன்
காடுஞ்செடியுந்திரியாதிரட்டைக்கடுக்கன்செய்து
போடும்பொழுதென்னபூட்டகமாவற்பப்புல்லனைக்கொண்
டாடும்பொழுதிருகன்னத்திலேநின்றடிக்கின்றதே. (௰௮)

கான்றெண்டனிட்டகனங்குழலாளையென்கண்மணியைத்
தேன்றொண்டைவாயச்சியைத் தென்கூடல்வாழ்சிறு பெண்பிள்ளை
யை, யான்றெண்டனிட்டபொழுதேயியம்மவெனக்குமடி
ஏன்றெண்டனிட்டவிண்ணப்பமென்றோலையெழுதுவனே (௰௯)

மற்றோரொருவனைக்கண்டதுண்டோசத்தியவாசகராய்
உற்றோர்கழஞ்சுவெண்ணெய்க்கீன்றதாய்க்கொருகோடிபொய்கள்
சொற்றோனுந்தாழைமலர்சாட்சியென்றுசொன்னோனுமல்லால்
கற்றோர்களவம்மின்கள்சென்மின்கள்பொம்மின்களந்தையிலே. (௨௰)

அண்டத்தமரருமாயனும்வேதனுமந்தணரும்
பண்டெத்தனைதவஞ்செய்தனரோமணப்பந்தலிலே
துண்டப்பிறையணிசொக்கர்கைத்தாலிக்குநீதுணிந்து
கண்டத்தைநீட்டினையேகூடல்வாழுங்கயற்கண்ணியே. (௨௧)

அற்பீன்றதாயென்றுனைப்பணிந்தாலென்னவதியெல்லாம
பொற்பீன்றபூஷணம்போற்றுதித்தாய்புகழ்க்கூடல்வாழ்
கற்பீன்றபட்டிக்கருமமேயுனக்குக்கன்னேனஞ்சதுதான்
வெற்பீன்றவாசனையேவுள்ளவாறுவிளம்பெனக்கே. (௨௨)

பேயல்லவோவொருவேளைவரந்தந்துபேசிநின்கல்
லாயல்லவோநின்மனங்கெட்டியானதுமற்புதந்தான்
நீயல்லவோமதுரேசர்பங்குறவணியெனக்குத்
தாயல்லவோபிள்ளைநானல்லவோசிவசாம்பவியே. (௨௩)

பண்டோகரியமறைபாடுங்கூடற்பசுங்கிளியைக்
கண்டோகினேனென்கவலையெல்லாம்பிணிக்காலன்றீண்டு
முண்டோதிவந்திடும்போதம்மைகோயின்முன்னேதிரியும்
குண்டோதரன்கண்டுகொண்டாற்றுலடதட்டிக்கொள்ளுவனே. (௨௪)

செகத்தாயெனவந்தசெள்ளமுதேதென்கைலையெனு
நகத்தார்பணியுங்கயற்கண்ணம்மேநின்னயனத்தினல்
மிகத்தான்கருநிறங்கொண்டமையாலும்விளங்குதிரு
முகத்தாமரைக்கொருவண்டானதுமுத்துமூக்குத்தியே. (௨௫)

செகமதின்மிக்கமதுரையின்மாணிக்கஞ்செட்டியதாய்
மிகமதிரத்தினம்விற்றசொக்கேசனைமேவியன்பாச்
சுகமதிதந்தெனையாள்கயற்கண்ணிநின்சுந்தரமா
முகமதியின்றகதிர்மணியோமுத்துமூக்குத்தியே. (௨௬)

பொன்னேமலையைத்துசனுகியபுயனின்றெரித்த
மின்னேயுனதுவதனத்தையேவெண்மதியமெனத்
தன்னேயச்தாலொருதாரகையானதுதான்விரும்பி
முன்னேகிடந்தினம்பார்க்கின்றதோமுத்துமூக்குத்தியே. (௨௭)

வடிகொண்டசெந்தமிழ்க்கூடலில்வாழ்சொக்கர்வந்திதரும்
பிடிகொண்டபிட்டுக்குமண்ணேசுமந்துபெருமகரக்
கொடிகொண்டவெற்றித்துரைப்பாண்டியன்கைக்கொடுபிரம்பால்
அடிகொண்டபோதிலடியாரவர்பொன்னடிகண்டதே. (௨௮)

அக்குவடம்புனையனந்தவெள்ளத்தையங்காற்கண்
பக்கத்திருந்தபவளாசலத்தைப்பழம்பொருளை
முக்கட்கனியைக்கடம்பாடவிக்கண்முளைத்தெழுந்த
சொக்கைக்கண்டாலன்றித்தீராதுநெஞ்சிற்றுயரங்களே. (௨௯)

பொன்போலுங்கூடற்பிராட்டியைச்சேவிக்கப்போம்பொழுதில்
என்பால்வரவுமெதிர்நின்றுபேசவுமென்றலைமேல்
தன்பாதஞ்சூடவுங்கேட்டதெல்லாந்தந்தருளவுமே
அன்பாகவந்திடுவாள்கல்காலமென்றஞ்சுவளே. (௩௰)

உரையேனுன்பேரையுரையேனின்சீரையுனைக்கருதிக்
கரையேனெவ்வாறுகடப்பேன்வினையைக்கடந்தகுண
வரையேயருட்பெருவாரிதியேமதுராபுரிக்குத்
திரையேயழகியசொக்கேதமிழ்தங்கசுந்தரமே. (௩௧

மூக்கட்பாரபரசொக்கப்பிரானெனுமுன்னவனே
டொக்கச்சிறந்தகயற்கண்ணிசந்நிதியுற்றுமிகச்
செக்கச்சிவந்தபொற்றாமரைப்பாததெரிசனைக்கே
பக்கடுத்தடுத்தவர்சொர்க்கத்தினையெட்டிப்பார்ப்பவரோ. (௩௨)
மட்டார்குழலங்கயற்கணம்மேயிம்மட்டென்றுதொகைக்
கெட்டாதெனதுதுயரநின்பாற்சொல்லியேசலிக்க
லொட்டாரநீசெய்யலாகாதுபாருன்னடிமைதன்னை
கட்டாற்றிர்கைவிட்டிடாதேபழிவெகுகாணிற்குமே. (௩௩)
விரித்தான்சடையைமகாமேருவாசுகிவில்லைவிட்டுச்
சிரித்தான்புரத்தையெரித்தான்பரகுருதேசிகன்முன்
உரித்தான்கரியையுடுத்தான்பகிரண்டத்துள்ளுலகும்
பரித்தான்மதுரைதரித்தான்சவுந்தரபாண்டியனே. (௩௪)
மைக்கார்குழற்பெண்வடிவாளைத்தென்னவன்மாமகளை
அக்காளையோன்பங்கிலாத்தானைமாறங்கையானவளைத்
திக்கார்தொழுங்கயற்கண்ணளையோர்தினஞ்சேவைசெய்தால்
எக்காலமுமவர்சொர்க்காதிபோகத்திருப்பவரே. (௩௫)
வண்டிட்டகூந்தலும்வாரிட்டகொங்கைவனாகளுஞ்சற்
கண்டிட்டசொல்லுங்கயற்கண்ணிபாகமுங்கைதொழுதேன்
தண்டிட்டடிக்குமறலிவந்தற்சன்னையிட்டுநகைத்
தண்டிட்டுவாசிறுபிள்ளாயென்றாருக்கனுப்புவனே. (௩௬)
பொன்னேபொருந்தற்புதமேபொலிந்தமென்பூந்திருவே
தென்னேசிறந்தசெந்தேனேதிருந்தருட்சின்மயமே
அன்னேயமுதேயருளேயமரர்க்கரும்பொருளே
மின்னேவியன்சுடரேமதுராபுரிமீனம்மையே. (௩௭)
தேட்டேதுமில்லைகொடுப்பாருமில்லைதிரத்துழவில்
பூட்டேருமில்லையிதெல்லாமெம்பாவிலைபூர்ணவரங்
கேட்டேனதற்குப்பிறிதில்லையேயினிக்கேட்கவுநான்
மாட்டேனுன்மேற்பழிபோட்டேன்மதுரைமனோன்மணியே. (௩௮)
உள்ளக்கவலையெலாம்விள்ளும்போதுமுனதுமனம்
எள்ளத்தனையிரங்காதிருந்தாயெளியேனினிமேல்
தள்ளப்புரத்தினிலென்றாலும்போவதுதானிலைப்பொன்
வள்ளத்தமுதுண்ணுங்கிள்ளாய்கடம்பவனவல்லியே. (௩௯)

எப்படியெப்படிசசொன்னாலுநானிரங்கேனெனவே
அப்படியப்படிநீயுருக்கின்றவதிசயத்தை
இப்படியிப்படியென்றுகிலுமெனக்கேதெரியச்
செப்படிசெப்படியயபாமதுரைச்சிவாநந்தியே. (சய)
செப்பத்திலுன்னைத்தொழவாயிரங்கண்ணுஞ்செல்லும்பொல்லேன்
தப்பத்தவறத்தொழுதாலுஞ்சொக்கர்தடம்புயத்துக்
கொப்பத்திரண்டகொங்காயுன்னவயவமொன்றுக்கொன்று
முப்பத்திரண்டுகண் வேண்டுங்கண்டாயென்முகத்தினுக்கே. (சக)
துடியார்காத்துமதுரேசரோடும்மைத்துள்ளியசேற்
கொடியானடித்ததுங்குற்றமன்றேகிழக்கோதையிவள்
அடியாளேன்றேசுட்டபிட்டையெல்லாமள்ளியள்ளித்தின்று
வடியாநதியிற்கரைத்துவிட்டீரவள்வல்வினையே. (சஉ)
கரஞ்சொன்னங்கண்டதென்னாளோதொடுத்தகலிக்கெளர்கள்
உரஞ்சொன்னதோவந்திருத்திவ்வேளையுதவுணக்கே
பரஞ்சொன்னெனின்னம்பராமுகமேதிதுபத்துலட்சம்
தரஞ்சொன்னதாயெண்ணுலாய்சிவகாமசவுந்திரியே. (சங)
ஒருபாதிமால்கொளமற்றொருபாதியுமையவள்சொண்
டிருபாதியாலுமிறந்தான்புராரியிருநதியோ
பெருவாரிதியிற்பிறைவானிற்சர்ப்பம்பிலத்திற்கற்ப
தருவானபோஜகொடையுன்கையோடென்கைதந்தனனே. (சச)

பாலனைப்பழிகதல்.

அரும்பாலகாமுனம்மூமனஞ்சொற்பொருளாகமுயிர்
கரும்பாஞ்சுவையெள்ளுமெண்ணெயும்போலொத்தகாலனைப்
பெரும்பாலினல்லன்னங்கங்காசலத்தைப்பிரிப்பதுபோல்
சுரும்பாம்புலவர்யமனுலேசெக்கெனத்தோன்றினையே. (சரு)
அரும்பாக்கியகொங்கைபலாக்கீயுமுங்களப்பனெஞ்சை
இரும்பாக்கியென்னெஞ்சைப்பித்தளையாக்கியவ்வேர்திழையைக்
கரும்பாக்கியென்னையும்வேம்பாக்கியிவ்வண்ணங்கண்டனையே
பெரும்பாக்கியமல்லவோமகனேயுனைப்பெற்றதுவே. (சசு)

கல்விமேற்பிரிதல்.

விண்ணுக்குமாமதிகாயவெங்காமவெரிகொளுந்தப்
பண்ணுக்குமாமொழிமாதங்கமாம்பஞ்சபூதியம்போம்
கண்ணுக்குமுக்குச்செவியாக்கையற்றகடத்திலங்கம்
பெண்ணுக்குவார்த்தைப்போலோதிவரும்பிரிபவரோ. (சஎ)

உனக்கின்றியான்செய்தகுற்றமொன்றில்லையுனைப்பிரிந்தால்
வனக்குன்றிலேறிவிழவறியேன்வண்மைசேர்மையிலே
எனக்கென்றுவட்டமிட்டண்ணாந்துவிம்மியிருக்குமுன்றன்
தனக்குன்றிலேறிவிழுவேனின்னல்குற்றடாகத்திலே. (சஅ)

சுண்ணம்புதீட்டநல்லாள்காட்டமோதிரஞ்சூட்டமலர்க்
கண்ணாக்கூட்டவிரானன்கிருக்கக்கதிர்க்கம்பிபோல்
எண்ணாநடுவிரற்கேதாமுலோபருக்கேதுகண்டாய்
கண்ணார்நுதலண்ணல்சேய்வணிகாசெந்தில்காத்தவனே. (சகூ)

கிணம்போதத்தள்ளிப்பெரும்பூகம்போலப்பின்னேற்றுசெத்த
பிணம்போற்கிடந்துபுரளுவர்காண்பிறர்க்கீட்டிவைத்த
பணம்போனபின்புவிவேகமுண்டாகுமப்பஞ்சைகள்வங்
கணம்போதும்போதுங்கறுப்பாதென்மாவைபிற்காவலனே. (ருo)

ஏவைக்குக்கூன்சிலைதொட்டானனங்கனிருவிசூம்பில்
தீவைக்குந்திங்கட்குடையெடுத்தான்றென்றாறேருகைத்தான்
காவைக்குங்கண்வணிகஸ்தூரியின்றகறுப்பன்வரை
மாவைக்கும்பாவைக்கும்பூவைக்கும்போதுவடுவைக்குமே. (ருக)

பொன்னகத்தார்பணிமாயோன்கரக்கைப்பொருப்பில்வரும்
மின்னுண்முகங்கண்டனஞ்சாபல்போற்பெறவேண்டியன்றோ
வந்நாட்கமலமலர்கடன்மேருவணிமயிலும்
தன்னுலயனரிசங்கரன்வேலனைத்தாங்கியதே. (ருஉ)

குண்டைக்கொருத்தனைக்கூத்தாடும்பித்தனைக்குண்டுணியைக
கண்டக்கருப்பனைப்பிள்ளையைத்தின்னியைக்காணவயன்
மண்டைக்கரத்தனைக்கண்ணப்பனெச்சிலைவாரியுண்ட
பண்டைப்பனையனையோதேவனென்றுபகருவதே. (ருங)

அந்தக்கரும்பள்ளிபாசாங்குசத்திகண்ணம்படைச்சி
நைந்தவிடச்சிகுறத்திக்குமாமிநவில்வலைச்சி
சந்தம்புமுக்கச்சிபாம்பணையோனுக்குத்தங்கச்சியாம்
இந்தப்பரச்சியையோசிவகாமியென்றேத்துவதே. (ருச)

நிலமேழளக்கநெடுமால்பணியுநிமலர்பொன்னம்
பலமேவுதில்லைப்பதிநடராயர்பனிவரையில்
கலமேதிமிங்கலமேசங்கமேநற்கயலினமே
சலமேசஞ்சலமேயென்றுதீருமென்சஞ்சலமே. (ருரு)

பொரடக்கயம்பிடியென்றான்மதனுமிப்பூவையுமா
தரடக்கமுஞ்சற்றறிந்தலளேமலர்த்தாள்வணங்கா
முரடக்கவுடக்கெடிமன்னர்வெற்றிமுடிபிடுங்குங்
கரடக்களிற்றண்ணலேவல்லைமாநகர்க்காளத்தியே. (ருசு)

கரியாகுமாதினைப்பெற்றேன்புலவன்சுற்றேனனையாம்
செவியாரக்கேட்டங்குணர்வான்சகோதரன்செந்தமிழ்க்கு
தவியாவநுமையறிவான்பதியவன்றானிலையேல்
புவியாகுமண்ணுக்குளென்பலமாமந்தப்பூங்கொடிக்கே. (ருஎ)

சேராதவேடன்செருப்பாலடிக்கவுந்தீண்டவுந்தன்
நீர்வாயுமிழவுமுச்சிட்டம்போடவுநீண்டசிலைத்
தாராலடிக்கவுங்கண்ணீர்ததும்பவும்தாய்தமர்கள்
ஆராகிலுமில்லையோதிருக்காளத்தியப்பனுக்கே. (சஅ)

ஓட்டாதவொட்டியுங்காற்பொன்னின்மாப்பொன்னுபாயமதாத்
தெட்டாதிரன்பணிசெய்யாதிரான்செம்பொன்மேருவினைக்
கட்டாகக்கட்டிக்கடுகளவாநிறைகாட்டவல்ல
தட்டானுக்கஞ்சியல்லோவணிந்தான்சிவன்சர்ப்பத்தையே. (ருசு)

ஏராட்டும்பூந்தொங்கன்மோகனக்காரற்கினியசுகம்
பாராட்டநானினியாளல்லவேபசுமென்குழவி
தாராட்டவுஞ்சங்கிற்பால்பிள்ளைக்கூட்டித்தடவுமஞ்சள்
நீராட்டமையிடப்போமேயெனக்குள்ளநேரமுமே. (சுய)

விருத்தம்.

மட்டாருங்கென்களந்தைப்படிக்காசனுரைத்தமிழ்வரைந்தவேட்டைப், பட்டாலேசூழ்ந்தாலு மூவுலகும்பரிமளிக்கும்பரிந்தவேட்டைத், தொட்டாலுங்கைம்மணக்குஞ் சொன்னாலும்வாம்மணக்குந்துய்யசேற்றில், நட்டாலுந்தமிழ்ப்பயிராய் விளைந்திடுமேபாட்டினிடங்ளினெந்தானே. (சுக)

வெண்பா.

ஆலெங்கேயங்கேயரும்பறவையாற்றுயிலும்
மாலெங்கேயங்கேமலர்மடந்தை-கோலஞ்சேர்
செங்கேதகைமணக்குஞ்செங்குன்றையூரனெங்கே
ஆங்கேயிரவலரெல்லாம். (சுஉ)

ஊரைச்சுடுமோவுலகந்தனைச்சுடுமோ
ஆரைச்சுடுமோவறியேனே-நேரே
பொருப்புவட்டமானமுலைப்பூவையரேயிந்த
நெருப்புவட்டமானநிலா (சுங)

நற்றேரணவீதிநண்ணும்வல்லைக்காளத்தி
கற்றோர்தமக்களிக்குங்கைய்யகை-மற்றோர்கை

வேங்கையலகைமுகவேட்கைவளைகநகை
காங்கையழுழைவிழுநகை. (௬௪)
போசநீபோர்புபலாப்பூமுழுதும்பொன்மாரி
வீசுவாயங்கதிலோர்விநமேதனும்பேசமென்மேல்
பட்டதில்லையென்வறுமைபாரக்குடையாகி
முட்டக்கவித்திடுதலால். (௬௫)
காலையிரவிந்தக்கழுநீருடன்கலந்தால்
மாலைபரவிந்தமயககாதோ-பாலைப்
பழிக்கின்றமென்முலையீர்பாண்டியனூருணை
அழிக்கின்றதென்னேவது. (௬௬)

பாண்டியனூர-கூடல்-அது-புணர்ச்சி.
ஆக-செய்யுள்-௩௱௬௬.



பொய்யாமொழிப்புலவர்.

வாய்த்தவியரபுரமாகாளியம்மையே
ஆய்த்தமணலில்லணிவனையிற்-சாய்த்த
கதிரைமாளத்தின்னுங்காளிங்கனேனுங்
குதிரைமாளக்கொண்டுபோ. (௧)

இவருபாத்தியாயர்.

பொதியிலகத்தியனைப்பொய்யாமொழியாய்ச்
சிதைவில்புலவர்சிகாமணியாய்த்-திதிசேருஞ்
செங்காட்டங்கோட்டத்துறையூரொணுங்கலத்தில்
தங்காட்டங்கொண்டிருப்பாய்தான். (௨)

வாழிசோழவென்வாய்மொழிகேண்மோ
ஊழிகிலவெறிமாளிகைவயின்வயிற்
கட்டிளங்கணவன்கவின்பெறுசேக்கை
என்றறிமனைவிகெடிதுதுயில்கௌச்

பொய்யாமொழிப்புலவர்பாடிய

செல்லக்கிடமினெனக்கிடந்தருகெனச்
சொல்லியநண்பன்றனிச்செல்பவனே
நானுமேகுவனற்றுனையவற்கே. (௩)

வெண்பா.

அன்றுநீசெல்லக்கிடமென்றுரையாயினழையோ
டின்றுநீவானுலகமேறினுய்-மன்றல்கமழ்
மானைக்கும்வேல்விழியார்மாரனேகண்டியூர்ச்
சீனக்காசெல்லக்கிட. (௪)

பூவேங்காமுன்போற்புரப்பாரிலையெனினும்
பாவேங்கருண்டென்னும்பான்மையாற்-கோவேந்தன்
மாறனறிமதுராபுரிகதமிழோர்
வீறணையேசற்றேமித. (௫)

உங்களிலேயானொருவனெவ்வுவனேவொவ்வேனே
திங்கட்குலனறியச்செப்புங்கள்-சங்கித்தீர்
பாடுகின்றமுத்தமிழ்க்கென்பைந்தமிழுமொக்குமோ
ஏடெழுகாரேழெழுவீரின்று. (௬)

பொன்போலுங்கள்ளிப்பொறிபறக்குங்கானலிலே
என்பேதைசெல்லற்கியைந்தனளே-மின்போலும்
மானவேன்முட்டைக்குமாறுயதெவ்வர்போங்
கானவேன்முட்டைக்குங்காடு. (௭)

முருகக்கடவுள்.

வீழுந்ததுளியந்தரத்தேவேமென்றும்வீழின்
எழுந்துசுடர்சுடுமென்றேங்கிச்-செழுங்கொண்டல்
பொய்யாதகானகத்திற்பெய்வளையுஞ்சென்றனளே
பொய்யாமொழிப்பகைஞர்போல் (௮)

ஔவையார்.

ஐம்பொருளுநாற்பொருளுமுப்பொருளும்பெய்தமைத்த
செம்பொருளையெம்மறைக்குஞ்சேட்பொருளைத்-தண்குருகூர்ச்
சேய்மொழியதென்பர்சிலரியானிவ்வுலகில்
தாய்மொழியதென்பேன்றகைந்து. (௯)

சேய்மொழியோதாய்மொழியோசெப்பிலிரண்டுமொன்றே
வாய்மொழியையாருமறையென்பர் வாய்மொழிபோல்
ஆய்மொழிகள்சாலவுளவெனினும.ம்மொழியுஞ்
தாய்மொழியவென்பேன்றகைந்து (௰)

மதுரைச்சொக்கநாதர்

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇயநட்பின்
மயிலியற்
செறியெயிற்றரிவைகூந்தலின்
நறியவுமுளவோநீயறியும்பூவே. (௯க)

அகவல்.

மதிமலிபுரிசைமாடக்கூடற்
பதிமிசைநிலவும்பானிறவரிச்சிற
கன்னம்பயில்பொழிலாலவாயின்
மன்னியசிவன்யான்மொழிந்திடுமாற்றம்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
கொருமையினுரிமையினுதவியணிதிகழ்
குருமாமணிதிகழ்குலவியகுடைக்கீழ்ச்
செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில்பாணபத்திரன்
தன்போலென்பாலன்பன்றன்பால்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே. (௯உ)

அங்கம்வளர்க்கவரிவாளினெய்தடவிப்
பங்கப்படவிரண்டுகால்பரப்பிச்-சங்கதனைக்
கீர்கீரெனவறுக்குங்கீரனோவென்கவியைப்
பாரிற்பழுதென்பவன். (௯ங)

நக்கீரர்.

சங்கறுப்பதெங்கள்குலஞ்சங்கரர்க்கங்கேதுகுலம்
பங்கமுறச்சொன்னாற்பழுதாமோ-சங்கை
அரிந்துண்டுவாழ்வோமரனாரைப்போல
இரந்துண்டுவாழ்வதில்லை. (௯ச)

திருஞானசம்பந்தமூர்த்தி.

கடியுண்டநெடுவாளைகராவிற்றப்பிக்
சயத்துக்குளடங்காமல்விசும்பிற்பாய
அடியுண்டவுயர்தெங்கின்பழந்தாற்பூகம்
அலையுண்டுகுலைசிதறுமாவிநாடா
படியுண்டபெருமானைப்பறித்துப்பாடிப்

பதம்பெற்றபெருமானேதமியேன்பெற்ற
கொடியொன்றுநின்பவனிக்கெதிரேசென்று
கும்பிட்டாளுயிரொன்றுங்கொடுவந்தாளே. (௰௫)

திருமங்கையாழ்வார்

வருக்கைநறுங்கனிசிதறிச்செந்தேன்பொங்கி
மடுக்கரையிற்குளக்கரையின் மதகிலோடப்
பெருக்கெடுத்துவண்டோலஞ்செய்யுங்காழிப்
பிள்ளையார்சம்பந்தப்பெருமாள்கேளீர்
அருட்குலவுமயிலைதனிலனலால்வெந்த
அங்கத்தைப்பூம்பாவையாக்கினோமென்
றிருக்குமதுதகவன்றுகலவால்வெந்த
இவளையுமோர்பெண்ணாக்கலியல்புதானே. (௰௬)

சேமங்குருகையோசெய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசனோநாரணனோ-தாமம்
துளவோகுளமோதோளிரண்டோநான்கோ
உளவோபெருமானுனக்கு. (௰௭)

சங்கத்தார் அகவல்.

காலைஞாயிறு கடுங்கதிர்பரப்பி
வேலையுங்குளனும் வெடிபடச்சுவறித்
தந்தைதாய்மக்கள் முகம்பாராமல்
வெந்தசாகமும் வெவ்வேறருந்திக்
குணமுடனுணுங் கொடுத்துறவாண்ட
கணவனைமகளிர் கண்பாராமற்
பழுத்தவுடலம் பசையறவற்றி
விழித்தவிழியெலாம் வேற்றதுவிழியா (௰௮)
அறவுரையன்றி மறவுரைபெருகி
உறவறமொழிந்த வூழிகாலத்தில்
தாயிலார்க்குத் தாயேயாகியும்
தந்தையிலார்க்குத் தந்தையேயாகியும்
இந்தமாநிலத் திடுக்கண்டீர
வந்துதோன்றிய மாதிதிக்கிழவன்
நீலஞ்சேரி நெடுமாலொருவன்
ஆலஞ்செறியி னன்றசடையன்

பிறந்தும்பிறர் கேடுசினையான்
பிறர்பொருள் வவ்வான்
மறந்தும்போகான் வாய்மையுக்குன்றான்
இறந்துபோகா தெம்மையுங்காத்தான்
வருந்தல்வேண்டாம் வழுதி
இருந்தனமிருந்தன மிடர்கெடுத்தனனே ௰சு

திருமழிசையார்

கணிகண்ணன்போவென்றான் காமருபூங்கச்சி
மணிவண்ணாநீயிங்கிராதே துணிவுடனே
செந்நாப்புலவன்யான்செல்கின்றேனீயுமுன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள் உ௰

ஆக-செய்யுள்-௩௩௩



சொக்கநாதப்புலவர்

விருத்தம்

சீர்கறுத்தமுகிற்கரத்தான்கஸ்தூரிபூபனருள்சேயாவென்று
மோர்கறுப்புமில்லாததொண்டைவளநாட்டிருக்குமுசிதவேளே
ஆர்கறுப்பனென்றுசொல்லியழைத்தாலுநாமுன்னையன்பினாலே
பேர்கறுப்பனிறஞ்சிவப்பன்கீர்த்தியினால் வெளுப்பனெனப்பேசுவோ

பிள்ளைவயதினிற்கல்விகற்றோம்பின்பு மே
பெரியநாகைனகனமும்பெற்றோம்பூமி
உள்ளளவுங்கீர்த்திநிலைநிறுத்திக்கொண்டோம்
ஒருகுறையுமில்லையினியுனைப்பக்கேண்மோ
தெள்ளிலகுசிதம்பரத்தைத்தெரிசித்தோமபின்
சேர்கருங்கட்டைளவநகைத்தெய்வயானை

௰க

வள்ளிபுணர்சிவப்பனையுந் துதித்தோமெங்கள்
மாவைவளர் கறுப்பவுன்னைவாழ்த்தினோமே ௨

எல்லப்பனம்மையப்பன் றருதிருவேங்கடராமனெழிற்சீராமன்
வல்லக்கொண்டமனுடனேமாதைவெங்கடேசனைப்போல்வரிசைத்த
ந்தான், செல்லத்தம்பியருடனேமாவையில்வாழ் கறுப்பண்ணன்றெ
ருவீதிக்கே, பல்லக்குத்தான்சுமந்தானதுநமக்கோராயிரம்பொன் பரி
சுதானே ௩

மெய்யிலேயொருபாதியுமைக்களித்தசெங்காட்டுவிமலனாரே, மை
யிலேதோய்ந்தவிழிச்சந்தனமான்றலைக்கறியைவளமாயாவி, நெய்யிலே
தான்சமைத்துக்கொடுத்திருந்தும்படைத்திருந்துநீர்தானின்று, கையி
லேமழுவெடுத்ததாற்பொய்யாமோபிள்ளைகொன்றகளவுதானே ௪

துப்பனாயுமரகதத்தின்கொழுந்தனாயுமொன்றாகத்துலங்குமெ
ய்யா, செப்பரியபுலியதளைத்தரிக்குமுக்காபதியிற் சிவனேநீதான்
அப்பனாயும்விழுங்கியொருபிள்ளையுந்தின்றுற்று மலையோவின்னுங்
கப்பனாயுங்கைமாய்ப்புறப்பட்டாய்நல்லதிருக்காட்சிதானே ௫

அடிபட்டீர்கல்லாலுமெறிபட்டீரத்தனைக்கு மாளாயந்தப், படி
பட்டும்போதாமலுதைபட்டீரிப்படியும் படுவாருண்டோ, முடிபட்ட
சடையுடையீர்கழுக்குன்றீர்முதற்கோணன் முட்டக்கோண, லிடிப
ட்டும்பொறுத்திருந்தீர்சிவசிவாவுமைத்தெய்வமென்னலாமே ௬

செல்லாரும்பொழில்புடைசூழ் புலியூரம் பலவாணதேவாவும
ணமக், கல்லாலும்வில்லாலுஞ்செருப்பாலும்பிரம்பாலுங் கடிந்துசா
டும், எல்லாருநல்லவரொன்றெண்ணியருளீந்ததென்னவிகழ்ச்சியோன்
றுஞ், சொல்லாமன்மலரால் விட்டெறிந்தவனைக் காய்ந்ததென்னசொ
ல்லுவீரோ ௭

நல்லாளையிடமருவுந்தியாகையாவுமதிட்டத்தி னியாயங்காணோம்
கல்லாலேயெறிந்தோர்க்குஞ் செருப்படியாலுதைத்தோர்க்குங்கடிந்
துபோரில், வில்லாலேயடித்தோர்க்குங்கொடுத்தீரேயல்லாமல் விழி
நீர்சோர, எல்லாமுன்செயலென்றேயிருப்போருக்கியாதேனுமீகிலீ
ரே. ௮

பண்காணுந்தமிழ்ப்புலவிரினத்தோடே யிணைஞ்சேரும் பரிசே
போலத், தண்காவிமலர்த்தடஞ்சூழ்காவிரிநாட்டொரு புதுமைசாற்ற
க்கேளீர், கண்காணநரையான்மேல்வெண்காடை வீற்றிருக்க கண்
டோமந்த, வெண்காடையிடப்புறத்தேபச்சையன்னங் கலந் திருக்கு
ம்விதங்கண்டோமே ௯

இந்திரன்கலையாயென்மருங்கிருந்ஞானக்கினி யதாம் விட்டகலான்
எமனென்னைக்கருதா னரனெனக்கருதி நிருதிவாதென்னை யென்செய்
வான், அந்தமாமவருணனிருகண்விட்டகலானகத்தினின்மக்களும்யா
னும், அநிலமதாகுமமுதினைக்கொள்வோம் யாரொதிரெமக்குளாருலகி
ற, சந்தத்தமிழ்தவரிசையயபெற்றுத்தரித்திராஜனை வணங்கித்தலை

செயுமெய்ம்மைநிலைசெய்சற்கீர்த்திச்சாளுவகோப்பையனுதவும் மர்ரபுயத்தான்ரிப்பையராயன் மகிழ்வொடுவிலையிலாவன்னேன், வாக்கினுற்குபேரனுக்கினனவனேமாசிலீசானபூபதியே. (௰)

வண்டுகிண்டியசொக்கலை திருணக்கெழுந்திடு மனிலமோ
மன்னுநூபுரமோயயோதரமூருவானவர்கணிகைபோ
அண்டர்பூபதிவனிதையோமுகமமுதவாயிதழ்தும்பியோ
அரிகையாயுதமோபிறந்திடமன்னமென்னவுலாவுவீர்
கொண்டநண்புமுதாரமுந்தவருதகோகனகானனன்
குத்திபல்லவராயமேருகுளத்திப்பையன்வரையின்மேல்
துண்டவெண்பிறைவேணிகச்சிலைநரனெனப்புகலாவிடின்
தூரமோவதிபாரமோவொருசேரனுக்கொருதொங்கலே, ௧௰

(குணக்கெழுந்திடு மனிலம்-கீழ்காற்று-கொண்டால்-மேகம்-ஓதி (நூபுரம்- சிலம்பு மலை கொங்கை) வானவர்கணிகை-அரம்பை- வாழை-தொண்டை.) அண்டர்பூபதிவ்னிதை சசி-சந்திரன்,முகம்.) (தும்பி வண்டு, தேன், இதழ். அரிகையாயுதம் , ஆழி, திருப்பாற்கடல். (துண்டவெண்பிறைசூடிகைச்சிலைநாண், ஆதிசேடன், வாசுகி வா-சுகி, என்னுவிடின்.) (சேரன்தொங்கல்,பனை ) (மடலேறுவேனென்பது, கருத்து.)

சந்திரனுக்குடலூனந்த னதனுக்கோர்கண்ணூனந்தருவினிழல்
இந்திரற்கோபக க்குறியாமியமனுக்கோபுழுக்காலாமிரவியீன்ற
மைந்தனுக்கோ கான்முடமா ம்வனசனுக்கோர்தலைகுறையாய்வாழ்வராயின், பந்தமூளமானிடரைவி திவிடுமோவரலவாய்ப்பதியுளானே.



கட்டளைக்கலித்துறை.

அட்டாவதான முத்தொல்காப்பியமுமகப்பொருளும்
தொட்டாதிதொட்டப்பரபந்த மெல்ல நம்மைச்சொல்லச்சொல்லி
ஒட்டாரங்கட்டி நம்பல்லக்குக்கொம்பையொடித்தெறிந்த
தட்டாரப்பையலரி கரபுத்ரனைச்சண்ணினனே. ௰௩

பண்டனைப்பண்டனை யோதுபெம்மானைப்பனிவரைக்கோ
தண்டனைத்தண்டனைசெய்யுமு த்தண்டனைத்தண்டனைமு
தண்டனையண்டர்தொழுந்திருயாற் பேறமர்ந்தமணி
கண்டனைக்கண்டனையாயி னஞ்சேமுத்திகண்டனையே. ௰௪

துளைபடுமாம ரமோரேழுமெய்கவன்றா துகவி
உளைபடுவாரிதியொன்றேகடந்ததொளிர்தாள
வளைபடுவாவிமணவைம ன்கூத்தன்வகுத்தகவி
தளைபடுகாலுடனேகடலேழையுந்தாண்டினதே. ௰௫

துங்காதராதலமெங்குமொருமிக்கத்துய்த்தார
சிங்காத ராதரந்தானறிந்தேனல்கச்சேலம்வந்த
கெங்காதரா நின்புகழ்கே ட்டசைப்பன்கிரீடமென்றே
வெங்காதராவுக்குச்செய்தானிலைமலர்வேதத்தனே. ௰௬

புரசைவடமலையப்பாவிருட்கயம்பூண்டுகொண்டு
முரசைவடமலையப்பாலுஞ்செல்ல முழக்கஞ்செய்தோய்
சிரசைவடமலையப்பாம்பின்வைத்துத திருக்கண்வளர்
இரசைவடமலையப்பாவிப்பாருக்கொரிந்திரனே. ௰௭

சோதிச்சவ்ரிவிழிக்கோகரவில்லைதூயகுழல்
கோதிச்சவரிமுடிக்கரியாள்கொண்ட கோலமென்றே
நீதிச்சுவரிப்பெருமாளென்றே திகினைந்தருகப்
போதிச்சவரிவட்காரேவறிகிலன்பூங்கொடியே. ௰௮

சொல்லுக்கினியகழுக்குன்றரேயுமைச்சொல்லவென்றால்
அல்லற்பிழைப்புப்பிழைத்துவிட்டீர்முப்புராதியர்மேல்
வில்லைக்குனித்தெய்யமாட்டாகனிரந்தவேளைதனிற்
பல்லைக்கிறந்துவிட்டீரிதுவோதும்படைத்தொழிலே. ௰௯

துயிலையிலேயிடர்துன்னையிலேதெவ்வர்சூழையிலே
பயிலைபிலேயிருட்பாதியிலேபசும்பாலனத்தை
அயிலையிலேவயதாசையிலேநமக்கார்துணைதான்
மயிலையிலேவளர்சிங்கா வேலர்மயிலையிலே ௨௰

போதாசிவகுருநாதாகலவைபுழுகொடுசவ்
வாதார்ந்தகெங்கைக்குரமறதுவள்ளிக்குவாய்த்திடுமின்
பாதாருகற்செற்றவேல்விடுத்தாலென்பகையையறுக்
காதாமனமிரங்காதாசிவகிரிக்காங்கேயனே. ௨௧

காப்பிட்டபிள்ளைக்கறிக்கிச்சைபட்டுகைவையச்சுகரைமேன்
மாப்பிடுவந்தமயிலேசனேமலையானநின்னைக்
கூப்பிட்டுநின்றுகுனிந்தொருகோலக்கொம்பாற்றடவிப்
பூட்டகண்ணிச்சயமரக்கினுன்மைப்புயல்வண்ணனே. ௨௨

உம்பரைவாழ்வித்ததஞ்சங்கண்டோமொண்புரமெரித்த
அம்பரையேயற்றியசூலங்கண்டோமருளுங்குறைவில்

நம்பரைபாகமுங்கண்டோமவர்திருநாமஞ்சொல்லா
வம்பரையுங்கண்ணிற்கண்டோம்வெண்காடனைவாழ்த்துங்களே ௨௩

மாடேறுதாளுமதியேறுசென்னியுமாமலரோன்
ஓடேறுகையுமுடையார்தமக்கிடமோங்கியநெற்
சூடேறுசங்கஞ்சொரிமுத்தைமுட்டையென்றேகமலக்
காடேறுமன்னஞ்சிறகாலணைக்குங்கழுக்குன்றமே. ௨௪

நெருப்புக்கறுக்கச்சிவப்புள்ளமேனியர் நீள்கனகப்
பொருப்பக்குனித்துப்புரமெரித்தார்கிடம்போர்க்களிற்றின்
மருப்புக்கண்முத்தும்வளர்கழைமுத்துமவனைக்கண்முத்தும்
கருப்புக்கண்முத்துமதிக்குலங்காட்டுங்கழுக்குன்றமே. ௨௫

ஆலங்கிடக்குமனத்தார்க்கொரு நன்றியம்பிவிட்ட
கோலங்கிடக்குங்கிடக்குங்கண்டாய்குறையாதகுண
சீலங்கிடக்குமனத்தார்க்கொருநன்றிசெப்பில்வெகு
காலங்கிடக்குங்கண்டாய்வணிகாசொதில்சாத்தவனே. ௨௬



வேளுக்குவாம்பரியும்வில்லுக்குநீலமுஞ்செல்
வாளொக்குங்கண்மடவார்வாய்க்காடும்,நாளும்
மருதப்பனையேவளர்த்துவிட்டதாலே
மருதப்பனைவணங்குவார். ௨௭

சிந்தாமணிசங்குதேனுமலர்த்தாமரைசிர
ஐந்தருவுநின்னவேயிருக்க-வந்தேதான்
கச்சவிடமேயுண்ட கண்டாகடைதோறும்
பிச்சையிரந்துண்டதென்னபேச்சு. ௨௮

அந்திக்கார்வந்துமயலாற்றுவான்ரனைவிடு
வந்திககாவந்துவழக்குரைப்பார்-நந்திக்கார்
கச்சிக்களத்திக்கார்காதலுரைப்பார்கனகக்
கச்சிக்காளத்திக்கார்கண். ௨௯

இருப்போமென்றாலு மிராதுளமானேயிக்
கருப்போமென்றாலுங்கசக்கும்-விருப்பாரும்

காசண்முகனைக்கடல்புடைசூழ்கோவளம்வாழ்
மாசண்முகனைமறந்து. ௩௰

பாரவிளநீர்சுமக்கப் பண்டேபொறுதவிடை
ஆரவடஞ்சுக்க வாற்றுமோ—நேரே
புடைக்கனத்தகொங்கையின்மேற்பூங்களபஞ்சாத்தி
இடைக்கனத்தம்மைத் நவராகின்று. ௩௧

வெங்காயஞ்சுக்கானால் வெந்தயத்தாலாவதென்ன
இங்கார்சுமந்திருப்பாரிச்சரக்கை, மங்காத
சீரகத்தைத்தந்தீ ரேற்றேடேன்பெருங்காயம்
ஏரகத்துச்செட்டியாரே. ௩௨

என்னெஞ்சு கல்லாகுமென்றறிந்தக்கல்லுமையாள்
பொன்னஞ்சரணம்பொருதென்றே,முன்னாள்
இடத்தாளேயம்மியின்மேலேற்றுகளக்காடா
இடத்தாளேயஞ்சாதேயின்று. ௩௩

முன்னேஇரண்டுமுலை முற்றியபின்னாலுமுலை
எந்நேரமென்மதலைக்கெட்டு முலைஎந்நாளும்
பைந்நாகஞ்சூழ்மதுரைப்பா ணாகின்பாகனுக்கிங்
கென்னாக மென்னாமினி. ௩௪

நங்கையொருத்தி யையுநாமிருவர்மூவரையும்
பொங்குமமளிபொறுக்குமோ,சங்கம்
குழையவரால்பாயுங்குரு நாடர்கோவே
பழைபவராலென்ன பயன், ௩௫

நங்கைபயணநமக்கென்று ணைத்தளவில்
அங்கம்பசலைநிறமானதே, செங்கை
வளைநெகிழப்பாதி மறுத்தேனெள்ளேருத
உளநெகிழப்பாதியுடைந்து. ௩௬

உன்னுயிருமென்னுயிருமொன்றென்பதின்றறிந்தேன்
மன்னுபுகழ்மச்சத்தார்மன்னவா,உன்னுடைய
பொன்னாகத்தெங்கையர்தம் போகநகசின்னங்கண்
டென்னாகத்தே யெரிகையால். ௩௭

ஒருவர்க்கிடமாயுகந்திருந்த பாயல்
இருவர்க்கிடமாயதென்னு,மரு வலரைக்
கன்னாட்டவின்னாட்டுங்கண்டன் கரிகாலன்
தன்னாட்டிது புதுமைதான். ௩௮

அம்பலவாவின்னொரு காலாடினாலாகாதோ
உம்பரெலாங்கண்டதெனக்கொப்பாமோ-சம்புவே

வெற்றிப்பதஞ்சலிக்கும்வெம்புலிக்குந்தித்தியென
ஒற்றிப்பதஞ்சலிக்குமோ. ௩௯

மாதாவுடல்சலித்தாள்வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்து விட்டானே'நாதா
இருப்பையிலேவாழ்சிவனேயின்னமோரன்னை
கருப்பையிலேவாராமற்கா. ௪௰

இந்தவிடைநிற்பதரிதென் றணையும்பாணை
சங்கேதகமாகச்சமைத்தானே-அங்கையன்
பாரதிராமன்வரையிற்பைங் கொடியீர்கொங்கையிள
நீரதிராமன்னடமின்னீர். ௪௧

காளத்திகண்டத்தேகாளத்திநெற்றியிலே
காளத்தியுன்றன் கரத்திலே-காளத்தி
அங்கமெங்கும் வெவ்வழலையாற்றினுண் ஞானப்பூங்
கங்கை யென்னும்பெண்ணொருத்திகண்டு. ௪௨

மேவிலுடனேவிடியும்விடியாது
கோவைமணிமார்பன்கூடாநாள்-தேவர்
திரண்டாதரிக்கின்ற தென்னரங்கமாலே
இரண்டாலும்பொல்லாதிரா. ௪௩

ஆகசெய்யுள்-௩௱௩௭



அம்மானை.

———※———

சித்தர்பூர்வாழுஞ்சிதனைளித்தபிள்ளையார்
மெத்தப்பெருவயிறு வீங்கினரேனம்மானை
மெத்தப்பெருவயிறு வீங்கினரேயாமாயின்
இத்தரையின்மீதவருக்கேச்சலவோவம்மானை
இரவுபகல்குட்டுணிக்கிறேச்சுணடோவம்மானை.

விருப்பாரும்பூஞ்சோலைமேவுதிருவரங்கர்
திருப்பாற்கடலுடையசெல்வர்காணம்மானை
திருப்பாற்கடலுடைய செல்வரேயாமாயின்
இப்பாற்குப்பெண்கொடுக்கவேதென்னமதியம்மானை
என்றல்லோமண்ணுண் டிருந்தனர்காணம்மானை. உ

ஆகாரமாங்குடந்தையாதிகும்பேச்சுரனார்
கோதாடுமன்மதனைக்கொன்றெரித்தாரம்மானை
கோதாடுமன்மதனைக்கொன்றெரித்தாராமாயின்
மாதாபிதாக்கள்பழிவாங்காரோவம்மானை
வாங்குதற்குமுன்வாயின்மண்விழுந்ததம்மானை. ந

தொல்லுலகி லெல்லோருஞ்சொன்மாங்கனியொன்று
நல்லதொருகாஞ்சிநகரி லுண்டேயம்மானை
நல்லதொருகாஞ்சிநகரி லுண்டேயாமாயின்
எல்லார்க்குந்தானேயினிக்குமோவம்மானை
இனிதிருக்குமொருவேளையெரித்திருக்குமம்மானை. ச

மட்டுவார்கூந்தலுமையாண்மனமகிழக்
கட்டுமாவென்றுளதுக்கச்சியிலேயம்மானை
சட்டுமாவென்றுளதுக்கச்சியிலேயாமாயின்
இட்டமாய்நற்கனிகாயில்லையேயம்மானை
இல்லாமற் கல்லாலெறிவாரோவம்மானை. ரு

கல்லாலின்கீழிருக்குங்காளத்திநாதருக்குப்
பொல்லாச்சிலந்திபுகுந்ததுகாணம்மானை
பொல்லாச்சிலந்திபுகுந்ததுவேயாமாயின்
வல்லானொரு பணிக்கன்வாரானோவம்மானை
வந்தல்லோபண்விடுப்பட்டதம்மானை. சா

ஆரத்தடவயல்சூழ்மாகைவாழழகர்
தாரொத்தமேனிதழலொத்ததம்மானை
தாரொத்தமேனிதழலொத்ததாமாயின்
ஈரக்கங்காநதியாளிருப்பதேனம்மானை
ஈரம்பெருநெருப்புக்கில்லையேயம்மானை. எ

மாசிலாத்தென்விரிஞ்சை மார்க்கசகாயலிங்கர்
வேசியர்பாற்றூதுசொல்லிமீண்டனர்காணம்மானை
வேசியர்பாற்றூதுசொல்லிமீண்டனரேயாமாயின்
வீசைமுனைவெட்கமவர்க்கில்லையேயம்மானை
இல்லாமற்றலையிறக்கமேன்வந்ததம்மானை. அ

வற்றதலைவனையிலும்வாள்விசயன்றன்கையிலும்
பற்றுமலண்ணலடிபட்டனர்காணம்மானை
பற்றுமலண்ணலடிபட்டனரேயாமாயின்
பெற்றாரில்லாதசிறுபிள்ளையோவம்மானை
பிள்ளைமதியுடையபித்தர்காணம்மானை. ௯

பூக்காவனஞ்சூழும்புள்ளிருக்கும்வேளூரான்
பாங்ககானதென்மதுரைப்பாணன்காணம்மானை
பாங்கானதென்மதுரைப்பாணனேயாமாயின்
தாங்காதிழையெடுத்துதனைதப்பானோவம்மானை
தையலுக்குநல்லசமர்த்தன்காணம்மானை. ௰

இப்பூமிதன்னிலியல்பாந்திருத்தணியில்
முப்பூவிளையுமுருகருகக்கேயம்மானை
முப்பூவிளையுமுருகருக்கேயாமாயின்
அப்பவருக்கங்கேபரிதல்லோவம்மானை
அவர்க்குமுகமாறுனல்ப்பரிதோவம்மானை. ௰

மாங்கரொடு விண்ணோர்வணங்குதணிகாசலத்தான்
போந்துகலையோட்டிவிரப்போன்மகன்காணம்மானை
போந்துகலையோட்டி விரப்போன்மகனேயாமாயின்
காந்திவிடுமாடகப்பொற்காசரிதோவம்மானை
கல்லாரவெற்பண்டந்தாற் காசரிதேயம்மானை. ௰௨

பாலாறுசேரும்பரமர் திருவிற்கோலர்
நாலாறுசேரிநடுப்புகுந்தா ரம்மானை
நாலாறுசேரிநடுப்புகுந்தாராமாயின்
தோலாமையோடெலும்புதொட்டதுண்டோவம்மானை
தொட்டனரென்றேமறையோர்தொட்டிலர்காணம்மானை, ௰௩

கோணமலையுடையகோதையிடபபாகனார்
சேணாடர்போற்றுதிருவம்பலர்காணம்மானை
சேணாடர்போற்றுதிருவம்பலரேயாமாயின்
ஏனாதிமால்பிரமர்க்கெட்டாரோவம்மானை
இடைமதிக்குங்குசமதிக்குமெட்டுவரோவம்மானை. ௰௪

அண்டரெல்லாம்போற்றுகின்றவண்ணாமலைநாதர்
கண்டொருபெண்பாதியுடல்கைக்கொண்டாரம்மானை

கண்டொருபெண்பாரியுடல்கைக்கொண்டாராமாயின்
உண்டவிடமெல்லாமேலூராதோவம்மானை
ஊருமென்றேயுண்ணாமுலையாளம்மானை ௰௫

தேவாதிதேவன்றிருவல்லிக்கேணியண்ணல்
ஓவாப்பெருஞ்செல்வமுற்றவன்காணம்மானை
ஓவாப்பெருஞ்செல்வமுற்றவனேயாமாயின்
பூவாருமாவலிபாற்போனதேனம்மானை
போனகதைகேட்கிலதுபூந்தானம்மானை ௰௬

வில்வந்திருச்சடிலமேவுமயிலேச்சுரனார்
செல்வந்தழைந்தநிறைசெல்வர்காணம்மானை
செல்வந்தழைந்தநிறைசெல்வரேயாமாயின்
இல்லங்கடோறுமிரப்பதேனம்மானை
இரந்தார்விதித்தலைகந்தேறலாலம்மானை ௰௭

தீமைக்கடல்விடத்தைத்தேர்ந்தவிரிஞ்சேசுரனார்
வாமத்தொருமயிலைவைத்தனர்காணம்மானை
வாமத்தொருமயிலைவைத்தனரேயாமாயின்
ஏமமுடிமேலரவமேறுமோவம்மானை
ஏறும்தாவம்புற்றிருந்தகாலம்மானை ௰௮

இருவருக்குங்காண்பரியவீசர்மதுரேசர்
விருதுகட்டியங்கம்வெட்டிவென்றனர்காணம்மானை
விருதுகட்டியங்கம்வெட்டிவென்றனரேயாமாயின்
அருமையுடம்பிருகூறுவதேனம்மானை
ஆனாலுங்காயமில்லையவரிவர்க்கம்மானை ௰௯

அடர்ந்துவாழுங்குடந்தையாராவமுதர்
மடந்தைபாகர்க்கேறுமாடுகாணம்மானை
மடந்தைபாகர்க்கேறுமாடுதானாமாயின்
கடந்தபாதம்மிரண்டுங்காணாரோவம்மானை
கண்ணனிரவன்னம்பூவானாற்காண்பாரோவம்மானை ௨௰

கொண்டறிசூழ்சோலைவளர்கும்பபுரிவாழரனார்
பெண்டுகளைச்சுமந்தபித்தர்காணம்மானை
பெண்டுகளைச்சுமந்தபித்தரேயாமாயின்
கண்டவிடந்தங்குங்கருத்தரோவம்மானை
கண்டவிடந்தங்குங்கருத்தர்தாமம்மானை ௨௧

தெண்டிரைசூழ்தில்லைச்சிவகாமித்தாயார்க்குக்
கண்டமெல்லாஞானக்கரும்பதுகாணம்மானை
கண்டமெல்லாஞானக்கரும்பதுவேயாமாயின்
அண்டர்பிரானாலைதனிலாடானோவம்மானை
ஆடிப்புலியூரமர்ந்தனன்காணம்மானை ௨௨

விருத்தசடைத்தில்லைநகர்மேவுஞ்சிதம்பரர்க்கு
வருத்தமிகுமொருகால்வாதமல்லோவம்மானை
வருத்தமிகுமொருகால்வாதமேயாமாயின்
பெருக்ககடனஞ்சாற்பிழையாரோவம்மானை
பிழைத்தல்லோநடமாடிப்பேறுற்றாரம்மானை ௨௩

விரிஞ்சபுகழ்ப்புள்ளிருக்கும்வேளூர்வயித்தியனார்
பரிந்துவினைதீர்க்கவல்லபண்டிதர்காணம்மானை
பரிந்துவினைதீர்க்கவல்லபண்டிதரேயாமாயின்
மருந்துவிலைசைக்கூவிராக்காரோவம்மானை
வாயிலேமண்போட்டுவாங்குவர்காணம்மானை ௨௪

பாட்டுவரிச்சுரும்பர்பாடுஞ்சிதம்பரனார்
மாட்டிடையன்றேடமன்றிலாவெடுத்தாரம்மானை
மாட்டிடையன்றேடமன்றிலாவெடுத்தாராமாயின்
ஆட்டுக்காரன்னையறிந்ததெவரம்மானை
அறிந்தனசாண்காற்புலியுமராப்பாம்புமம்மானை ௨௫

இன்னதிதுவென்றிறைவன்றிறமதனைச்
சொன்னமறையுந்துணிந்தறியாதம்மானை
சொன்னமறையுந்துணிந்தறியாதாமாயின்
கன்னிவனத்திடையேகாணலாமம்மானை
கண்டார்பிறிதென்றுங்காணார்காணம்மானை ௨௬

பாலறியாக்கள்ளனவன்வந்துமன்றுள்ளேபுகுந்து
சோலமுடனெடுத்துக்குன்றொளித்தானம்மானை
கோலமுடனெடுத்துக்குன்றொளித்தானுமாயின்
சாலுதலைதோலெலும்புகண்டதுண்டோவம்மானை
கண்டல்லோவிருசமுகுகாத்திருப்பதம்மானை ௨௭

கற்றைச்சடைமுடியார்கச்சியேகம்பருக்கு
நெற்றிக்கண்ணென்றுநெருப்பதுகாணம்மானை
நெற்றிக்கண்ணென்றுநெருப்பதுவேயாமாயின்

பற்றிச்சடையிற்படராகோவம்மானை
படருமென்றேகங்கைபதிவிருந்தாளம்மானை உ௮

செம்பொன்மலைவெள்ளிமலைசேரவிரண்டிருக்கக்
கம்பர்விரும்புவதுகஞ்சிகாணம்மானை
கம்பர்விரும்புவதுகஞ்சியேயாமாயின்
அம்புவியெல்லாமளக்கவன்னமெங்கேயம்மானை
அன்னந்திருக்கம்பையாற்றிலுள்ளதம்மானை உகூ

ஈசன்பசுவாகியேமனுவொருகன்றாகி
வீசுபுகழாரூரின்வீதிவந்தாரம்மானை
வீசுபுகழாரூரின்வீதிவந்தாராமாயின்
காசளவுபாலுங்கறவாதோவம்மானை
கன்றையுதைகாலிகறக்குமோவம்மானை ௩0

ஒற்றியூர்த்தியாகரொருபெண்பாற்சுந்தரனை
உற்றுநீசத்தியம்பண்ணென்றருளித்தாரம்மானை
உற்றுநீசத்தியம்பண்ணென்றருளித்தாராமாயின்
குற்றமுண்டோவன்பர்மேற்கோபமோவம்மானை
கோபமேதோமகிழ்வாய்க்கொண்டிருந்தாரம்மானை ௩க

அக்கரவம்பூண்டிருந்தவங்கயற்கண்ணம்மைபங்கர்
கைக்கொண்டுசெத்தகன்றைக்காவிவந்தாரம்மானை
கைக்கொண்டுசெத்தகன்றைக்காவிவந்தாராமாயின்
சொக்கர்மதுரைக்குக்கோட்டியோவம்மானை
கோட்டியென்றேசாமணையுஞ்சுட்டெரித்தாரம்மானை ௩உ

ஆரவைபல்சூழருணையண்ணுமலைநாதர்
பேருலகில்வண்ணாரப்பெண்கொண்டாரம்மானை
பேருலகில்வண்ணாரப்பெண்கொண்டாராமாயின்
சாரும்புடைவையெல்லாந்தப்பினரோவம்மானை
தப்பினர்தாருவனத்தார்புடைவையம்மானை ௩௩

திருப்பாதிருப்புலியூர்ச்செல்வர்சிவக்கொழுந்தர்
கருப்பாஞ்சிலையானைக்காய்ந்தனர்காணம்மானை
கருப்பாஞ்சிலையானைக்காய்ந்தனரேயாமாயின்
ஒருத்திக்கிருவருடன்கலப்பேனம்மானை
கலவாரோகன்னிவனங்காவல்கொண்டாலம்மானை ௩௪

மன்றுடியாமெங்கண்மாமாசிலாமணியார்
நன்றானமுல்லைக்குநாயகர்காணம்மானை
நன்றானமுல்லைக்குநாயகரேயாமாயின்
குன்றுமற்பெண்ணெங்கேகொண்டனர்காணம்மானை
கொண்டபெண்ணேநல்லகொடியிடைச்சியம்மானை ௩௫

சுந்தரஞ்சேர்தென்குடந்தைச்சோமநாதப்பெருமான்
சுந்தரிடமாமிதனைக்கைப்பிடித்தாரம்மானை
சுந்தரிடமாமிதனைக்கைப்பிடித்தாராமாயின்
இந்தவுலகசனுக்கேற்குமோவம்மானை
ஏற்குமென்றேனகயின்மழுவேந்தினர்காணம்மானை ௩௬

அட்டதிக்கெண்கன்னிவனத்தாரப்பனைக்கடவில்
இட்டகற்றானேணடுகனாயேறவிட்டாரம்மானை
இட்டகற்றானேணடுகனாயேறவிட்டாராமாயின்
விட்டகற்றுணீரின்மிதக்குமோவம்மானை
மிதவாதோமுன்வளைந்துவில்லானலம்மானை ௩௭

தந்தைபிடித்தரியர்தாயானவள்சமைக்க
வெந்தவிடக்குய்ந்துமீண்டதுகாணம்மானை
வெந்தவிடக்குய்ந்துமீண்டதுவேயாமாயின்
மைந்தனுறுப்புமணத்ததோவம்மானை
மாதையரன்வல்லபத்தான்மணத்ததுகாணம்மானை

நாணென்றானஞ்சிருக்குமற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்றபாணங்காணம்மானை
பாணந்தான்மண்டின்றபாணமேயாமாயின்
சேணார்புரமெரித்தசேவகமேதம்மானை
சேவகத்தைச்சொல்லச்சிரிப்பல்லோவம்மானை ௩௯

பொன்றிரளுஞ்சித்திரஞ்சூழ்பூம்புகலூர்தன்னில்வளர்
தந்திமுகன்பெருவயிறன்சட்டாணியம்மானை
தந்திமுகன்பெருவயிறன்சப்பாணியாமாயின்
இந்தவயிற்றுக்கிரையெங்கேவம்மானை
என்றல்லோவீசனிரக்கலுற்றானம்மானை ௪௰

தெள்ளுபுகழ்படைத்ததிருமுட்டத்தெம்பெருமாள்
உள்ளநிலமெல்லாமுழுதுண்டாரம்மானை
உள்ளநிலமெல்லாமுழுதுண்டாராமாயின்

கள்ளனிவனென்றுசொல்லிக்கட்டிவதேனம்மானை
கட்டாரோபோக்கதிர்மறைத்தாலம்மானை. ௬௧

அடுக்ததிருக்காவிரிசூழணியரங்கரெப்போதும்
எடுத்ததிருக்கோயிலைவிட்டெழுந்திராரம்மானை
எடுத்ததிருக்கோயிலைவிட்டெழுந்திராராமாயின்
படுக்கையிலேவிடசிணடிபட்டனரோவம்மானை
பட்டனரென்றல்லோபருந்தெடுத்ததம்மானை. ௬௨

மட்டுற்றசோலைமதுராபுரிச்சொக்கர்
பிட்டுக்குமண்சுமந்தபித்தர்காணம்மானை
பிட்டுக்குமண்சுமந்தபித்தரேயாமாயின்
ஒட்டதொழிலவருக்குள்ளதோவம்மானை
உள்ளன்பிலாதவருங்கொட்டார்காணம்மானை. ௬௩

மீன்மதில்சூழாயல்வளர்நீலகண்டேசுரனார்
சேனுயர்ந்தகீர்த்தித்தியாகர் காணம்மானை
சேனுயர்ந்தகீர்த்தித்தியாகரேயாமாயின்
காணக்கொடைக்கொட்டிதான் கட்டினரோவம்மானை
கையாற்சொன்னக்கொடியைக்கட்டினர்காணம்மானை. ௬௪

அம்புலியூரென்னுமணிகொள்சிதம்பரத்தே
வெம்புலியொன்றெந்நாளுமேவுக்காணம்மானை
வெம்புலியொன்றெந்நாளுமேவுமேயாமாயின்
அம்பலத்தைத்தான்விட்டகலாதோவம்மானை
ஆட்டைவிட்டுவேயகையகலுமோவம்மானை. ௬௫

புட்படியுநாரணன்போற்றுவைவேங்கடாசலவேள்
மட்படியில்வாழும்வயித்தியன்காணம்மானை
மட்படியில்வாழும்வயித்தியனேயாமாயின்
சட்படுநாநோய்தீரக்காண்பானோவம்மானை
காண்பானிவனுங்கடைமருந்தாலம்மானை. ௬௬

செல்லார்வலஞ்சுழியிற்செங்கழுநீர்பிள்ளையார்
எல்லார்க்குநல்லவரிவர்காணம்மானை
எல்லார்க்குநல்லவரீவரேயாமாயின்
தொல்லுலகிலுள்ளோர்துதியாரோவம்மானை
துதிக்கையவர்தமக்குச்சொந்தமன்றோவம்மானை. ௬௭

தேங்குபுகழ்த்தென்மயிலைச்சிங்காரவேன்முருகா
வேங்கைசவனத்திலன்றுவேட்டைவந்தாரம்மானை
வேங்கைவனத்திலன்றுவேட்டைவந்தாராமாயின்
பாங்காகவேமுயன்மான்பற்றினரோவம்மானை
பற்றினரோமான்கன்றைப்பாரறியவம்மானை. ௪௮

வடவாறுசூழவரும்வாழ்மயிலின்வாகனனார்
விடமாலினலும்புகொண்டவேடன்மகனம்மானை
விடமாலினலும்புகொண்டவேடன்மகனுமாயின்
அடைவானவள்ளியரிபாளோசம்மானை
அம்மான்மகளறிந்தாலச்சமுண்டோவம்மானை. ௪௯

திரிச்சிராப்பள்ளியரன்செட்டிமகட்காவேடம்
தரிச்சுமருத்துவஞ்செய்தாயானாரம்மானை
தரிச்சுமருத்துவஞ்செய்தாயானாராமாயின்
மருத்தெண்ணெய்ச்சிக்சின்மணமிலையேயம்மானை
மட்டுவார்குழலிருந்தான்மணமரிதோவம்மானை. ௫௰

நாடேர்திருச்சம்புநாதர்க்கிருப்பிடத்தில்
ஓடுஞ்சலம்பெருகியூற்றெடுத்ததம்மானை
ஓடுஞ்சலம்பெருகியூற்றெடுத்ததாமாயின்
நாடுமொருசிலந்திநண்ணினதோவம்மானை
நவைதீரொருசிலந்திநண்ணினதுண்டம்மானை. ௫௧

எண்ணரியகாஞ்சியில்வாழேகாம்பரநாத
அண்ணறிருமேனியெங்குமாகாசமம்மானை
அண்ணறிருமேனியெங்குமாகாசமாமாயின்
வண்ணமுலைமார்பின்வடுப்படுமோராவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்குவடுவரிதோவம்மானை. ௫௨

பூங்கொன்றைநாதன்புகழ்கச்சியேகம்பன்
செங்கண்ணின்மீதேறுஞ்செல்வன்காணம்மானை
செங்கண்ணின்மீதேறுஞ்செல்வனேயாமாயின்
மாலக்கண்ணின்கீழிருக்கவந்தேனம்மானை
வல்லீலாவிவ்வாறுவகுப்பட்டதம்மானை. ௫௩

சேற்றுன்மடையடைக்குஞ்சேவகனார்கூடலிலே
வேற்றாளாய்மண்சுமக்கவேண்டினார்காணம்மானை

வேற்றாளைய்மணக்கவேண்டினரோயாமாயின்
மாற்றானடிச்சதைடுவிலையோவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்குவடுவரிதோவம்மானை
எட்டுத்திக்குள்ளோருமிறைஞ்சுமெங்கள்சொக்கலிங்கம்
கிட்டுகின்றவேகசந்தகிராகிகாணம்மானை
கிட்டுகின்றவேகசந்தகிராகியேயாமாயின்
கொட்டிமகவான்பல்காற்தழலுவதேனம்மானை
குழறுமின்னுவாசாற்குக்கோளிழைக்காலம்மானை ௫௫

பதுமலராற்சகுனைத்தபாரவடமலைப்பர்
அதிகுணத்துகிலமகண்மேலாசைகொண்டாரம்மானை
அதிகுணத்துகிலமகண்மேலாசைகொண்டாராமாயின்
விதுமுகத்துமலாமானைவிட்டனரோவம்மானை
விடுவாரோமாலானுன்மேதினிக்குளம்மானை ௫௬

மனஞ்சலியாமற்றினமுமாறுமற்றண்டலையார்
தினங்கீரைமாவடுவுந்தின்றுவந்தாரம்மானை
தினங்கீரைமாவடுவுந்தின்றுவந்தாராமாயின்
கனங்கொண்டமெய்யிலனல்சாணுதோவம்மானை
கண்டதுகாணெற்றியிலேகண்ணெரிச்சலம்மானை ௫௭

தண்டாமரைத்தடஞ்சூழ்தண்டலைபாரெப்பொழுதும்
உண்டாரிளங்கீரைமாவடுவுமம்மானை
உண்டாரிளங்கீரைமாவடுவுமாமாயின்
பண்டேதான்றின்றபழக்கமுண்டோவம்மானை
பழக்கமில்லைத்தாயனுர்பழக்கிவைத்தாரம்மானை. ௫௮

பொன்னேறுவார்பர்புகழ்சேர்திருவரங்கா
எந்நேரமும்பாம்பிலேகிடப்பாரம்மானை
எந்நேரமும்பாம்பிலேகிடப்பாராமாயின்
என்னதலைக்குவிடமேறுதோவம்மானை
ஏறுமோசெங்கருடனேறினாலம்மானை. ௫௯

எங்கவுலகும்பரவுமெங்கள்சொக்கலிங்கேசர்
சந்ததமும்பொன்மன்றிற்றானடிப்பாரம்மானை
சந்ததமும்பொன்மன்றிற்றானடிப்பாராமாயின்
அந்தவெள்ளிமன்றசனிலாடினதேனம்மானை
ஆடினார்கான்மாற்றதிகமென்றேயம்மானை. ௬௰

நேயமிகுமாயல்வளர்நீலகண்டேச்சுரனார்
ஆயுமவர்க்கெல்லாமருண்மேகம்மானை
ஆயுமவர்க்கெல்லாமருண்மேகமாமாயின்
காயமுழுதுங்கறுக்காதோவம்மானை
கண்டமட்டுத்தான்கறுப்புகாட்டினதேயம்மானை ௯௧

மத்தமதிசூடுமயிலைவிருபாட்சிலிங்கர்
சுத்தவடிவெல்லாஞ்சுடர்வடிவேயம்மானை
சுத்தவடிவெல்லாஞ்சுடர்வடிவேயாமாயின்
மத்தகத்திற்றிங்கள்வயங்குமோவம்மானை
வயங்குமிருகண்ணாய்மருவுதலாலம்மானை ௯௨

காரமருங்கண்டர்கயிலாயநாயகனார்
பாரறியக்கையிற்பணம்படைத்தாரம்மானை
பாரறியக்கையிற்பணம்படைத்தாராமாயின்
ஊர்தோறும்பிச்சைக்குழல்வதேனம்மானை
உழலாரோபங்காளிக்கொப்பித்தாலம்மானை ௯௩

பையரவஞ்சூடுதிருப்பட்டீச்சுரநாதர்
தையலாங்கங்கைதனைத்தரித்தாரம்மானை
தையலாங்கங்கைதனைத்தரித்தாராமாயின்
மெய்யிற்குளிரவாதமேவாதோவம்மானை
மேவுமோவன்னிகையில்வீற்றிருந்தாலம்மானை ௯௪

ஆனபணைத்தாளமுகிக்கயன்வகுத்த
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததுகாணம்மானை
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததேயாமாயின்
ஏனதனின்வட்டப்பாடிருக்கின்றதம்மானை
இடைகுறைந்தாலவட்டப்பாடில்லையோவம்மானை ௯௫

பேரானபோரூரிற்பிள்ளையார்வேம்படியில்
சீராகவாழுஞ்சிவன்மைந்தனம்மானை
சீராகவாழுஞ்சிவன்மைந்தனாமாயின்
கூரானகொம்பொடிந்தகுற்றமேனம்மானை
ஒடிந்தல்லோபாரதமுமுண்டாச்சுதம்மானை ௯௬

அண்டர்புகழ்போரூரினாறுமுகத்தன்முன்னோன்
பெண்டுகொள்ளமாட்டாப்பிரமங்காணம்மானை

பெண்டுகொள்ளமாட்டாப்பிரமமேயாமாயின்
கண்டவொல்லாக்குட்டாசகணக்குண்டோவம்மானை
குட்டுவார்தங்கள்குறைதீரவம்மானை ௬௭

பொல்லாதபாவமெல்லாம்போக்குதிருப்போரூரில்
வல்லானிடக்கிலுண்டோர்வாழ்வானை
வல்லானிடத்திலுணடோர்வாழானையாமாயின்
நல்லாள்குறத்திநடுங்காளோவமமானை
நடுக்கமற்றானிருவர்நடுவிருந்தானம்மானை ௬௮

மண்டலமெல்லாம்புகழுமாபோரூர்வேலவனார்
பெண்டிரண்டுகொண்டபெருமான்காணம்மானை
பெண்டிரண்டுகொண்டபெருமானேயாமாயின்
சண்டையிடாரோவவர்சதாகாலமம்மானை
இட்டல்லோபோரூரொன்றேற்பட்டதம்மானை ௬௯

பேசுபுகழ்போரூர்பேதைக்குறச்சிறுபெண்
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தாரம்மானை
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தாராமாயின்
ஆசையாய்ப்பெற்றதவளீமானம்மானை
அம்மான்மகளென்றேயறிந்துகொண்டாரம்மானை ௭௰

வீசுபுகழ்போரூரில்வேலவர்முன்செய்தமணம்
காசுபணமேநேராககலியாணம்மானை
காசுபணமேநேராக்கலியாணமாமாயின்
பேசரியவிந்திரனேன்பெண்கொடுத்தானம்மானை
கொடுத்தானேசூரன்குடிகெடுக்கவம்மானை ௭௧

நாடிவந்தபேர்க்கெல்லாநலங்கொடுக்கும்போரூரர்
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாரம்மானை
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாராமாயின்
ஆடினவரின்னமுவந்தாடாரோவம்மானை
ஆடுவார்பாடவறியார்காணம்மானை ௭௨

துள்ளிமயிலேறுந்துரைவேலன்போரூரில்
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாரம்மானை
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாராமாயின்
கொள்ளுந்தலங்கலகக்கூடுமோவம்மானை
கூடினதுந்தேடினதுங்கோடியுண்டேயம்மானை ௭௩

நம்பர்திருநாகைநாகலிங்கநாயகனார்
அம்பொன்மலைவீடாவமர்ந்தனர்காணம்மானை
அம்பொன்மலைவீடாவமர்ந்தனரேயாமாயின்
அம்பலத்தினின்றுகூத்தாடுவதேனம்மானை
ஆடையணிபணிக்காவாடினர்காணம்மானை ௭௪

கற்றுணர்ந்தார்போற்றுங்கழுக்குன்றத்தீச்சுரனார்
உற்றமனைக்காலாலுதைத்தனர்காணம்மானை
உற்றமனைக்காலாலுதைத்தனரேயாமாயின்
பற்றியதோர்கால்வலியும்பட்டதோவம்மானை
பாடுமுபலகன்வலியும்பட்டதுகாணம்மானை ௭௫

அப்பார்வயல்சூழணிவிரிஞ்சைவாழரனார்
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாரம்மானை
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாராமாயின்
தப்பாதெவர்க்குஞ்சகாயரோவம்மானை
சதாகாலமார்க்கசகாயர்காணம்மானை ௭௬

நாடுதிருக்கோவனல்லூர்நாதர்தினமுமறைக்
காடுதனிற்றிரியுங்கள்ளர்காணம்மானை
காடுதனிற்றிரியுங்கள்ளரேயாமாயின்
மாடெடுக்கவாடெடுக்கமாட்டுவரோவம்மானை
மாட்டாரோவம்புலியைவைத்திருந்தாலம்மானை ௭௭

சங்கரனாராபற்சகாயனார்சந்ததமும்
மங்கையுடன்கோவனல்லூர்மகிழ்ந்திருந்தாரம்மானை
மங்கையுடன்கோவனல்லூர்மகிழ்ந்திருந்தாராமாயின்
கங்கைநீர்சென்னியின்மேற்கட்டுவதேனம்மானை
கட்டியல்லோவவர்தேகங்காய்ந்ததுகாணம்மானை ௭௮

மன்னனையம்பேட்டைவாழ்சந்த்ரசேகரனார்
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாரம்மானை
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாராமாயின்
இன்னும்விவாகமவர்க்கேனில்லையம்மானை
இருப்பிடமில்லார்க்குப்பெண்ணெவர்கொடுப்பாரம்மானை ௭௯

அதகர்கெடுவாயிலருணசலேச்சுரனார்
சுத்தமிகும்பெண்கொண்டசுந்தரன்காணம்மானை

சுந்தமிதும்பெண்கொண்டசுந்தரன்காணம்மானை
எய்த்துடம்புபாதியாயிளைத்ததென்னவம்மானை
இசையினனங்காணுதிளைத்ததுகாணம்மானை அ௰

வீருனகோடைநகர்வேங்கையப்பர்க்செப்பொழுதும்
நீறுடுஞ்செஞ்சடைமேனிமொற்றமம்மானை
நீறுடுஞ்செஞ்சடைமேனிமொற்றமாமாயின்
கூறுருமேனிகுளிராதோவம்மானை
கோடைக்குமுன்னேகுளிருமோவம்மானை அக

ஆரூரில்வாழ்கின்றவாதிவிடங்கப்பெருமான்
பேராரும்வாதப்பிணிக்காலனம்மானை
பேராரும்வாதப்பிணிக்காலனுமாயின்
ஆரார்பிணிக்குமருந்தருத்தினரோவம்மானை
அருத்திற்பிணியறுமோவாழிகஞ்சாலம்மானை அஉ

வெள்ளெருக்கம்பூச்சூடும்வேகபுரிநாதா
வள்ளலமரர்க்கெல்லாம்வாத்திகாணம்மானை
வள்ளலமரர்க்கெல்லாம்வாத்தியேயாமாயின்
பிள்ளைகையிலுபதேசம்பெற்றதென்னவம்மானை
பெற்றாலும்பின்னூற்பிழைபொறுத்தாரம்மானை அ௩

காலனையுங்காமனையுங்காட்சிசிறுத்தொண்டனிட
பாலனையுங்கொன்றபழிக்காரனம்மானை
பாலனையுங்கொன்றபழிக்காரனுமாயின்
சாலவுயர்ந்தோர்முடியைச்சாய்க்காரோவம்மானை
சாய்த்தவரெல்லாம்பெரியசைவர்காணம்மானை அ௪

நத்துலவுதென்மயிலைநாதர்திருவாலீசர்
சித்தசனையுற்றெரித்தசேவகர்காணம்மானை
சித்தசனையுற்றெரித்தசேவகரேயாமாயின்
அக்கலைதீக்கொண்டதெவராற்றினர்காணம்மானை
ஆறுதலையுள்ளார்க்கரிதலவேயம்மானை அரு

மன்னுவெள்ளியம்பலமுமாசறுபொன்னம்பலமும்
என்னுடையவீசற்கிவையிரண்டுண்டம்மானை
என்னுடையவீசற்கிவையிரண்டுண்டாமாமாயின்
இன்னுமிருப்பம்பலமொன்றில்லையோவம்மானை
இருப்பம்பலமடியாரிதயங்காணம்மானை அ௬



காஞ்சீபுரம்-வித்வான்

கச்சபாலய்யரவர்கள் பாடிய

கட்டளைக்கலிப்பா

கந்தித்தாளையடுத்தணிசங்கினங்கான்றநித்திலக்கச்சிட்டுக் கைகளால், பந்தித்தாளைமருட்டுமுலைச்சிலைப்பாவையாவுன்றன்பாதத்திலே வந்து, வந்தித்தாளையினிக்கைவிடாமலேமஞ்சமீதிலிருத்தி மகிழ்ச்சியாய்ச், சந்தித்தாளையமேனிணஞ்சித்திரசத்ரமேவுமவிநாயகநாதனே

விருத்தம்

திருக்கோலம்பாரதத்தைமருவவசழ்ந்துங்காணச் சிவனுக்கேற்பப் பெருக்கோலம்பாரதத்தையகற்றெணமானேமதவளேபிறங்கத்தூண்டும், மருக்கோலம்பாரகத்தைமருவுமுணவையுமாற்ற மருவியன்னைக் தெருக்கோலம்பாரதத்தைப்பொருவவைத்தான்விநாயகனுஞ் சீர்மையோனே ௮௮

அஞ்சனத்தையணிவிழிமான் மயிலைவிநாயகநுனைமேலானசயாலே, நஞ்சனத்தையும்விடுத்தாஞ்சமைத்துத்த மினியநலசதநீம் மிஞ்சனத்தையும்வெறுத்தாளவளை குவளைத்தாரினையே வேண்டுகின்றாள், கஞ்சனத்தையலையிவ்வாறலையவமைத்தானெனில்யாங்கருசலென்னே ௮௯

எத்தவளைக்காலெனுங்கண்ணன்மயிலை விநாயகவேளினிதினெல்லாம், பூத்தவளைக்சாத்தவளைப்பொடித்தவளைப் புனைந்தவளைடபோற்றுமன்பன், நீத்தவளைச்செவிமடவார்பலசோடி சிலகோடிநேர்ந்தமாதர், கோத்தவளைக்கரமடவாளிதுதெரியாதாசைகொண்ட கொள்கையேதே ௯௰

தித்திக்கத்திரிபுகவிபுனைபுலவோருளங்களிக்கத்தியாகமெங்குஞ்
சத்திக்கத்திரிதவிலாதளிக்கும்விநாயகமுகிலேதகைசேர்காது
குத்திக்கத்திரிபாகல்செவிபுனையாக்குழன்முடியாக் கோதையின்பஞ்
சித்திக்கத்திரிதலினுற்பயனிலைசற்றேமனந்தாள்சீர்மையோனே ௯௧

ஆகச்செய்யுள்-௯௮௭

## நமச்சிவாயப்புலவர் பாடிய

—*—

### விருத்தம்

அவிசெட்டிவாக்குசுரர்க்கிறை நிகராய் வளமருவு மமரரொன்றே தவிசெட்டி மரம்போலவளர்ந்திருப்போர் தமைப்பாடோந்னிநற்கிர ன், கவிசெட்டிதிருவடியைப்பசழ்வணிகனிசையுட னற்கவிஞர்தஞ் சைச், செவிசெட்டிபாலடைந்தானமதுகுறைவிட்டோடுஞ்சேறக்கண் மானே க

பாங்குயர்பளிக்குமேடை மொல்லுலையாமாருதந் துருக்கியாநீடும் பகர்நிலாக்கற்றைபதடியாழும் படரிருட்குழாங்குடைகரியா, ஓங்கி யசெக்கருள்ளிடுங்கனலாவுயர்பெரும்பனிகொடும்புகையா, உருவிலி யென்னுங்கொல்ல னென்பொன்னை யுருக்குமாறென்கொலோவுணை யாய், தூங்கியவிழியுங்காம்புடைக்கயிறுந்தூம்புறுகாம்பியற்குழலும் துவருடைத்துகிலுங்கவருடைக் கழியுந்தொறுவியருறிபடு குடமும் தாங்கிடைசையுமெய்யுமாய்நின்றுதண்ணளிபெய்யுமாமுகிலே, தாண்ட வராயாபாண்டவர்துதாகாழ்வில்சீர்க்கோவலாதிபனே உ

மெய்யாரப்புலிகாணப்பொதுவிலாட்டை
மிகவெடுத்திருமைபாளுக்கொருடங்கிந்தீர்
பையாரப்பணமெடுத்தீரையாநீர்தாம்
பாரறியச்சக்கரத்தைமாலுக்கீந்தீர்
செய்யார்த்தடம்புடைசூழ்கருவைவாழுந்
திருக்களாவீச்சுரரோந்தவரீர்தாங்
கையாரமழுவெடுத்துக்காட்டினாலுங்
களவுமைக்கொண்டேநான்காண்பிப்பேனே ௩

மான்பிடித்தீர்முயன்மிதித்தீரொவருங்காண
மன்றுதனிலாடெடுத்திர்மகத்துவங்க
ஊன்பெருத்தயானையைகொன்றுரித்தீரிப்பால்
உரப்பனதலைக்கறிக்குமுகந்திலாடா
மீன்பொதிந்தவிழிமடவாட்கொருபங்கீந்தீர்
டேலானவேடனெச்சின்மிகவேகொண்டீர்
கான்பொதிந்தகாளத்திநாதாவும்மைக்
கழுக்கள்வர்துசுற்றுவதுக்காணத்தானே ௪

பருப்பதங்களொவ்வொருஅன்பாவுக்கல்வளையாதபாரமேரு, சுரி ப்புடங்காப்போதிகைநீ செய்தபணிவிடையையென்ன சொல்வேனை யா, தருப்பொல்யுங்கரதலமுத்திருளட்பசாமீநின்றுய்பாலுன்னைக், க ருப்பணிமுன்றிருப்பணிக்கென்றுருப்பணிஞன் மருப்பொலியுங்கம லத்தோனே ௫

சேதுபதிகாத்தசமுத்துராமலிங்கதுரைராசசிங்கமந்திரி
மாதுபதிமுகதிருளப்பன்கொடியவரிவேங்கைகளைராசிக்கும்
கோதுறுபாமரக்காடுகருணீகர்மும்மைக்கோல்பானைமற்றோர்
மோதுபெரும்புளிக்காடுகல்விமான்களுநதிரிந்தான்போசந்தானே ௬

கட்டளைக்கலித்துறை

ஞாலத்தவரும்புகழ்குடந்தைபுரிநாதனெங்கோன்
காலப்புயல்வண்ணன்கண்மலர்சாத்தக்கருத்திலுன்னி
சீலத்ததவனம்மடியானென்றியார்க்குந்தெரியவிட்ட
சூலக்குறியல்லவோநாமம்யாதெனச்சொல்லியதே ௭

வியந்தநிசாசரனுமென்றுசந்திரனும்வெஞ்சனிக்குப்
பயந்தவனுமென்றுபானுவும்வந்துபணிபச்செம்பொன்
நயந்தருசெல்வக்கழுகாசலமதுநண்புவைத்துச்
செயந்தந்ததான்மதியாதவனெண்ணத்திரிந்தனனோ ௮

பொருகோட்டுவாரிநிலத்திற்குணங்கெட்டபூரியனைத்
தருகோட்டுக்கொன்றுணாத்தெண்பயன்வருந்தண்டமிழீர்
வருகோட்டுத்திங்கண்முடிக்கூத்தர்தில்லைவனத்தில்லாளர்
ஒருகோட்டுக்கற்பகமெல்லாந்தருந்தன்னையுற்றவர்க்கே ௯

வெறிவிலக்கல்

வண்டுறைசோலைமலைப்பரிகாரிகந்தாலிவளுக்
கண்டிடபாதவிக்காமச்சுரம்விடுமாதலினால்
பண்டுபழகினர்போலிந்தவேளையிற்பாயசத்தைக்
கொண்டுவந்தீரிதிற்றேடம்பிறந்திடுங்கோதையரோ ௰

படைத்தாமவேற்கண்ணிகண்ணீர்ப் ப்ரவாகப்பரவைபொங்கி
உடைத்தாலடைத்தற்குபாயமுண்டோநறையூற்றிசழித்
தொடைத்தார்மௌலியிற்சும்மாடுகட்டிச்சுமந்துசுமந்
தடைத்தாலடைபடச்சொக்கேயிதுவையையாறல்லவே ௰௧

ஏழேழுசங்கத்துடனிருந்தானென்றியம்புகின்றீர்
பாழேழ்மையுற்றிடுமானிடரோசொக்கர்பண்டறியீர்
ஆழேழுலகத்துக்கப்பாலிருந்தவடிகளும்பர்
வாழேழுலகத்துக்கப்பாலிருந்தமணிமுடியே ௰௨

காவொன்றுங்கைத்தலத்தண்ணல்செல்லூரன்கனிந்துநம்மை
வாவென்றழைத்திட்டமோதிரமேவண்மையானதமிழ்ப்

பாவொன்றுஞ்சற்றுமறியாதபுல்லர்தம்பக்கலிற்போய்த்
தாவென்றுகையெடுத்தேற்றாமலிட்டதடையிதுவே ௰௩

தடக்கும்பகிம்புரிக்கொம்பாசலப்பெருந்தந்திபட
நடக்குந்துரங்கத்துளசீதக்காதிநன்னாட்டினல்
மடக்குங்குடக்கொங்கைமின்னேயன்றெருவாயிலிலே
கிடக்குங்கவியும்பரராசரதங்கிரீடமுமே ௰௪

பூமாதிருந்தென்புவிமாதிருந்தென்னபூதலத்தில்
நாமாதிருந்தென்னநாமிருந்தென்னநல்லாவலர்க்குக்
கோமானழகமர்மால்சீதக்காதிகொடையிருந்த
சீமானிறந்திட்டபோதேபுலமையுஞ்செத்ததுவே ௰௫

மாகத்தத்தும்புகழான்பகைவேந்தர்மகுடம்பொடி
ஆகத்தத்தும்பரியான்சீதக்காதியணிமலரின்
ஏகத்ததும்பியிசைபாடுமார்பனிலென்மகட்கோர்
மோகத்தத்துண்டென்றுசொன்னாரிலைமுன்மொழிந்தவரே ௰௬

மைப்போதகமும்வளநாடுஞ்செந்தமிழ்வாணர்க்கருள்
கைப்போதகமனையான்சீதக்காதியைக்காத்திருந்த
அப்போதறிந்திலமிப்பாழ்ம்பணத்தினருமையெல்லாம்
இப்போதறிந்தனமீபாதவோபரிடத்திற்சென்றே ௰௭

கிட்டாதுபெண்குடிமார்க்கணவன்கிழவனல்ல
பட்டாணிச்சேவகனல்லும்பகலுமப்பாற்பிசக
ஒட்டான்பொய்பல்லமலைமேலிருக்குமுமக்குமிவள்
எட்டாதகொம்பிற்கனிகாண்பரங்குன்றிருப்பவனே ௰௮

மஞ்சுமஞ்சுங்கைப்பரராசசேகரமன்னன்வெற்பில்
பஞ்சுமஞ்சும்பதப்பாவைநல்லீர்படைவேள்பகழி
அஞ்சுமஞ்சுங்கயலஞ்சுமஞ்சுங்கடலஞ்சுமஞ்சும்
நஞ்சுமஞ்சும்வெற்றிவேலோவுனதுநயனங்களே ௰௯

வெண்பா

பாரார்சொல்லாரார்பறவைக்குலங்கடம்பிற்
சேராருங்கிள்ளைமுதற்செப்பலால் ஓரா
இரம்பையானந்தரங்கனின்பாங்கனன்பன்
பிரம்பையானந்தரங்கன்பேர் ௨௰

பங்கயமடமோரிகளும்பாவையர்கையுர்மணியும்
தங்கவளைசூழுந்தணிகையே-திங்கணுதற்
செங்கிலகத்தாள்புணிதன்செல்வன்கடற்கரைசேர்
செங்கிலகத்தாள்புணிதன்சேர்பு ௨௧

சொல்வாரார்வள்ளியுடன்றேய்ந்தருண்முத்தையனுக்கு
வல்வாராபர்மாணேயென்னமையறனை வில்வாய்ந்த
கெள்ளிருக்கும்வேளூர்சிறுகாலுண்பானுமிசை
புள்ளிருக்கும்வேளூர்புகுந்து ௨௨

சோலெடுத்துச்சோத்திரத்துங்கோப்பாண்டிமன்னன்வடி
வேலெடுத்துக்கோத்திரத்தில்விட்டிலனே-சால்படுத்த
பூபாளனுலும்போமோபுராதனத்திற்
கோபாலனுனகுணம் ௨௩

கட்டளைக்கலிப்பா

விதுவையம்பதியோசையைப்பேரிக விகையெனும்மதன்வில்லில்வண்டேற்றினன், மதுவையம்பதிவேகமோடெய்து குவலயமீதுகை வைக்கவென்னுள்ளமோ, குதுவையம்பதினாலும்புகழ்பெறுங்குழுணன்கன்னன்கொடைகளைமாற்றிய, புதுவையம்பதிவேங்கடராயன்பாற்புகலிவ்வேளையினென்றன்கைப்பூவையே ௨௪

ஆகச்செய்யுள்-௭௧௨

சுப்பிரமணியப்புலவர்

---

வாரிட்டுவிம்மிப்புடைத்திறுகியிளகிமணி மார்பிடமெலாங்கவர்து, வட்டமிட்டடியிட்டுநாளுக்குநாண்மேல்வளர்ந்து பூரித்துமுத்துமாலையிட்டிறுமாந்துபட்டவர்த்தன்யானைமத்தகத்தோடெதிர்த்து, வாதிட்டுமல்லிகைபூச்செண்டினைத்தினம் வாட்டப்படுத்தி வரையைப்போரிட்டுமங்கர்கண்மனஞ்சூறையிட்டுமேற்புளகித்துவச்சிர ரத்நப், புதுச்செப்பினைத்தோழமைக்கொண்டுபொன்னினைப் பொடியாவராவிமீதிற், பொட்டிட்டதென்னவேதேமற்படர்ந்துசெம்பொற் சரிகைவேலையிட்டுப், புனைதருரவிக்கையையிறுக்கிக்கிழித்துப்புறப்பட்டுவாசனைப்பூந், தாரிட்டுவாவரப்பளபளப்பாகி யுயர்தங்கக்கிணத்தையொத்துச்; சந்தனம்புநுகுகஸ் தூரிகர்ப்பூரஞ்சவாதுகுங்குமமணிந்து சந்த்ரகாவிச்சேலை வல்லவாட்டுக்குட்டதும்பி யண்ணுந்திடையினிற் தாங்காதெனக்கனத்தோங்கிமன்மதனுஞ்சலாமிட்டுநிற்கவுந்தான், சிரி

ட்டுநின் றுதக்தலைவணங்காமற்றிரண்டபூண்முலைகளுன்றன், திருமார்
பிலணைபவோருசிமேலே தவஞ்செய்கின்ற தொக்குமென்னுஞ், சிறு
ரோமரேகையாள்வந்தாள்பராக்கென்றுசேவித்துநிறகிருள்பார், திக
ழ்வடுகநாததுரைமெச்சுப்ரதானிசிவசுப்ரமண்ணியராசனே ௧

நையாண்டிபபுலவர்

---

விருத்தம்.

விற்கம்பத்தடியாலுமடியுண்டான்விண்ணவரைவேலைகொள்ளும்
நற்கம்பத்தடியானுந்தாக்கவசையானுநேர்நாதன்கோயில்
பொற்கம்பத்தடியினின்றுவண்மீகத்தானை யுன்னிப்போற்றினோர்குச்
சொர்க்கம்பத்தடியப்பான்மோட்சம்பத்தடியாகத்தோற்றுந்தானே ௧

கட்டளைக்கலித்துறை

செங்கைவரிச்சிலைதங்கமதைச்சம்புத்தீவுதன்னில்
எங்குவைத்தாலும்பள்ளிகொண்டான்றமிழ்க்கீவனென்றே
திங்களிரவிதினஞ்சுற்றிக்காக்கத்திரைசுருட்டுங்
கங்கைக்குமுத்தரித்தேயொளித்தானுமைகாதலனே ௨

மேலாடையின்றிச்சவைபுகுங்காலிந்தமேதினியோர்
நூலாயிரம்படித்தாலுமெண்ணார்நுவல்பாற்கடலோ
மாலானவரணிபொன்னுடை கண்டுமகளைத்தந்தே
ஆலாலமீந்ததுதோலாடைசுற்றுமரன்றனக்கே ௩

வள்ளிகொண்டான்மயிலேறிக்கொண்டான்மதிபோலுமலை
வெள்ளிகொண்டான்விடையேறிக்கொண்டான் விண்ணவர்க்கமுதம்
துள்ளிகொண்டான்புள்ளிலேறிக்கொண்டான்சுபசோபனஞ்சேர்
பள்ளிகொண்டான்புகழேறிக்கொண்டானென்றுபார்க்கவென்றே ௪

எல்லீசு

செந்தமிழ்ச்செல்வனுமோராயிரந்தலைச் சேடனும்யாழ்
சுந்தரத்தோடிசைவல்லோனும்யாவருந்தோத்திரஞ்செய்
கந்தனைச்சொல்லுங்கவிராமசந்த்ரனைக்கண்டுவெட்சி
யந்தரவெற்பிழிபாதாளந்தேடியடங்கினரோ ௫

இராமசந்த்ரக்கவிராயர்.

வணக்கம்வருஞ்சிலநேரங்குமரகண்ட
வலிப்புவருஞ்சிலநேரம்வலியச்செய்யக்

கணக்குவருஞ்சிலநேரம்வேட்டைநாய்போற்
கடிக்கவருஞ்சிலநேரங்கயவர்க்கெல்லாம்
இணக்கவருநம்படித்தமிழைப்பாடிப் பாடி
எத்தனைநாடிரிந்துதிரிந்துழல்வேனையா
குணக்கடலேயருட்கடலேயசுரரான
குரைகடலைவென்றபரங்குன்றுளானே ௭

மாசற்றிடுதிருமேனியின்மறுவுற்றதுபோல
மாரப்பயல்கணைதைத்திடவஞ்செய்தனனேயோ
காசத்தனைபுண்ணானதுதுட்டத்தனையளவாய்க்
கைகயத்தனையானுன்மகண்மெய்யெத்தனைநேரமோ
வாசற்படிகடவாதவண்மயலெப்படியானாள்
மதனன்சிலுகறியாதவண்மயலெப்படியானாள்
ஆசைப்படுவாரோபுருடரின்மேன்மடவார்கள்
அருணாசலராயாதமிழறியும்பெருமானே ௮

புல்லுக்கட்டும்விறகுஞ்சுமந்தபேர் பூர்வகாலத்துப்புண்யவசத்தினால், நெல்லுக்கட்டும்பணக்கட்டுங்கண்டபின் நீலக்கல்விற்கடுக்கனும்போடுவார், சொல்லுக்கட்டும்புலவரைக்கண்டக்காற்றூறிப்பாய்ந்து கதவையடைத்தெதிர், மல்லுக்கட்டும்மடையரைப்பாடவோ மலையச்சாரலில்வாழ்பெரியம்மையே ௬

வெண்ணெய்க்கட்டியுஞ்சீனியுமுட்டலாம்
விக்கிக்கொள்வதற்கென்செய்யலாமொரு
பெண்ணைக்கட்டிக்கொடுத்திடலாம்பிள்ளை
பெறுவதற்குமுடன்படுவார்களோ
பண்ணைக்கட்டியமென்மொழியாளுந்தம்
படுக்கைவீட்டில்வந்தாளேயவடனைக்
கண்ணைக்கட்டியணையாமலென்விட்டீர்
கழனிசூழும்பழனிவேலரே ௯

ஏதிலேவறியவர்க்குமினியகவிப்புலவருக்குமிரங்கியந்தப்
போதிலேதனங்கொடுக்குந்தஞ்சைநகர்க்குருவப்பூபனெற்குக்
கோதிலேகிடந்துழலும்பலரிடத்திற்சென்றுதமிழகூறுவண்ணங்
காதிலேயொட்டிட்டுதொடையின்மேற்தசைகடுக்கன்றுணிட்டானே.

வம்பிறைக்குங்கடம்பிறைக்கும்பெரும்பிறைக்கு நிகராகவளர்ந்தவொற்றைக், கொம்பிறைக்குந்தாதையராங்கடவுளைக்காரோணர் கொன்றைநல்கார், அம்பிறைச்கும்விழிப்பரவையாயர் குழல்கொல்ல

னுலையன்விற்காயந்த, செம்பிறைக்கும்வெண்பிறைக்கும் கரும்பிறைக்குமொருத்திதனித்தென்செய்வாளே ௰உ

மூங்கிலிலேயொளித்திருந்தான்முக்கண்சாமி
முதியகடற்போய்ப்படுத்தான்முகுந்தசாமி
தாங்கமலப்பொகுட்டுறைந்தான்றலைநாற்சாமி
தடவரையிலுழன்றுநின்றான்றகப்பன்சாமி
வாங்கியுண்ணவழிகாத்தான்வயிற்றுச்சாமி
வாணருக்கிங்குகவுவராமற்றோர்சாமி
ஓங்கியசீர்மயிலையிற்பொன்னப்பசாமி
உதவியவேங்கடசாமியுசிதவேளே ௰௩

வஞ்சகத்திலொன்றானைத்துதிக்கைமிகத்திரண்டானை வணங்காருள்ளே, அஞ்சாணமூன்றானைமறைபொழிநால்வாயானையத்தனுகித்துஞ்சவுணர்கீகஞ்சானைசென்னியணியாறானைத்துகளேழானைச், சேஞ்சொன்மறைக்கெட்டானைப் பரகிரிவாழ்கற்பகத்தைச் சிந்தைசெய்வாம் ௰௪

மூன்றுவெண்பா

சலமேதோசங்கந்தாபூணாரந்தாமே
கலைதாநற்புங்கவன்மாலகாணுப்-புலவுடைய
சங்கராகோணகலாமதியக்கோடீர
சங்கராசோணசலா ௰௫

சீரிலங்குமாடகூடவீதிவீற்றில்லையான்
திருவிருக்குமார்பனெங்கடிருமலைக்குமுன்புபோய்
நீரிநந்துமாலைகேளுமவன்மறுத்துரைக்கிலென்
னெஞ்சுசொல்லும்வார்த்தையாகநீங்கள்சொல்லும்வண்டுகள்
வாரியொன்றுபாயிரண்டுமாலைமூன்றுநாலுவேய்
மரியமைந்துகங்குலாறுமாரனேழுவாடையெட்
டாரமொன்பன்றில்பத்தடங்கலும்மொறுக்குமால்
அத்தனைக்கெலாமிலக்கெனுவியொன்றுகாணுமே ௧௬

ஓரானைவனத்தேதிருவொண்ணுவனிழற்கீழ்
உறையும்பெருமான்வீதியுலாவுமபவனிக்கே
கேராகநடப்பேன்வளைபறிபோனதுகேட்பேன்
நில்லென்றுதடுத்தால்வகைசொல்லென்றுமறிப்பேன்
போரானையைவிட்டான்முலையீரானையைவிடுவேன
பொழியம்புதொடுத்தாலிருவிழியம்புதொடுப்பேன்

தோராவழக்கிட்டால்வகைவாராவழக்கிடுவேன்
தொலலைக்கணெகாண்டோவகைவெல்லப்பெருவேனே ௰எ

அடல்கொண்டெழுசூலப்படையாரூர்பெருமானார்
ஐயகம்பசொன்றேயெமதகவாசலில்வந்தார்
கடுகும்படிசென்றேபலிகொண்டேயெதிர்நின்றேன்
சைவந்தனமென்றாரிதுசைவந்தனமென்றேன்
மடவன்னமதென்றாரிதுமடவன்னமதென்றேன்
வல்லோதனமென்றாரிதுவல்லோதனமென்றேன்
கொடுவந்தனமென்றாரிதுகொடுவந்தனமென்றேன்
கொள்ளார்பலிசெல்லாரவர்கேட்பாடறியேனே ௰அ

வீமனுக்குமைந்தனார்வேதனுக்கும்வேதனுக்குமைந்தனாரீசனுக்கு, காமக்குமைந்தனார் வீமன்தம்பிகந்தனுக்கு மாமனார்காமன்றானே மாமனுக்குமூன்றமையன்றந்தைகாலன்வையகத்திலிம் முறைமைவழங்கலாலே, ராமனுக்குச்சீதைதங்கயாகவேண்டும் ராவணனுக்குத் தகப்பன்ராமன்றானே ௰அ

(வீமன்-கருடனுக்குஇறைவனாகிய - திருமால்) வே-மூங்கில்-மைந்தன்சிவன்)(காமன்-கற்பகத்துக்கரசனாகிய இந்திரன்) (வீமன்தம்பி அருச்சுனன்) (கந்தனுக்குமாமன்.காமன்-இந்திரன்) (மாமன்-குதிரைக்கிறைவனாகிய நகுலன், தமயன், தருமன், தந்தை, இயமன்)(இராமன் இரவுக்கரசனாகியசந்திரன்)(இராவணன்இருள்நிறமுடையமன்மதன்

வெண்பிள்ளைப்பிறைநோக்குங்கருமபிள்ளைக் குறிபார்க்கும்வேதாவென்னும், மண்பிள்ளைதிறந்தரற்றுங்கிளிப்பிள்ளைமொழிபயிற்றுமடவார்க்கெல்லாம், எண்பிள்ளைசிறுபிள்ளையெனக்களோ வொருபிள்ளையெளியேன்பெற்ற, பெண்பிள்ளைபடுந்துயரம்பெரியபிள்ளைக்காரொடுத்துப்பேசுவாரோ உ௰

விறகுதறிக்கக்கறிநறுக்கவெண்சோற்றுப்புக்கடகுவைக்கப்
பிறகுபிளவுகிடைத்ததென்றானலாறுகப்பிளந்துகொள்ளப்
பறகுபறகென்றேசொறியப்பதமாயிருந்தபாக்குவெட்டி
இறகுமுளைத்துப்போவதுண்டோவெடுத்தீராயிற்கொடுப்பீரே உக

கட்டளைக்கலித்துறை

இரவலனேயுனக்கில்லாததென்னவியமென்ன
பரவுணவேதுசுவைபற்றதென்னசொற்பான்மையென்ன

தரவுரைசெய்தி-வென்றனதற்கொன்றுஞ்சாற்றிலன்யான்
வர திருவேங்கடநாதாவென்றேன்பொன் வழங்கினனே

இல்லாதகென்ன-திரு-இதயமென்ன-வேம்-உணவேது -கட்ன்-சுவையற்றதென்ன-நா சொற்பான்மையென்ன - தா (இஃதிற்போந்த பொருள் திருவேங்கடநாதாவென்பதாம் உ.உ

## விருத்தம்

கல்லாதவொருவனைநான்கற்றாயென்றேன்
காடெறியுமவனைநாடாள்வாயென்றேன்
பொல்லாதவொருவனைநானல்லாயென்றேன்
போர்முகத்தையறியானைப்புலியேறென்றேன்
மல்லாரும்புயமென்றேன்சூம்பற்றோளை
வழங்காதகையனைநான்வள்ளலென்றேன்
இல்லாதுசொன்னேனுக்கில்லையென்றான்
யானுமென்றன்குற்றத்தாலேகின்றேனே உ௩

ஆவீனமழைபொழியவில்லம்வீழ
அகத்தடியாண்மெய்நோவவடிமைசாவ
மாவீரம்போகுதென்றுவிதைகொண்டோட
வழியிலேகடன்காரமறித்துக்கொள்ளச்
சாவோலைகொண்டொருவனெதிரேசெல்லத்
தள்ளவொண்ணாவிருந்துவரச்சர்ப்பந்தீண்டக்
கோவேந்தருழுதுண்டகடமைகேட்கக்
குருக்களோதட்சணைதள்கொடுவென்றாரே உ௪

கல்லைத்தான்மண்ணைத்தான்காய்ச்சித்தான்குடிக்கத்தான்கற்பித்தானா, இல்லைத்தான்பொன்னைத்தானெனக்குத்தான் கொடுத்துத்தானிரட்சித்தானா, அல்லைத்தான் சொல்லித்தானாரைத்தா னோவத்தானேயோவெங்கும், பல்லைத்தான்றிறக்கத்தான்பதுமத்தான்புவியிற்றான் பண்ணினானே உ௫

வஞ்சகர்பானடந்தலைந்தகாலிற்புண்ணும்
வாசற்றாழ்முட்டுண்டதலையிற்புண்ணுஞ்
செஞ்சொல்லைநினைந்துருகுநெஞ்சிற்புண்ணுந்
தீருமென்றேசங்கரன்பாற்சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்லபிரம்படியின்புண்ணும்வேடன்
கொடுங்காலாலுதைத்தபுண்ணுங்கோபமாசப்
பஞ்சவரிலொருவன்வில்லாலடித்தபுண்ணும்
பாரென்றேகாட்டிநின்றான்பரமன்றானே உ௬

கள்ளிக்கேன்முள்வேலி முனைக்கேன்கடிவாளங்கறுப்பில்லாத உள்ளிக்கேன் பரிமளங்களுநேர் நிலத்துக்கேன்விதைகளொடித்துப் போடும், சுள்ளிக்கேன்கோடாலிதுடைப்பக்திற் கேன்கவசஞ்சுமமா போகும், பள்ளிக்கேன் திவீரமழவரங்கபூபனெனும்பட்டநதானே

கயக்காவிலாறுங்குழம்பிற்பிரசண்டர்
    காராகொடைச்செங்கையாரோதன்மைந்தா
இயக்காநின்மார்பிற்செழும்புன்னையந்தார்
    இப்போதுநீநல்கிலென்பேதைமார்பில்
சயக்காமவேளம்புதையாதுமுத்துத்
    தாமஞ்சுடர்சந்தனம்பூசினாலும்
செயக்காதுவேயோசெவிக்கும்பொறுக்கும்
    தீயென்னமீளாதுதிங்கட்கொழுந்தே ௨௮

சொன்னமன்னமாடைதந்தான்வீதியில்வெற்றிலைமடித்துச்சுருளுந்தந்தான், கன்னவின்மோதிரந்தந்தான்சரப்பணிதந்தானிரட்டைக்கடுக்கன்றந்தான், செங்நெல்விளையூர்தந்தான்பேர்தந்தான் மல்லையில்வாழ்சிவந்தானுங்கட், கென்னதந்தானென்றவர்கட் கெத்தனையுத்தனையுத்தரந்தானியமபத்தானே

## நடுவெழுத்தலங்காரம்

அத்திரம்வேலாவலயமிராசியொன்றிற்
    கமைந்தபெயர்மூன்றினிடையக்கரத்தால்
மெத்தநடுக்குற்றனைவந்தடைந்தேனீந்த
    விதனமகற்றிமேற்றையெழுத்தாராறில்
பத்துடையானைதகடிந்துபெண்ணாச்செய்து
    பரிவினுகர்வோனிருதாள்பணிந்துபோற்றும்
சித்தசனேதெளியசிங்கன்றவத்திற்றோன்றுஞ்
    சீதாராம்ப்ரபலதியாகவானே

அத்திரம், பகழி-வேலாவலயம் கடல், இராசி, கன்னி, இவற்றினடுவெழுத்துக்கடன். மற்றையவெழுத்து:பழி-கல்-கனி பழியால்இராவணனைக்கொன்று, கல்லைப்பெண்ணாகச்செய்து, சவரியின்கனியைத்தின்றவன்-திருமால் ௨௯

கல்லாலயமாந்தேவருமாங்கழுதைகசடர்பொதிசுமக்கும்
    கடாவோவுழுதுபயிரிடற்காங்கட்டம்பன்றிக்கிரையாகும்
புல்லேலநீசர்வாகனமாம்பொதியுஞ்சுமக்கும்பிணிமெனிலோ

பூசிமுடித்துமறையோர்க்குப்பொருளையீந்துபுகழெய்தும்
மல்லார்குட்டிச்சுவரொனிலோமாடுமுனைஞ்சுமறைவாகும்
மதியாத்துடைப்பங்காணொனிலோமாடகூடங்களைவிளக்கும்
அல்லாதுழுத்தன்றனக்கிணையாயானாயனைப்பேண்புவிமீதில்
அவனைக்குறித்துக்கூறுமிடத்தவனுக்கவனேசரிகானே ௯௰

வீரவெண்டையப்பராதாபர்தியாகராசர்கமலைசூழ்
வீதிகண்டுபவனிகண்டுவிந்தைகண்டுபந்தியாய்த்
தூரநின்றபூவைகாளடுத்துநின்றகிள்ளைகாள்
துன்பமெயலாதுபாவிசுகமறிந்ததில்லையால்
மாரனாப்புபட்டகாயமாறுதில்லையிரவெலாம்
மங்கைமார்தொடுத்த சண்டைமாறுதில்லைபென்செய்வேன்
ஆரிருந்துமுகவியில்லையென்றனுசையொழியுமோ
அதுவுமில்லைவிதியைநொந்துமாவதில்லைகாணுமே ௯௧

சத்தபங்கி

திமிரமருதபுலாதிகளேதருதேடரிதாய்மாறுஞ்
செனனமகாமால்வசமேமதமுறுசிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவேகூறுங்
குருபரகோலாகலனேவிதியொடுகுறுகியமிடிதீராய்
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமேதேறுங்
நவிமகள்சேர்வேடுவனேபுதுமணநறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனேமீறும்
மாகரம்வலாயுதனேமுதுமறையறுமுகமுருகோனே ௯௨

திமிரமருதபுலாதிகளேதருதேடரிதாய்
மாறுஞ்செனனமகாமால்வசமேமதமுறுசிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள் கூடெனவே
கூறுங்குரு-பரகோலாகலனே-விதியொடு-குறுகியமிடிதீராய்
தேறுங்நவிமகள்சேர்வேடுவனே-புதுமண்-நறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணர் ஆடவனே
மீறுமமரகரவேலாயுதனே-முதுமறை-அறுமுகமுருகோனே

நவபங்கி

அரிமருகாகருணாலயனேமெடவாரணனபேர்தன்
னரியிமையோர்சூழ்புனிதாபுலவடரயிலமர்பொற்கரனே

கரிமுகனேயசகோதரனேபடிகாரணனேநாதங்
கதியுறவேவானவனேநலமிகுகயிலையனற்குருவே
குரவலர்நீபமணிப்புயனேவடிகூரமுதேயோதுங்
குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனேகோதின்
மதியகமேவாழ்குமாரகுலவியமயிலைமலைக்குகனே ௧௧

அரிமருகாகருணையனே இட ஆரணனோ
போதன்னரியிமையோர்சூழ்புனிதா புலவடா அயிலர் பொற்கரனே
கரிமுகனேயசகோதரனே படி காரணனே
நாதங்கதியுறவேவானவனே நலமிகு கயிலையனற்குருவே
குரவலர்நீபமணிப்புயனே வடி கூரமுதே
ஓதுங்குருமணிசேர்மார்பினனே உலகருள் குயிலுதவுத்தமனே
மாரகதமாமயில்வாகனனே கொடி வாரணனே
கோதின்மதியகமேவாழ்குமாரா குலவிய மயிலைமலைக்குகனே

## சத்தபங்கியின்பிரிவு

## கட்டளைக்கலித்துறை

இயிரமருந்தபுலாநிகளைதருதேடரிதாய்
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவே
நாதவிநாயகதேவசகோதரநாடொறுமே
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனே ௧

## கொச்சகம்

தேடரிதாய்மாறுஞ்செனனமாகாமால்வசமே
கூடெனவேகூறுங்குருபரகோலாகலனே
நாடொறுமேதேறுங்கவிமகள்சேர்வேடுவனே
ஆடவனேமீறுமாகரவேலாயுதனே ௨

## கலிவிருத்தம்

மாறுஞ்செனனமாகாமால்வசமே, கூறுங்குருபரகோலாகலனே
தேறுங்கவிமகள்சேர்வேடுவனே, மீறும்மாகரவேலாயுதனே ௩

## சிந்தடி வஞ்சிவிருத்தம்

மதமூறுசிறுமையின்மதியாலே, விதியொடுகுறுகியமிடிதீராய்
புதுமணநறுமலர்புனைமார்பா, முதுமறையறுமுகமுருகோனே ௪

## குறளடிவஞ்சிவிருத்தம்

சிறுமையின் மதியாலே, குறுகியமிடிதீராய்
நறுமலர்புனைமார்பா, அறுமுகமுருகோனே ௫

வெண்பா

தேடரிதாய்மாறுஞ்செனனமகாமால்வசமே
நாடொறுமேதேறுநவிமகள்சேர் வேடுவனே
ஆ வனேமீறுமரகரவேலாயுதனே
கூடெனவேகூறுங்குரு ௬

நவபங்கியின்பிரிவு

அரிமருகாகருணாலயனே, கரிமுகனேயசகோதரனே
குரவலர்கீபமணிப்புயனே, மரகதமாமயில்வாகனனே ௧
புலவடரயிலமர்பொற்கரனே, நலமிகுகயிலையனற்குருவே
உலகருள்குயிலுதவுத்தமனே, குலவியமயிலைமலைசகுகனே ௨

கட்டளைக்கலித்துறை

அரிமருகாகருணாலயனேதிசபூரணனே
கரிமுகனேயசகோதரனேபடிகாரணனே
குரவலர்கீமணிப்புயனேவடிகூரமுகே
மரகதமாமயில்வாகனனேமகோடிவாரணனே ௩

கொச்சகம்

ஆரணனைபோதனரியிமையோர்சூழ்புனிதா
காரணனேநாதங்கதியுறவேவானவனே
கூரமதேயோதுங்குருமணிசேர்மார்பினனே
வாரணனேகோதின்மதியகமேவாழ்குமரா ௪

சந்தவிருத்தம்

போதகனரியிமையோர்சூழ்புனிதாபுலவடரயிலமர்பொற்கரனே
நாதங்கதியுறவேவானவனேநலமிகுகயிலையனற்குருவே
ஓதுங்குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
கோதின்மதியகமேவாழ்குமராகுலவியமயிலைமலைக்குகனே ௫

கலிவிருத்தம்

போதனரியிமையோர்சூழ்புனிதா
நாதங்கதியுறவேவானவனே
ஓதுங்குருமணிசேர்மார்பினனே
கோதின்மதியகமேவாழ்குமரா ௬

குறளடிவஞ்சிவிருத்தம்

அயிலமர்பொற்கரனேகயிலையனற்குருவே
குயிலுதவுத்தமனே, மயிலைமலைசகுகனே ௭

தி வாரணனே, படிசாரணனே
வடிகூரமுதே, கொடிவாரணனே ௮

வெண்பா

ஆரணனே யோதன்னரியிமையோர்சூழ்புனிதா
கூரமுதே யோதுங் தருமணிசேர்-மார்பினனே
வாரணனே கோதின் மதியகமேவாழ்குமாரா
காரணனே நாதங்கதி ஆக-௬௰ ௯

ஆகசெய்யுள்-௭௰௨

---

# மதுரகவிராயர்

---

வெண்பா

துங்கவரைமார்பா துரைரக்கபூபதியே
இங்கேபோர்புதுமையியம்பக்கேள பங்கயக்கை
ஆயிழைக்குநான் றுதலேந்துகுழையாறுமுலை
மாவிழியேழாமதி ௧

அந்திவெடிமுல்லையரும்பெடுத்துநான்வர்தேன்
விந்தைபதாநாயகற்குமெல்லியலே-சுந்தரஞ்சேர்
செண்டுகட்டவேண்டிற்றிருவிளக்கிலேதிரியைக்
கொண்டுவந்துபோட்டுக்கொளுந்து ௨

சித்திரமாமண்டபங்கடென்றல்வருசாளரங்கள்
பத்தியுலர்வும்பளிககறைகள்-இத்தனைவி
டிக்குச்சிலையானிருப்பிடமென்றூர்சொன்ஞ
றிக்குச்சிலைபாலுங்கின்று ௩

நீளத்திருந்துழன்றுய்நீங்காநிழல்போல
நாளைக்கிருப்பாபோநல்குமவே காளத்தி
நின்றைக்கேசென்றக்கானீயெங்கேநானெங்கே
இன்றைக்கேசற்றேறயிரு ௪

விருத்தம்

உலங்கொண்டமணிப்புயனே பிரம்பூரானந்தரங்கா வுன்பாற்செல்
வலங்கொண்டகருடனையாமிடங்கண்டோமெழினையான் வளத்தே
கண்டோம், பொலங்கொண் மணிமாடமீமிசையிற்புறாவழும் பு

வையென்னுந், தலங்கண்டோமினதுநகைமுகங்கண்டோமினிவேண்
டுந்தனங்கண்டோமே ௫

## இ ரா ம க வி ரா ய ர்

கார்படைத்தகரதலத்தான்றுரைதிருவேங்கடமளித்தகன்றுவெங்கும்
பேர்படைத்தவாணந்தரங்கமகிபாலாவின்பிரம்பூர்நாட்டி
னேரிழைக்குவிழியேழுமுலையாறுகாலைந்துகேற்றிநான்கு
பாரிடத்திலிப்புதுமைகண்டுவர்தேனிதன்பயனைப்பகர்ந்திடாயே ௬

கொக்குப்பறக்கும்புறாப்பறக்குங்குருவிபறக்குங்குயில்பறக்கும்
நக்குப்பொறுக்கிகளும்பறப்பர்நானேன்பறப்பேனராதியனே
திக்குவிசயஞ்செலுத்தியுயர்செங்கோனடாத்துமரங்காநின்
பக்கமிருக்கவொருநாளும்பறவேன்பறவேன்பறவேனே ௭

மூவொன்பதென்பதிலோர்நாளில்லைமொய்வளைத்திற்
ருவுங்கனிமிருகங்காணில்லை-நேரே
வளையாநடையில்லைவாரிதுகவிம்மும்
முலையாளையான்முயங்குதற்கு ௮

சென்னபுரிவந்துசிவனுயினேனல்ல
அன்னமதுகாணுதவனுகி மன்னுசிரங்
கைக்கொண்டரைச்சோமன்கட்டிச்சடைமுறுக்கி
மெய்க்கொண்டநீறணிந்துமே ௯

தனம்பொன்பணம்படைத்தசம்பரிபாப்பின்னோர்
முனம்பிச்சைகள்வனிலமூட்டை கனம்பெற்ற
மீதலத்தும்போற்றுகின்றவேதாசலாநினைப்போல்
ஈதலததமார்கிலரோயென் ௰

சேராநகளெல்லாம்வெண்டிங்களணமேசேர்ந்தால்
ஆராவமுதாமெனுச்சரியம ஓராமல்
நானிவாசைமேவநரசையன்றந்தருளும்
சீனிவாசையன்மணஞ்செய்து ௰௧

அஞ்சமபினுலெய்துமன்னநடைக்கன்னிசையை
அஞ்சம்பினுலெய்துமப்பாவி நெஞ்சமுறும்
காவிக்கணந்தார்கலசைவேதாசலனே
காவிக்கணந்தார்கடந்து ௰௨

### விருத்தம்

மதுமேவுகுவளையணிபுயனென்றேனே
    மாதவனைஎருழ்கலைசைநகர்மன்றேனே
முதுநீறிதெய்வசிகாமணிமாலுக்கு
    மூக்கவொருமகவினைநான்மொழிந்திட்டேனே
பதுமாசனத்திமகனென்மேற்சண்டை
    பண்ணுகின்றானவரைப்படுந்துன்பத்தால்
இதுவேதாசலமென்றேனிதற்கென்னன்னை
    ஏதேதோவைதுபழியிடுகின்றாளே

தூங்கமலன்கலைசைவேதாசலன்பே: லுருவமைக்கும்பொற்பிலாலென்றாங்கயலார்சொலக்கேட்டுவாணியரிபாலுவாக்கவடைந்தாளன்றேன்தாங்குவனம்போயிருந்தானரனிடத்திற்சொலப்பித்தாய்ச்சுழலலுற்றான், ஏங்கியந்தத்திறங்கற்பா னிவனுவில்வீற்றிருந்தா ளெழிற்கண்மடனே

ஆகசெய்யுள்-௱௮௬

---

### பொது



பலவித்துவான்கள்பாடல்

---

### கட்டளைக்கலித்துறை

மாப்பிட்டெனுஞ்சிறுதாட்பிட்டுக்காகமண்ணைச்சுமந்தே
ஆப்பிட்டுக்கொண்டடிபட்டசொக்கேசருக்காசைப்பட்டுச்
சேப்பிட்டுமைம்பிட்டுப்பூமாலைகந்தந்திமிர்ந்துமஞ்சட்
காப்பிட்டுவாழ்க்கைப்பட்டாள் கூடல்வாழுங்கயற்கண்ணியே ௧

காமாகடமறகண்ணிகோபம்பொறுளென்றன்கண்பனிநீர்
சோமான்காத்திற்றுடைக்கிரிதேம்செகமேறும்மெச்சும்

கோமான்கரத்திற்குனிசிலேராயன்குகன்சிலம்பில்
மாமாவின்காலல்லவேமன்னவாவுன்மலர்க்காமே ௨

கைத்தலந்தன்னிற்பசும்பொன்வளையல்கலகலெனச்
சத்தசொலிக்கிடநூபுரம்பாதச்சதங்கைகொஞ்சத்
தத்திமியென்றுநடஞ்செய்சம்பீசர்தஞ்சந்நிதிப்பெண்
செத்தகுரங்கைத்தலைமேற்சுமந்துதிரிந்தனளே ௩

பரிக்கொம்புபோலப்பகவான்சரிதைபகர்ந்திடினும்
உரிக்கம்பகாயினுமீயார்களுடனேடிச்சென்று
கரிக்கொம்புபோன்முலையின்னருக்கீவரக்கன்னியர்கை
நரிக்கொம்புதானுமுண்டோவேங்கடாசலநாயகனே ௪

கேளுங்கநளையின்னைங்காநின்னேபராக்கிட்டிமத
வேள்வந்துபூசலிடமதிகாயவெருண்டெனது
தாள்வந்துபற்றிமுன்வாய்புதைத்தேனின்றுதாழ்மைசொன்ன
நாளந்தநாளல்லவேயிந்தநாளந்தநாயகர்க்கே ௫

கற்றனமறக்கும்புதியனகேட்பனகண்டபன்னுள்
உற்றனவொக்குமொருபகற்காண்பனவொன்னலரைச்
செற்றனவொக்குஞ்சிறுநகைசெய்வனதீயர்செய்யப்
பெற்றனபெற்றியெண்ணுன்மறப்பானெம்பெருங்குன்றனே ௬

பக்குவமாகக்கவிநூறுசெய்துபரிசுபெற
முக்கரணம்மெதிர்பல்காலும்போட்டுமுயன்றிடினும்
அக்கபோவெனும்லோபனைப்பாடியலுத்துவந்த
குக்கனையாண்டருள்வில்வவனத்துக்குயிலமைமையே ௭

பொல்லாமகாபயலெனநேரமுஞ்செய்யும்போருமெனைக்
கொல்லாமற்கொல்லுமதியுங்கடலுங்குயிலுமிவை
எல்லாந்தொலைந்ததென்றெண்ணினன்பாவியிப்போதுன்மனம்
கல்லாயிருக்குமென்றெவ்வளவேனுமுன்கண்டிலனே ௮

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியிற்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிகயாம்
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
ஆலமுகந்தருளம்பலவாவென்னையாண்டருளே ௯

நாலடிவள்ளுவராமேயிப்பாலைநடந்தபெருங்
காலடிமேலடிமாவடியேசட்டுரவிற்பட்டும்
பாலடிசில்வெண்ணெயுண்டோனரங்கன்பணிவனாயில்
வேலடிமுள்ளுக்குபாயமிட்டேகும்விழைவுகன்றே ௰

புலியைச்சொடுத்துப்பசுவாங்கியோர்புலிப்பூங்குழலாள்
புலிமைப்பசுதின்னவிட்டுப்புலியைத்திறுதகற்றிப்

புலியைப்பணைத்துப்பலகாரஞ்செய்துபொருந்துமுகப்
புலியைக்களிப்புடன்சாறுவைத்தாடன்புருடனூர்க்கே ௰க

(புலி,வேங்கை,பொன்) (புலி,மயிர்ச்சாந்து) (புலி,புல்) (புலி,வரி
நெல்) (முருகப்புலி, முகத்தாமரை) (சாறு,திருவிழா)

வேளாமழகன்றனாசிசக்காதிபென்வீட்டிலொரு
நாளாகிலும்வரக்காணகிலனேயெந்தநாளுமவன்
தோளாலணையுஞ்சுகவாலிபத்தைத்தணிக்கவொரு
வாளாப்பிறந்தனையேமைந்தனேயென்னவாயுனக்கே ௰உ

நடந்தாளொருகன்னிமாராசசேகரிநாட்டிற்கொங்கைக்
குடந்தானசையவொயிலானைதங்கண்டுகொற்றவருந்
தொடர்ந்தார்சந்நியாசிகள்போகம்விட்டார்சுத்தசைவரெல்லாம்
மடந்தானடைத்துச்சிவபூசையுங்கட்டிவைத்தனரே ௰ந

நாலாகலைதெரியேகம்பவாணர்நன்னாட்டில்வளர்
சேலாகக்கண்கள்படைத்தபெண்ணேயென்றிகழும்வயி
றுலாகவுமல்குற்பாம்பாகவுமவ்வணையின்மிசை
மாலாகயான்பள்ளிகொள்ளவந்தேனுன்றன்மாளிகைக்கே ௰ச

அரவிந்தகண்பன்சுதன்றம்பிமைத்துனனண்ணன்கையில்
வரமுந்திபாயுகம்பூண்டவன்காணுமற்றங்கவனே
பரமன்றிகிரியையேந்தியமைந்தன்பகைவன்வெற்பை
உரமென்றெடுத்தவன்மாற்றான்றன்சேடகினொண்டொடியே ௰ரு

சங்கரன்றேவிதமையன்மனைவிதனக்குமூன்றாம்
மங்கையரேறியவாகனங்காணுமற்றங்கவளோ
கொங்கைகளீனாந்துடையவளாயிக்குவலயத்தில்
எங்குந்திரியும்வயிரவரூர்தியென்றேநினையே ௰சு

மாத்தானைப்பித்தனைமாடேறுவானைமதகரித்தோல்
போர்த்தானைவேதப்பொடிபூசுவானையிப்பூதலத்தென்
ஆத்தாளுடனெதிர்த்தம்பலத்தேயென்றுமாடிநிற்குங்
கூத்தாடிபையலுக்கோமகளேமயல்கொண்டனையே ௰எ

கானவர்தான்றினைகொய்தனரோகண்டகண்ணனோ
தேனவர்பண்டினங்காள்கிள்ளைகாளிசமுகசானைவிட்டுப்
போனவன்றானல்லவோநெடுங்கானிற்புனமல்லவோ
நானவன்றானல்லவோசொல்லநீவேண்டுமெங்ககண்டே ௰அ

தாராளமென்கடிருகின்றைச்சேனன்சபிலைக்கிழபால்
நீரார்முகிற்குழற்பெண்பேதையைவிட்டுநீபிரிந்தால்

அன்பட்ட திக்கெங்கும்போற்றுந்தென்கோட்டுக்கதிபதியாய்
பொன்பட்டஞ்சூடும்ரகுநாதபூபவிப்பூதலத்தே
நின்பட்டமேபட்டநீயே துணைமற்றிந்நீணிலத்தோர்
தன்பட்டமென்பட்டந்தோலாலடிபடுந்தம்பட்டமே ௨௭

சேமன்புகல்வன்செழுக்குன்றவேலன்செழுங்கிரியில்
காமன்பகைவன்கரிமுந்துமாகினங்கைவலவா
பூமன்சனையுமதியுமிவ்வாடையும்பூசலிட
மாமன்றமையன்றகப்பனென்றேவஞ்சிவாடிவளே ௨௮

(சேமன் இடபவாசனன்) (காமன்-கரி-இந்திரனூர்தியாகிய - மேகம் (மாமன், நகுலன், அவன், தமையன், தருமன்)

சூலேறிச்சங்கமடவார்குடையுந்துறைக்கோதுங்கி
மேலேறுங்கண்ணியர்கைக்குடநீர்புக்குமீண்டுமுழுச்
சாலேறிமுத்தந்தனையீனுந்தண்வயலூரனம்பால்
மாலேறுவான்பரிமாவேறினனடிமாமயிலே ௨௯

பாட்டுக்குப்பாத்திரநல்லோனைப்பாடிப்பதம்பெறலாம்
மோட்டுக்தலாமனைப்பாடிலென்னுழுந்துண்டமுண்டோ
வீட்டுக்குச்சோற்றுக்குண்டோவெள்ளைவாய்க்கொரு வெற்றிலையோ
எட்டுக்குச்சேதங்கண்டாய்வெள்ளைநாவலிருப்பவனே ௩௰

கெலிக்குஞ்சிவகத்துக்கும்யானைக்கும்வெற்றிச்செருடனுக்கும்
வலிக்குறுசிங்கியரவுக்குநண்டுக்குமவன்கவிக்கும்
புலிக்குஞ்செம்பானுக்குஞானிக்குமூடர்க்கும்பூனைக்கும்விட்
டெலிக்குஞ்சங்காத்தாமுண்டோவெள்ளைநாவலிருப்பவனே ௩௧

கலங்காதவீரியராலும்போகின்றகாலம்வந்தால்
நலங்காமலேவெல்லமாட்டுவரோவிந்தநானிலத்தில்
சலங்காணுங்கோட்டைமதிலேழ்கலைபத்துக்காணிருந்தும்
இலங்காபுரிநிலைநின்றதோவெள்ளைநாவலிருப்பவனே ௩௨

எறிக்குமதிச்சடையண்ணாமலையாரெழிற்கிரியில்
பறிக்கின்றபூவைமிதிக்கப்பொருளங்கப்பாதத்தினால்
பொறிக்கண்பிசாசுகணைற்களைத்தூவிப்பொரிபொரித்துக்
கொறிக்கின்றபாலையிலெப்படிபோயினள்கோமளமே ௩௩

திரைகடலோடித்திரவியந்தேடென்றுசெப்புமௌவை
உரைபழுதன்றெனச்சேர்ந்தாள்கழுக்குன்றத்தோர்மடமான்
அரைபணிநீர்ச்சந்தனங்கொண்டுபாங்கிபராற்றியபின்
இரைகடல்போய்வரவெந்தைநாளென்றெழுந்தனளே ௨௪

மேகம்பிறைகலைவேல்குமிழ்வள்ளைவெண்முத்தந்தொண்டை
பூகம்பசுங்கணைதேனுமிழ்காந்தள்பொற்பாசிலைநூல்
நாகங்கதலியலவன்வராலனனளினமுண்டு
மாகம்பொழிற்றிருக்தில்லையிலேயொருவல்லியிலே ௰௫

இளந்தத்தைதய்யகல்லமுதத்தைசயேபுசித்தென்கரத்தில்
வளர்ந்தத்தைசயாதுமுணர்ந்திலையேமயலாகிமனந்
தளர்ந்தத்தையேயென்றிருவரங்கேசர்க்குச்சாற்றச்சொன்னால்
அளந்தத்தையேயளந்தாய்பின்னையாதுமளந்திலையே ௰௬

ஆயர்துறையிற்பிறந்துவந்தணர்பால்குடித்து
மாயவன்மேவசைடத்தேவளர்ந்துவண்ணூறொருநாள்
ஏயப்புலவரின்தம்தெட்கோள்செட்டியேமன்னன்றுபின்
போயகசாலைபுகுந்தவன்காணந்தப்பொய்மகளே ௰௭

பூச்சிலைக்கன்னற்கைச்சேஷாசலேந்த்ரபொருப்பிடத்தே
காச்சியபாலைக்குடிபோவென்றேனந்தக்காரிகையும்
பேச்சிளைத்துக்கள்ளிபின்கைராமற்குமுன்சொன்னதாய்
வாய்ச்சுவென்றேநடந்தாள்பாலைடானவனந்தனிலே ௰௮

தோப்பிடுவாரில்லைதென்றல்வராமற்சுடுமதிக்குக்
காப்பிடுவாரில்லைகாமன்வராமற்கருங்குயில்வாய்க்
காப்பிடுவாரில்லைதென்னரங்கேசரக்கபயயென்று
கூப்பிடுவாரில்லையேவண்டுகாளென்குறைசொல்லியே ௰௯

அணியார்கடுக்கைநறுந்துழாய்பைகவ்வைபறுகுடனே
பணியார்சடாடவிக்கச்சாலைநாதர்பனிவரையில்
தணியாதபாசமதப்பேய்பிடித்தாடுமித்தையலுக்கு
மணியாட்டினால்விடுமோசொல்லுவீரிந்தமாநிலத்தே ௨௰

பாதாதிகேசமுதலாயிவளைப்படைத்தமலர்
வேதாமருங்குல்வெளிவைப்பனோவிரிபூதலத்துள்
ஆதாரமின்றியிரண்டிளநீரந்தரத்திற்கும்போ
ஏதாகிலுஞ்சற்றங்கில்லாதிராதிடையேந்திழைக்கே ௨௰௧

குணமிருந்தாலுங்குலமிருந்தாலுங்கொழுந்தமிழின்
மணமிருந்தாலுமதியிருந்தாலுமவழுத்திடுவன்
கணமிருந்தாலுமொர்காசுமபெறுதுசிங்காரவனைப்
பணமிருந்தாலவர்க்கெல்லாருமஞ்சலிபண்ணுவரே ௨௰௨

உரகத்திலேகிடப்பான்சக்ரபாணியுயர்கதகும்ப
கரகத்திலேகிடப்பான்குறுமாமுனிகன்னியர்கள்
விரகத்திலேகிடப்பான்காமராஜன்மிகுந்தவெழு
நரகத்திலேகிடப்பான்கொழுமூர்முத்துநாகப்பனே ௬௩

சேய்க்கறியுண்டசிவன்மேலன்பர்றவன்சிறியவன்
வாய்க்கறியாதவிடக்கானதமிலைமாக்கறியுங்
காய்க்கறியென்பதும்வேண்டான்சம்பாரங்களைக்கனக்கவிட்ட
நாய்க்கறியும்புசிப்பான்கொழூமூர்முத்துநாகப்பனே ௬௪

தருமிகரானகரன்செல்வநாளுந்தழைக்கும்புல்லூர்ப்
பெருவயனுடுதனிலெனைப்போலொர்பிடாரன்வந்தே
ஒருகுடங்கொண்டொருபாம்பாட்டினனிவ்வுலகிலுள்ளே
இருகுடங்கொண்டவைப்பாம்பாட்டுவதென்னவேந்திழையே ௬௫

தேனாட்டுமுல்லைத்தொடைரகுநாதன்செழித்தபுகழ்
பூநாட்டுமன்னர்தொழாமலிரார்மணிப்பூணணிந்த
வானாட்டரம்பையர்மண்ணாட்டரசாமணத்தினுக்குக்
கானாட்டுவரிவன்கைநாட்டுமவேலினைக்கண்டுகொண்டே ௬௬

ஞாயிறுபோய்விழத்திங்கள்வந்தெய்திடநண்ணியசெவ்
வாயனல்தூவப்புதனம்புகாயநல்வியாழம்வர
மேபிருவெள்ளிக்கலைசோரநானுன்னைமேவுதற்குத்
தாய்சனிய வினைளரகுநாதநளசிங்கமே ௬௭

ஆடியநாகஞ்சரோருகம்பானுநல்லம்புலியும்
சூடியநாதர்நயனமுமாலம்புஞ்சொற்பனுவல்
பாடியபாலனுமாய்வந்ததால்வெண்பணிவையல்
கோடியகோன்சிவந்தான்றிருமார்பிற்குளிர்தொங்கலே ௬௮

சிவந்தான் மாலை-மதனையும், சடலையும் அடக்கி- இவளைப் பிழைப் பித்தமையின் பரமசிவன் கண்ணையும், திருமாலம்பையுஞ்சம்பந்த சுவாமிகளையும் ஒத்தது.

முருகார்முளரியுமுள்ளியுமுண்டகமூரியரம்
பொருகாரிரும்புனைகமுமபொன்பொறித்தாரகையும்
குருகாருக்கெண்டையுமீனெனல்போலென்குரிசிலுக்கு
வருகாதலேதந்தமங்கையுநானுமடங்கைதயமோ ௬௯

நரைசோட்டிளங்கன்றுநன்வளநாடுகபந்தவிட்டன்
விரையூட்டுதார்ப்புயன்வெற்பிமுமன்னனென்றேவிரும்பிக்

கரையோட்ட மீதின்மரக்கலம்போட்டுன்னைக்காணவந்தால்
திரைபோட்டுநீயிருந்தாய்சிங்கபூபசிரோமணியே ௫௰

வண்டோவிழிநுதல்வான்பிறையோவல்குன்மான்குளம்போ
செண்டோமுலைபித்திலமோநகையிடைசேர்துடிகற
கண்டோமொழிகுழல்காரோமுகங்கமலம்பவளத்
துண்டோவிதழ்கன்னித்தண்டோதுடையிந்தத்தோகையர்க்கே ௫௧

வண்டுமதுவுண்டிசைபாடுஞ்செந்திலின்மாரன்வரக்
கண்டுமிருந்தும்வடிவேலிரண்டுங்கருப்புவில்லும்
குண்டுமருந்தும்பொற்றேருந்தராமற்குழலைத்தந்தால்
தண்டுகொண்டெப்படிவென்றிடலாமடிதார்குழலே ௫௨

ஆலங்குடியர்சங்கஞ்செறியத்தரஞ்சக்கரப்பொன்
மேலப்பரத்தினர்நாகமெடுத்தவர்மேவிடையர்
சூலக்கண்மெய்யினர்பார்பதிகோன்மதிதோய்கவினர்
பாலன்னைக்கோற்படைக்கூர்மைக்கண்ணமிர்தப்பைந்தொடிக்கே

ஆமாவிகழ்ந்திடலாமாவினியுனையன்றிவினை
போமாவுனைவிட்டுப்போமாவெனக்கிங்கப்புன்மைவர
லாமாபராமுகமாமாபுயத்திணணிகடப்பந்
தாமாகுகனெனுமாமாவயிற்கரச்சண்முகனே ௫௪

ஆக-செய்யுள் ௨௮௫௰

வெண்பா

சென்னிமலைவேலவர்க்குச்சேர்ந்தகொம்பிரண்டுண்டு
கன்னிகுறவள்ளிக்குக்காலில்லை முன்னமே
ஆட்டுக்குக்கொம்பில்லையானைக்குக்காலில்லை
நாட்டுங்குளாராய்ந்துபார் ௧

தார்க்கொன்றைகாவென்றேன்றுவேழிலொன்றான்
ஊர்க்கஞ்சிநான்மூன்றிலொன்றேன்ஆர்க்கும்
பொதுவென்றான்பூவென்றேன்போயினான்றோழி
இதுவோநம்மீசனியல்பு ௨

பறவைநாய்நாகம்பகைவிலங்குபங்கம்
செறியுமிருணாஞ்சிதடன் குறிகிழவன்
என்றுரைத்தவீரைந்துமோர்தண்டத்திற்பண்பாய்
ஒன்றுமெனவுரைப்பால் ௩

பரியூர்வார்பாலருந்தல்பண்மாமூடற்குக்
கரியூர்வார்பெண்ணின்பங்காணல்விரியும்

சிவிகையூர்வார்க்குமைத்தலின் பஞ்சேட்சொல்வார்
பசிவீயவுண்டல்பயன் ௪

தக்கசகுனஞ்சபதஞ்சாமுத்திரியஞ்சொன்
மிக்கவசரீரிசானென்றைந்தும்இக்கலியில்
கூடினுங்கைகூடிவருங்கூடாதொழிந்தொருகால்
வீடினும்வீடிவிடும் ௫

நக்கனார்சோணகிரிநாதனார்கேள்வியிலே
தக்கனைத்தகர்த்தக்கனார் பொக்கைவாய்
ஆக்கினார்சூரியனையம்புலியைத்தேய்த்தரியைத்
தாக்கினாரோடோடத்தான் ௬

ஓடினானென்பதுணர்ந்துமுனக்குச்சரியா
நாடினார்க்கென்னநரகமோநீடியே
ஆலவிடந்தோன்றியபோதம்பலவாணநெடிய
மாலவிடஞ்சஞ்சரியாதே ௭

அசநமிளைப்பகற்றுதன்னையேநம்பால்
வசனமிதுதவறாவாய்மை இசைநாகைச்
சின்னப்பால்வெண்மதியஞ்சேரிமையத்தேபிறந்த
அன்னப்பாலிங்குவந்தாலாம் (அன்னப்பால்-பரமசிவன்) ௮

தலையிலிரந்துண்பான்றன்னுடலிற்பாதி
மலையின்மடமகளுக்கீவான் உலையில்
இருப்புவனமேனியனேயென்றுலோவாமாம்
திருப்புவனத்தீசன்றிறம் ௯

ஆச்சரியந்தென்னமரமத்தனையுங்குத்துமுலை
காய்ச்சிருக்குந்தென்குடந்தைக்காவலா மாச்சன்
வரக்குப்பையாநீமருவாநாளெல்லாம்
சரக்குப்பையாமேதனம் ௰

கல்லுமுருத்தாதுகாலின்முட்டையாது
எல்லைமார்த்தாண்டன்சூடேறாது-தொல்லைவரு
மாலையிருளில்வழிநடக்கக்கூசாது
காலிற்செருப்பிருந்தக்கால் ௰௧

தந்தைபோய்த்தாய்போய்த்தமர்போய்த்தமர்போயென்சுற்றமும்போ
வெந்தபுரியாகிவிட்டேனே-முந்தவே (ய்
ஆழாழிநஞ்சுண்டவாபற்சகாயனெனும்
பாழாவன்கண்ணேறுபட்டு ௰௨

கைக்குடமும்மொண்டுகனகும்பக்குடமும்
மூக்குடமுங்கொண்டான்முறியாதோ மைக்குழலீர்
வேய்க்காற்றினல்விளங்கும்வீரனார்திமாநகரில்
ஈக்காற்றுக்காற்றுவிடை ௰௩

வையம்புகழுமலராயிரமெடுத்துக்
கையிலொருமாமலரைக்காணமல்-வையகத்தில்
செங்கண்மாலீசன்றிருவடிக்கெண்ணாயிரமாத்
தங்கண்மலர்சாற்றினான்றான் ௰௪

பாம்புசேர்கோளிணையாள்பாளயத்துயாமாரி
சாம்பசிவன்றன்னடியைச்சாராரைவேம்பின்
இலையையுடுத்தியசரீனமானம்போக்கித்
தலையில்விளக்கேற்றிவைப்பாடான் ௰௫

அட்டமியிலோதினலாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னான்குதிதாகும் கெட்டவுவா
வித்தைக்குநாசமாம்வெய்ய பிரதமையில்
பித்தரும்பேசார்பிழை ௰௬

ஆயிரம்பாக்கன்னமுலையன்னநடைக்கன்னிபதி
னாயிரம்பாக்கானாலுநன்னாசையினால்நீயிரங்கி
வந்தாளவேண்டுமலைப்பழனிவேலவனே
சந்தாளவேறில்லைதான் ௰௭

(ஆயிரம்பாக்கு-கலசம்) பதினாயிரம்பாக்கு-அம்மணம்

பிறப்பித்தோன்வித்தைதனைப்பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசஞ்செய்தோன் அரப்பெரிய
பஞ்சத்திலன்னம்பகர்ந்தோன்பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பிதாக்களைவெண் ௰௮

கானக்கடன்மல்லைக்கார்வண்ணன்றானுமால்
நானக்குழன்மடவீர்நானுமால்ஆனக்கால்
தன்கையிற்சங்காழிசாமிருக்கப்போவதேன்
என்கையிற்சங்காழியின்று ௰௯

கட்டியடிப்போர்க்குங்கான்மீதிலேற்றுவர்க்கும்
எட்டியடிப்போர்க்குமீவரோ திட்டமுடன்
பாடுவோர்க்கீவாரோபல்லுதிரத்தாடையினீற்
போடுவோர்க்கீவார்பொருள் ௨௰

செய்யாள்கணவாசெகராஜசேகரா
ஐயாடைகல்லைக்காரியா துய்யா

சூடஞ்சுட்டுப்பின்போல சோபாலமுத்து
வடஞ்சுட்டுக்கண்டுயிலாண்மான் ௨௧

உன்றன்மகளையொறுப்பதற்குக்காரணமென்
என்றன்மகடனியல்புகேள் குன்றுச்
சிராப்பளியனேறிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பளியுங்கொள்ளாளிவள் ௨௨

நீருநஞ்செஞ்சடைமேனீருநம்பாம்பணிந்து
நீருரிலேவந்தானீதியோ நேரோ
படவரவஞ்சாடப்பலியிடெனவந்தால்
இடவரவஞ்சாளோவிவள் ௨௩

வாலைப்பொருந்துதலால்வல்லரவம்பற்றுதலால்
மாலையடுத்துநெடுவானுறலால்-சோலைதிகழ்
உம்பர்பூசித்தருளுமொற்றியூரன்வளையில
அம்புலியுநன்கருடனும் ௨௪

அம்மையிலேயேறியடியேனிடர்தீர
இம்மையிலேவந்தென்னையிரேற்றி-மும்மையிலே
எந்தப்பாவஞ்செய்தேனெந்தப்பாவத்தி க்
கந்தப்பாவத்திடபோகா ௨௫

எழுதரிதுமுன்னமெழுதியபின்னத்தைப்
பழுதறவாசிப்பரிதுண்பா முழுதுமதைக்
கற்பரிதுநற்பயனைக்காண்பரிதுகண்டக்கால்
நிற்பரிதுதானங்கிலே ௨௬

ஏறேறுநீரோறுமெண்ணிலுயிர்க்குயிராம்
பாறேறுங்காலாற்படியளக்கும்வீறேறும்
அன்னைக்காணீசனரியயனுந்தாமன்று
துன்னுபுகழ்மாரியப்பாசொல் ௨௭

சோடுதிக்குங்கும்பமுலைக்கோதையரைக்கூடவென்றால்
மாடுதின்னியென்னைமறுத்தானே மாடுதின்னி
தன்பொழுதும்போச்சுதேதன்னந்தனித்திருந்த
என்பொழுதும்போச்சுதேயென் ௨௮

(மாடுதின்னி-வைக்கோலாற்செய்தமருள்)

செஞ்சடைக்கந்தவேட்டைக்கெல்லாநீக்கிருவிழியும்
பஞ்சடைந்துள்ளாவிபடுமுன்னேசெஞ்சடையில்

வெள்ளாறுவெங்காளூம்வேள்விப்புகையாறு
நள்ளாறுவென்னுநவில் ௨௯

மூவர்கவிமுன்னூறுமுன்சோழனைந்நூறு
நாவலர்மாணிக்கர்தலநாற்பத்தெட்டோறுவெறுசீர்
நூதனசிவாலயங்கணூற்றறுபதுங்கூட
ஓதவருமாயிரத்தெட்டோர் ௩௰

நாலெழுத்துப்பூநெடுவேநரம்பிருக்கும்
காலுந்தலையுங்களைச்சாதி-மேலாக
ஓட்டுமுதலெழுத்துமோதுமூன்றாமெழுத்தும்
விட்டார்பரமனுக்குவீடு (புகையிலை-புலை-கைலை) × ௩௧

முனிபதட்டுமுட்டுக்குமுன்னீரளக்கும்
கனியுதிர்க்குங்கவ்வுநாயசாக்கும்-தனிவழிக்குப்
பத்திரமதாக்கும்பயந்தீர்க்கும்பாம்படிக்கும்
கைத்தலத்திற்றண்டிருந்தக்கால் ௩௨

பகலோன்றறுங்கிரணம்பாய்பறவைபெச்சம்
மிகமேலுறுதகற்றும்விண்ணின்-மூகிலதனல்
பெய்யுமழையைத்தடுக்குமபேகழகுமாமொருவர்
கையிற்குடையிருந்தக்கால் ௩௩

வந்தவனைக்கையாதுவாய்முத்தந்தந்தருள்வாய்
தொந்தவனைக்கையாதுவாரகைபா-சந்துவனை
கோடையிடத்தானேகுயிலோசைக்கஞ்சியுளத்
தாசையிடத்தானேயறிந்து ௩௪

அறிந்துதவிப்பாரையருள்கோசையான்மால்
செறிந்துதவிப்பாரைத்திருக்கும் திறந்தழைந்த
வைகுந்தனூர்வாய்மடமனனேகொவ்வைநிகர்
வைகுந்தனூர்வாய்மடுத்து ௩௫

மடுக்குஞ்சரமழைக்கும்வான்கோசைமாலே
விடுக்குஞ்சரமழைக்குமேலாய்மூடுச்கும்
அநங்கனையஞ்சங்கமடுத்தேனையாள்வாய்
அநங்கனையஞ்சங்கமலர் ௩௬

அலரோதிமத்தானறைகோசைமாலே
அலரோதிமத்தாலடிக்கும்-அலரோதி

நந்தனகத் தாளுறவேநண்ணிநின்றுயானடைந்தேன்
உந்தனகத்தாளுறவேயோர்ந்து ௩௭

ஓர்தண்டலையாளுமுக்தமநற்சோலையனே
ஈர்ங்கண்டலையாளுமிந்திரையும்சேர்ந்திலகு
தூயத்திருக்கருப்பாதோற்றியடியேனுடைய
மாயத்திருக்கருப்பாய்வந்து

ஆகும்போதாகுமனைத்துமதுவொழிந்து
போகும்போதெல்லாமும்போகுமேவேக
நவரசம்பட்டார்போனலிந்துமடநெஞ்சே
அவசரம்பட்டாலாகுமா

சல்லடைக்கண்ணாகித்தளர்ந்தாளருள்புரிவாய்
மல்லடையுங்கோசைநகர்வைகுந்தா கல்லடையும்
பந்தாளினாந்தேர்காலான்பாணம்வருத்துதலால்
மாந்தளினாத்தேர்காலாண்மார்பு

சாரங்கமேனிக்கருணைக்கடலான
ஸ்ரீரங்கநாதரோசெல்வரோ நீரங்கே
அள்ளியுண்டவெண்ணெய்க்காவம்மையடிப்பாளென்று
பள்ளிகொண்டாற்போமோபயம ௪௧

படைப்பானுங்காப்பானும்பார்க்கிலருணேசன்
படைப்பானையென்னபாவம்படைக்கிலயன்
ஐந்தலையிலொன்றையரனறுத்தபோதிலவன்
தன்றலையைப்பண்ணறியான்றான் ௪௨

நாறுங்கடம்புநடையுடையும்பாவனையும்
வீறுமுனக்கோகான்பழனிவேலவா ஆறுதனில்
வெட்டுண்டானுங்களையன்வெண்ணெய்தனையேதிருடிக்
கட்டுண்டானுங்களம்மான்காண் ௪௩

தூதுமதுரைதுவரைகடையின—முன்
ஓதுகின்றமூவெழுத்துமொக்குமேசீதி
செகராஜசேகரன்வாழ்சிங்கையெனுஞ்செல்வ
நகராயிழைபார்நகை (தூ-து-து-முத்து) ௪௪

பூங்கோதைமாதர்புனைகின்றமுக்தாரம்
வாங்கோங்குடிக்குலவுவெண்மீறநாங்கள்

மூலைக்கோடணிவதெல்லாமூக்கண்ணன்சென்னித்
தலைக்கோபெட்டதழும்பு ௪௫

இவ்வரையுமாவிக்கிரங்குவோர்தாமில்லை
ஐவ்வரையுங்காத்தகனகலினால்-மைவரைசொல்
வானிரங்குமுத்துகிர்ஷ்ணமன்னனமதுதொண்டை
மானிரங்குவானென்றுண்மான் ௪௬

வாரிதாளஞ்சொரியமாமலையினூடுருவிச்
சேரனமர்காடளவுஞ்சேர்ந்ததே-மூரிமதன்
அம்போடலைகின்றவாயிழைக்குகுதிரைக்
கொம்போகுலோத்துங்கா கூறு ௪௭

தேமிருக்குமாந்தளிரைச்செந்தீவணமென்றும்
பூமுருக்கையத்திப்பொறியென்றும்-நாமிருக்கு
மாப்பகுமேயென்றெண்ணிவாடிமனந்தளர்ந்து
கூப்பிடுமேபந்தக்குயில் ௪௮

காமனூர்வீட்டினிலேகள்ளன்புகுந்தானோ
சோமனைப்பாம்புசூழ்ந்ததோமாமரந்தான்
தீப்பட்டுவேகுதோதியாகேசர்கன்னாட்டில்
கூப்பிட்டதேபக்குயில் ௪௯

செந்தமிழோருய்யவன்புசெய்யவந்தசோழவள்ளல்
சந்ததமுஞ்சேராகாடாழ்குழலேவஞ்சனைசெய்
ஐங்கரனைவேலனையன்றழற்கண்வந்தவனைச்
சங்கரனைவாசுகியைத்தான் ௫௰

கருப்புவில்லைமுறிக்க-ஐங்கரனையும் கடலையடக்கவேலவனையுஞ்சந்திரனைத்தேய்க்க-வீரபத்திரனையும்-மன்மதனையெரிக்க சங்கரனையும் தென்றலையுண்ண,வாசுகியையும்வஞ்சனைசெய்

முக்கணன்வாழ்வெற்பைமுறித்துவரியிட்டகால்
முக்கணனையப்பில்வீழமோதாதோ முக்கணன்றன்
வேணிக்காகாமலர்வைத்ததிஞன்மெல்லியலே
சாணிற்குறைந்தான்றலை ௫௧

(முக்கணன்வாழ்வெற்பு-மேரு,கால்,காற்று,மூக்கணன், தேங்காய் முக்கணன்வேணிக்காகாமலர்,தாழம்பு,சாணிற்குறைந்தான், ஒட்டைச்செடி)

சேலகலாமதுரைசேர்ச்செழியனேசெழியன்
சாலவறிவுள்ளோரோசங்கத்தார்சீலமிகும்
கம்பாலதேவன்கடம்பவனவாசா
தம்பாரிமீனாட்சிந்தாய் ௫௨

மங்கையர்கள்யோனிமிசைவைத்திருக்குமாசைதனைப்
பங்குசெய்துநூற்றிலொருபங்கெடுத்துக்கங்கைமதி
வேணிபரன்பாதாரவிந்தத்தில்வைத்தக்கால்
காணலாங்காணுக்கதி ௫௩

தூர்ச்சனரும்பொன்னுந் துடியுந்துரகதமும்
அச்சமறமுன்னிற்குமாயிழையும்கச்சரவும்
கண்டித்தவெள்ளுங்கரும்புமிளநீரும்
தண்டித்தார்க்கல்லோசயம் ௫௪

புட்டவல்ப்பிட்டாணிபொரிதேகுழலப்பம்
மட்டவிழுந்தோசைவடையுடனே—சட்டமுடன்
ஓயாமற்சோறுங்கறியுண்டையுண்டையாயடைக்கும்
வாயாகமச்சிவாயா ௫௫

நச்சிலிபமாதர்குயமுங்குலையக்தோர்
மெச்சுதமிழ்மாதர்வியன்மூலையும்-சிச்சி
தெலுங்கமடமாதர்சிங்காரக்கொங்கைக்
கலிங்கமெனவேசொற்கவி ௫௬

இங்கிருக்கவென்றலமனெட்டானிவ்விடம்விட்
டங்கிருக்கவென்றலயனெட்டான்-எங்குவைத்துப்
பேணுவேனிவ்வுடலைப்பித்தாபிறைசூடும்
தாணுவேசொக்கநாதா ௫௭

வெள்ளிமலைபொன்னின்மலைமேவமகிழ்வீடாகி
பிள்ளைகளோபுத்திசொலும்பிள்ளைகளாய்-தெள்ளுமுகம்
சடாவடிவுடையானமாமனையாளானக்கால்
ஆடாரோவொற்றியப்பனார் ௫௮

அடியார்க்கெளியன்சிற்றம்பலவன்கொற்றம்
குடியார்க்கெழுதுகைச்சீட்டுப் படியின்மிசைப்
பெற்றான்சாம்பானுக்குப்பேதமறதீட்சைசெய்து
முத்திக்கொடுக்கமுறை ௫௯

பரமரகசியச்சைப்பாழானவாயால்
இரவுபகலெந்நேரமின்றிக், குரனெரிமக
கூப்பிட்டுக்காணுமோகோலமடநெஞ்சேமால்
பூப்பிட்டுக்காணுப்பொருள் ௬௰

காந்தனுக்கென்றன்கொடியகாமவிகாரமெலாம்
போந்தறிவித்தாலுனக்குப்புண்ணியமாம்சேர்ந்தோடும்
தேளிபடவாடுந்திரைக்கடலேமன்மதன்கை
வாளிபடவாடுமனம் ௬௧

கம்பனென்றுங்கும்பனென்றுங்காளியோட்டக்கூத்தனென்றும்
கும்பமுனியென்றும்பேர்சொல்வாரோ அம்புவியில்
மன்னுவலர்புடைசூழ்வாழ்குடந்தையாரியப்பன்
அந்நாளிலேயிருந்தக்கால் ௬௨

கட்டளைக்கலித்துறை

பூமன்றிருக்கண்டியந்தகன்கோவல்புரமதிகை
மாமன்பறியல்சலந்தரன்விற்குடிமாமுழுவூர்
காமன்கொறுக்கைநமன்கடவூரிந்தக்காசினிக்குள்
தேமன்னுரொன்றைச்சடையரன்பொருதிட்டசேவகமே ௬௩

கொச்சகம்

மெய்ச்சரசமாகவிளையாடும்கேளையிலே
கைச்சரசமென்றதல்லாற்கைச்சரசமென்றேனோ
அச்சனகியார்மீதிலாசைகொண்டராவணனைத்
தச்சுருவவாளிதொட்ட தாமோதரோந்திரனே ௬௪

மீன்பார்த்துமின்பார்த்துவேளையும்பார்த்தாள்வரவு
தான்பார்த்தெனைப்போற்சரிபார்க்கும்வெண்குருகே
மான்பார்த்துவாளிதொட்டமால்சிவநாராயணனை
நான்பார்த்துமாதர்நகைபார்த்திருந்தேனே ௬௫

முல்லைமுல்லைபாய்த்தொடுத்துமோமதனெய்யவந்த
வில்லைவில்லைபாய்நறுக்கிமெல்லமெல்லத்தாராயோ
இல்லை இல்லையென்றுசொல்லியேற்கவரும்பாவலர்கள்
தொல்லைதவிர்க்குங்களந்தைச்சுப்ரமண்யபூபதியே ௬௬

ஆயிரங்கண்ணுகமதனம்புமேலம்புவிட
வீயிரங்குசெங்கேனிருல்னங்கமானேனே
தாயிரங்கவேணபெண்கடாமிரங்கவானிரங்க
வேயிருங்கும்வாயாவிசயரகுநாயகனே. ௬௭

சன்னலெனுஞ்சிறுகுருவிககனமழைக்காற்றுமல்
மின்னலெனும்புழுவெடுத்துவிளக்கேற்றுங்கார்காலம்
மன்னவனுந்தென்மதுரைமாநவிவாணனைப்பிரிந்தி
தென்னபிழைப்பென்னவிருப்பென்னநகைப்பின்னமுமே ௬௮

ஆகசெய்யுள்-௬௱௯

---

விருத்தம்

கைத்தலத்தழகற்கணிச்சிலைத்திடப்புறத்தொருத்தி
கட்கடைப்படைக்கிளைத்ததிறலோராம்
முத்தலைப்படைக்கரத்தெமத்தர்சிற்சபைக்குணிற்கு
முக்கணுக்கருக்கொருத்தர்மொழியாரோ
நித்திலத்தினைப்பதித்தகச்சறுத்தடிக்கனத்து
நிற்குமற்புதத்தனத்தினிடையேவேள்
அத்திரத்தினைத்தொடுத்துவிட்டுவெட்டயிற்கணத்த
லக்கணுற்றிடச்செய்விக்குமதுதானே க

கருப்பாலேபணையடித்துப்பனிநீர்தேக்கிக்
கதலியலாக்கனியதனுல்வரம்புகட்டும்
திருப்பாலைவாழீசர்பவனிபாடுந்
தெருவிற்பால்விலைபகர்சிற்றிடைச்சியாரே
அருட்பாலோபொருட்பாலோகாமப்பாலோ
ஆழிதனைக்கடைந்தெடுத்தவமுதப்பாலோ
இருப்பாலேமனம்படைத்தீர்நில்லீசெல்லீர்
எந்தப்பால்விற்கவந்தீரியம்புவீரே உ

பூப்பார்த்துப்புகழ்பார்த்துப்பொருள்பார்த்துக்
கவிதைசொல்லும்புலவோர்தங்கள்
நாப்பார்த்துக்கொடைகொடுக்குநல்லதம்பி
தந்தசொக்கநாதாவென்னுல்
காப்பாற்றமுடியாதுகையிலொருகாசுமில்லை
கடனென்றாலும்
பார்ப்பார்த்திசேரிடுவாளிருந்தாலுமுறந்தமதப்
பயலொட்டானே ௩

கெட்டசகுறுதவிடுகஞ்சிகிருமியுண்டமாவறைக்
கீரைவோதெளிநதமோர்முறிந்தபாகுகிண்டிமா

இட்டசோறுகொழியலுப்பிடாதபுற்கையாயினும்
எங்குமன்பதாகதுங்கவின்பமாயிருக்குமே
பட்டபாகுபசுவினெய்பாநட்புமுக்கனிக்குழாம்
பாளிதங்கடாளிதங்கள்பண்ணியாரவங்கையுடன்
அட்டபாற்குழம்புகன்னலமுதமோடுமுகவினும்
அன்பினோடளித்திடாதவசனமென்னவசனமே ௪

தங்கவடகயிலாயமுதலாமைந்து
தலுவொன்றுதொண்டைவளநாட்டெண்ணான்கு
தசருநாட்டிருபத்திரண்டுபொன்னித்
தலநூற்றுத்தொண்ணூறுமலைநாட்டொன்று
கொங்கேழுசிங்களத்திலிரண்டுவையைக்
குளிர்தமிழ்நாட்டீரேழுமேலாஞ்சூலச்
செங்கையார்தலமிருநூற்றெழுபானன்கில்
தென்பாகக்கயிலாயந்திருக்குற்றாலம் ௫

ஓதுமைந்திலொன்றிலைந்திலொன்றுமன்னவன்பிதா
ஊர்திதொட்டகேழின்மீதிலுற்றசாபநிருபனூர்
தாதுகொண்டதாளிமாலைசூடிதம்பிதம்பிசேய்
தண்குடைப்பினவன்மற்றலைக்கிரீடிதுவசனூர்
காதனண்பன்றந்தைபாகன்பின்னவன்பகைச்சுமைக்
கலையெடுத்தகையனையார்கதிபெறத்தவஞ்செய்தோன்
தீதிருதைகொண்டுவந்தசிலைவதிந்தபதியினன்
சிரமரிந்தவன்கொள்பாரிசேரிலாலுறைந்ததே ௬

ஓதும் ஐந்துபஞ்சபூதம், அதிலொன்று, நிலம், அதில்ஐந்து, ஐந்துதிணை, அதிலொன்று, குறிஞ்சி, அதற்குமன்னவன், முருகன், அவன்பிதா, சிவன், அவனூர்தி, இடபம், அதற்கேழ் விருச்சிகம், அதன் மீதிலுற்றசாபம், தனுசு, அதையுடையநிருபன், இராமன், அவன்தம்பி, பனைமாலைசூடியபலராமன், அவன்தம்பி, கிருஷ்ணன், அவன்சேய், மன்மதன், அவன்குடை, திங்கள், அதற்குப்பின், ஐவன், சனி, அவன்கிரீடம் அரவம், அதைக்கொடியாகவுடையவன், துரியோதனன், அவன்நண்பன், கர்ன்னன், அவன்தந்தை, சூரியன், அவன்பாகன், அருணன், அவன் பின்னவன், கருடன் அவன்பகை, ஆதிசேடன், அவன்சுமை, பூமி, அதன்கலை, கடல், அதையெடுத்தகையர், அகஸ்தியர், அவனையர், பிரமதேவர், அவர்கதிபெறத்தவஞ்செய்தோன், அனுமான், அவன்றந்தை வாயு, அவன்கொண்டுவந்தசிலை, மேருசிகரங்கள். அவைகளைப்பதியாக

வுடையவன் இராவணன், அவன்சிரமரிந்தவன், திருமால், அவன்கொ ள்பாரி, இலக்குமி, அவள்சேர் இல், தாமரைப்பூ, ஆலுறைந்தது, ஆலமரத்தின்கீழிருந்தது (இஃதுபொருண்மேற்பிரிந்த தலைவன் ஆலின்கீழ் வைத்த அலர்க்குறியைக்கண்டுபாங்கிதலைவிக்குணர்த்தியது)

தொடுத்தமுத்தமிழுக் ககத்தியனெனவே தோன்றிய புவனச்சேறையர்கோன், சொலககணப்புலவனிலக்கணக்கவியைத்துதித்த கவித்திடுக்களியேம், மடத்தினிற்புகுந்து மதுத்திறந்தகனார் வடித்தகுடித்துநின்றவனார், வறுத்தசுட்கடித்துக் குட்டுகின்றவனார் மயக்கியுட்டியக்கமுற்றவனார், கடுக்கனைமிடற்றிலொடுக்கியிட்டவனே கையிலேசிலம்பையிட்டவனே, கனத்தநூற்கொடியை நாவிலிட்டவனே கண்ணிலேகுழையையிட்டவனேமுடுக்கிபவயிற்றிலாழியிட்டவனே முகத்திருபதக்கமிட்டவனே, முளைத்தசோளொருபான்சதங்கையிட்டவனே முழுப்புரட்டவர்கலாதில்லையே எ

கடு, விஷம் சிலம்பு, மலை-நூற்கொடி, வாணி' கண்குழை, கட்செவி ஆழி - கடல் - இருபதக்கம் - இருபதுகண்-ஒருபானா-சதங்கை-ஆயிரம் - கை.

தேமதுரகவிவிரகன்றெவ்வைவருபெருமான்
செல்வச்சங்கரர்தாளைத்தினமலணங்குகளியேம்
யாமதுவுண்டாலுமஃதுமக்கடிமையிலர்போல்
ஏமைமயக்குமோமயச்காதினியிபம்பக்கேளீர்
வீமன்மகனகத்தியனேகுபேரன்மகன்புதனே
வீருணைமுகனொருவன்விரும்புமகன்குகனே
காமன்மகன்சயந்தனேவேதன்மகன்சிவனே
காலன்பாற்பிறந்தமகன்கடல்கடந்துளானே அ

வீமன்-பிரமன்-குபேரன்-சந்திரன்-வீருணைமுகன்-வீரன்ஐம்முகன்-காமன்-இந்திரன்-வே-மூங்கில்-கால்-காற்று

சந்தப்பாவிருத்தப்பாகலிப்பாவெண்பா
தாழிசைப்பாகொச்சகப்பாத்தனிப்பாவுக்கும்
விந்தையப்பாவரியஇரங்தப்பாவும்
வெல்லப்பாவதுபோலவிகடப்பாவும்
எந்தப்பாவுமாத்திடினுமொருபேறில்லா
ஏதப்பாவிக்குநினதிணைப்பாதகத்தைக்
கந்தப்பாமுருகப்பாபோரிவாழ்வே
கையப்பாமெய்யப்பாகாட்டப்பாவே சு

ஆதிசிவன்செத்தானோவுமைசெத்தாளோ
ஐங்கரனுஞ்செத்தானோவரிசெத்தானோ
வேதியனுஞ்செத்தானோநீசெத்தாயோ
வெட்டவெளியானந்தம்வெறும்பாழாச்சோ
நாதிபற்றுப்போனோயோவழிகாட்டாயோ
நாயேனுக்கிரங்கிவந்துநலந்தாராயோ
பாதிவழிதனிலலவதிப்படுத்துவாயோ
பதகாதிருச்செந்தூர்ப்பதியுள்ளானே ௰

நீருஞ்சுமந்தேன்விறகெடுத்தேனித்தஞ்சுமந்தேன்சாணங்கம்
நிகழவடிபட்டுதைப்பட்டேனின்றேன்னையைக்காளாக
ஆரும்விரும்பாத்துகிலுடுத்தேனழகுமேனிகரிக்கோலம்
ஆனேனதனாலல்லோவுன்னடியாளுனக்குச்சரியானேன்
காரும்விரும்புங்கடுவணிந்தகளனேகருணைப்பெருங்கடலே
கமலத்தயன்மால்காணாதகாலகாலாவென்றுபரம்
திரும்படிகண்ணருள்புரிவாய் சிவனேயமரர்க்கொருவிருந்தே
தேவேதெய்வமறைப்பொருளேதிகழுங்கடவூர்ச் சேவகனே

காளமேகப்புலவர்பாடியது

ஏறுகட்டிய கொட்டிலரங்கமேயீரிரண்டு முன்வாயிலாயமே மாறுகண்ணப்பன்வாய்மடைப்பள்ளியே வாய்த்தவேர்வைதிருமால் வதனமே, வீறுசேர்சிறுத்தொண்டனில்லாளூர்திமேவட்டாற்கறிகாய் இன்றதோட்டமே, நாறும்பூம்பொழில்சூழ்தில்லையம்பலநாரியாகற்குநா டகசாலையே ௰உ

நடுவெழுத்தலங்காரம்

திருமால்வாகனநாவாயிராசியொன்று
சினைதெவிட்டார்மாதுலன்கோகிலமிவ்வேழின்
உருவாமேழெழுத்திருடுவெனக்குச்செய்தான்
உகந்துபதினொன்கனையுங்கானேகொண்டான்
ஒருபாகத்திருத்தினான்கையிலேற்றான்
ஒருமதலைதனக்களித்தானுண்டான்பூண்டான்
பரிவாயொணகரத்தமைத்தானுகந்தானிந்தப்
பைம்பொழிற்றில்லையுளசிம்பரமன்றுளனே ௰௩

திருமால்வாகனம்-நாகாரி நாவாய்-கலம் இராசி-கன்னி-சினை-கவ டு-தெவிட்டார் ஆரார்-மாதுலன்-மாமன்-கோகிலம் பச்சி இவற்றி

ன்-நடுவெழுத்துக்கள் காலன்வராமல் இவற்றின் ஏனையவெழுத்துக்களி
ன்பயன்-நாரி உமை( கம்-கபாலம்) (கனி-பழம்)(கடு-விஷம்) (ஆர்-ஆத்
தி)(மான்) பலி-பிச்சை)

கூற்றுவனைவின்மதனையரக்கர்கோவைக்
கூனிலவைக்குஞ்சரத்தையிஞ்சிமூன்றை
ஏற்றுலகின்புறவுருவமாளத்தோள்க
ளிறவெறிப்பவிமையப்பெண்வெருவவேவக்
காற்றொழிலானயனத்தால்விரலாற்கற்றைக்
கதிர்முடியாற்கரதலத்தாற்கணையாற்பின்னும்
ஊற்றழியவுதைத்தெரித்துநெரித்துச்சுடி
உரித்தெரித்தானவனென்னையுடையகோவே (௰௪)
பொன்னனைவாளரக்கனை நூற்றுவரைக்காவைப்
பொருசிலையைக்கனைகடலைப்பொன்னனீன்ற
நன்மகற்காய்ச்சுரர்க்காயவ்வருக்காய்க்காதல்
நட்பினுக்காய்ச்சானகிக்காய்நடவைக்காக
மன்னுகிருல்வடிக்கணையால்வளையாற்புள்ளால்
வயக்குதோள்வலியால்வானரங்களாலும்
உன்னுடற்கீறிச்சிரங்கொண்டமரில்வீழ்த்தி
முதலொடுங்கொண்டிறுத்தடைத்தமோகூரானே (௰௫)

இந்துமுடிக்குஞ்சடையாளரிருக்குந்தொண்டைவளநாட்டிற்
சிந்துபடிக்கக்கவிபடிக்கத்தெரியாமடவாயுன்றனக்குக்
கெந்தப்பொடியேன்பூமுடியேன்கிழமாய்நரைத்துமுகந்திரைந்தும்
இந்தமுறுக்கேன்வீருப்பேனெடுப்பேனுன்னைக்கொடுப்பேனே (௰௬)

ஏழாளையடித்தபுலிதனையடித்தான்வீரசென்னனென்றேகாட்டில்
வாழாமற்சிறுபுலிகளீப்புலியோடெலிப்புலியாயவடிவங்கொண்டு
பாழாகிக்காடெல்லாம்பரதவிக்கவடுகரடுப்படியில்வந்து
கூழாகிவயிற்றினிற்போம்பொழுதுகுணம்போகாமற்குமுறுந்தானே

கட்டளைக்கலித்துறை

காவென்றுஞ்சிந்தாமணியென்றுஞ்சொல்லியென்கையிலள்ளித்
தாவென்றுகேட்கத்தரித்திரம்பின்னின்றுதள்ளியென்னைப்
போவென்றுரைக்கவுநாணமங்கேயென்னபோவதிங்கு
வாவென்றழைக்கவும்வந்தேன்விராலிமலைக்கந்தனே (௰௮

கொச்சகம்

காவொன்றுபேர்படைத்தாய்க்கனத்துரும்போது
நீவொன்றுபேர்படைத்தாய்நெடுந்தரையில்வந்ததற்பின்

வாரொன்றுமென்முலையாராய்ச்சியர்கைவந்ததற்பின்
மோரொன்றுபேர்படைத்தாய்மூப்பேரும்பெற்றாயே (௰௯)

முன்னுசகீரளக்குமுடிமன்னர்க்காத்திருக்குமுனிகளென்னை
மன்னுமலோட்டுவிக்குமாதரைச்சொற்கேட்பிக்குமடக்குமாட்டைப்
பண்ணுகத்தலைநறுக்கும்பாலரைச்சொற்கேட்குவிக்கும்படிப்புண்டாக்கு
ம்.எந்நாளுங்கிழவருக்கோரிடுப்பாகுநடைகொடுக்குமென்கைக்கோலே

கருந்தலைசெந்தலைதங்கான்றிருக்கால்கடையிற்சுற்றி
வருந்திக்குடவைக்குந்தாட்டிக்குங்கொத்திட்டுமாய்வதல்லால்
கரந்தைகளாண்டிலொருக்கால்வருவதுகண்டிருந்தும்
அரும்புக்குங்கொத்துக்கும்வந்தார்பிழைப்பதரிதென்பரோ (௨௧)

சங்கையிலாமதன்விடுத்தபகழிதைத்தபுண்வருத்தந்தன்னைநோக்கிக்
கொங்கையையொத்திடங்கொடுத்துக்குங்குமச்சாந்தப்பற்றுங்குளிரப்பூ
சிச்,செங்கனிவாயிதழ்மருந்துமுள்ளுக்கேகொடுத்தெனக்குச் செய்தநன்
றி,மங்கையரோயிந்திரவிதெற்குவடக்குதித்திடினுமறந்திடேனே (௨௨)

ஏமிராவோரியென்பாளெந்துண்டிவஸ்தியென்பாள்
தாமிராச்சொன்னதொல்லாந்தலைகடைதெரிந்ததில்லை
போமிராச்சூழுஞ்சோலைபொருங்கொண்டைத்திம்மிகையில்
நாமிராப்பட்டபாடுநமன்கையிற்படுகொனே (௨௩)

சுந்தரகவிராயர்-விருத்தம்

ஒருகோட்டுக்கலைமுனியுமொளிதிகழும்புலியாடையுடுத்தகோவும்
மருமலர்வாழ்திசைமுகனும்வானவர்கணாயகனுமயிடன்றானும்
கரியநிறத்திருமாலும்வாலியும்பராசனுமேகாமனம்பால்
பெருமையிழந்தனரென்றாற் சிறுமனிதர்க்கெப்படியோபேசுங்காலே

வாசவனும்பிறர்நகைக்கவுடலானானொருவனராவடிவமானான்
தேசுபுகழ்க்கலைமதியுமுடலிழந்தான்மலர்வேதன்சிரமொன்றற்றான்
ஈசனுதல்விழிதிறந்தானிராவணசுந்தோபசுந்தரிறந்தார்மண்மேல்
காசினிப்புன்மானிடரோமோகசாகரமதனைக்கடக்கவல்லார் (௨௫)

உணங்கியொருகான்முடமாகியொருகண்ணின்றிச்செவியிழந்து
வணங்குநெடுவாலறுப்புண்டுமனனுமுழுதுகில்வயிறொட்டி
அணங்குநலியமெலிவெய்தியகல்வாயோடுகழுத்தேந்திச்
சுணங்கன்முடுவல்பின் சென்றால்யாரைக்காமன்றுயர்செய்யான் (௨௬)

கட்டிறலைதிருப்பிவைத்தாற்றலைவலிபோமோவந்தக்கதைபோலாட்டுக்
குட்டியிதென்னடிசகியே கெட்டிவயித்தியன்பள்ளிகொண்டான்பாயபி

ன்,பெட்டியினுங்கையிடுவனுண்டையும்பாய்ச்சிடுவனன்றுய்ப்பிலமாய்
க்காயங்,கட்டிடுவனிஃதல்லாலாறுதே மதன்விடும்பகழிப்புண்டானே

மரமதுமரத்திலேறிமரமதைத்தோளில்வைத்து
மரமதுமரத்தைக்கண்டுமரத்தினன்மரத்தைக்குத்தி
மரமதுவழியேசென்றுவளமனைக்கேகும்போது
மரமதுகண்டமாதர்மரமுடன்மரமெடுத்தார் (௨௮)

இராமசாமிக்கவிராயர்பாடியது

மாலைதனைப்புனைந்தாலுமலரணையிற்படுத்தாலுமருவார்பன்னீர்
ஏலமுறத்தெளித்தாலுமெவ்வளவே னுங்குளிரவில்லையென்செய்வேன்
கோலமுறுமணலியிலேகிளிகளொடுசுகம்படைத்துக்குலாவுமெங்கள்
சோலைதனைச்சேராமற்காமவிடாய்தணியாதேதோகைமாரோ (௨௯)

பாலைநிகர்மொழிமாதேயென்னிடத்திற்பூரணமாய்ப்பட்சம்வைத்துக்
காலமுகிலனையகரன்மணலியில்வாழ்சோலையெனுங்கன்னன் பாற்போய்
மாலைகேண்மறுத்தாலென்மனத்தைக்கேண் மறுக்கின்மதன் வாராவண்
ணம்,ஓலைசேண்மறுத்தக்காற் கிள்ளாக்குக்கேள்வேறென்றேதிடாயே,

அரக்கனலையிலங்கையைவென்றோன்மருகன்றணிகேசனன்பர்பானெஞ்
சிரக்கனலையாமலுனைக்காப்பானென்றனையடிதேமொழியேமாலை
வரக்கனலைமதிவீசப்படுமோவவ்வேளைதனில்வாதுக்கேம்
துரக்கனலைமதப்பயலென்றூனங்குனிக்கத்தகுமோசொற்றோகைநீயே

என்னையவரறமறந்தும்யானவரைமிகநினைந்திக்கிருந்துவாட
முன்னைவிதிப்படிதானோமுற்பிறப்பிற்செய்தவினைமுடிந்தவாறோ
கன்னனெங்கள்பிராமன்வரதுங்கராமனியற்காசிநாட்டில
அன்னவயற்குருகினங்காடனித்திருக்கமுடியாதென்றறைகுவீரோ(௩௨)

தன்மனையிரதமாக்கித்தன்மகன்வலவனாக்கித்
தன்மகன்பேரனோடுதனக்குமைத்துனன்காலாக்கித்
தன்னனைநாரியாக்கித்தானுமோரம்புமானான்
தன்மனமிடங்கொண்டுய்த்தசங்கரன்றனக்குமாமன் (௩௩)

முன்னொருவூரின்பேராமுதலெழுத்தில்லாவிட்டால்
நன்னகர்மன்னர்பேராநடுவெழுத்தில்லாவிட்டால்
கன்னமாமிருகத்தின்பேர்கடையெழுத்தில்லாவிட்டால்
என்னியதேனின்பேராமூரின்பேர்விளம்புவீரோ (௩௪)

(மதுரை-துரை-மரை-மது.)

புதுவைமுத்துக்குமாரதொண்டன்றமிழ்பே லக்கவிமதுரம்பொழியப்பா
டும், சதுராருண்டோவெனவிரிஞ்சன்வினவினன் சேடனன்றானென்று
னோர், பதமெனினுந்தோன்றுமன்மால்கொண்டுகடல்வீழ்ந்தான் பதும
ன்சிறி,மதமுறுநாவைப்பிளந்துகாதழுத்துமண்சுமக்கவைத்திட்டானே.

மதுசரத்தையிகழ்ந்துகுயில்வடிவேலர்தமையழைத்துவாரேனென்றே
இதமுரைத்துச்சென்றதென்னவின்னமுங்காணேனதனுக்கிரக்கமேது
சுமிதெனவளர்த்தெடுத்ததாய்க்குதவாதார்க்குதவுந்தத்தையேநீ
முதுமறைசேர்குமரர்தமையழைத்துவாமதப்பயலே முடுக்கத்தானே

குருமூர்த்தமாய் வந்துவினையொழித்துமுத்திதனைக்கொடுக்கத்தியாகர்
ஒருமூர்த்தியல்லாமன்மற்றுமொருமூர்த்திகளுமுண்டோநெஞ்சே
திரிமூர்த்தியென்பார்களவரவர்வாகனமேறிச்சேனிற்சும்மாய்
திருமூர்த்தியல்லாமலொருமூர்த்தியுங்கதியிற்சேர்த்திடாரோ ௧௭

இருகோலமிடுங்கலைசைத்தெய்வசிகாமணிமுகில்வந்திணங்காநாவில்
உருக்கோலவடிவானன்மைந்தனுமைத்துனனுநிதமோய்விலாமல்
மருக்கோலஞ்செய்வதினும்வடவனலைச்சொரிவதினுமயக்கமுற்றுத்
திருக்கோலங்கொண்டமகடயங்குகின்றாண்மயங்குகின்றாடினமுந்தானே

மூந்தனத்தைத்தூதுவிட்டேன்வரவுமில்லை மதராஜன்முனிந்தேவில்லா
ல், எந்தனத்துக்கிலக்காகமலர்வாளியெய்கின்றானினியென்செய்வேன்
கந்தனத்தையகலாதபூம்பாவைவேலப்பன்கையாற்பூசுஞ்
சந்தனத்தைசவ்வாதைநினைந்துமனதுருகுதடிதையலாளே ௧௯

வெறிவிலக்கல்.

குருத்துக்கதலிப்பசுந்தேனையள்ளிக்குரங்குகுட்டிக்
கருத்திக்கனிக்குக்குறுங்குடிவாழ்தருமண்ணல்வெற்பில்
பருத்திப்பொதிக்கிட்டதீப்போலக்காமம்படைந்தவிந்த
ஒருத்திக்கொருவன்பகையோநடுச்சொல்லுமூரவரே ௪௰

தொட்டிக்கலைச்சுப்பிரமண்ணியதம்பிரான் வெண்பா

வல்லவகுளத்திருக்குமன்னவாவாசமலி
நல்லவகுளத்திருக்குநாதனே-மெல்ல
வடிவாளைக்கொண்டமணவாளாகணிச்சி
வடிவாளைக்கொண்டென்னிடர்மாற்று

(குளத்திருக்குநெற்றிக்கண்)

கட்டளைக்கலித்துறை

பொன்முகநோக்கிமின்றன் முகநோக்குமுன்போயினளென்
றுன்னிடவீழ்ந்தனள்கைதொடவுய்ந்தன ளூன்னுடனே
பின்னும்புணர்ந்திடமுன்னறிவுற்றிடபெற்றபிறப்
பென்னலமென்றனளோரகத்தான்மலையீர்ங்கொடியே — ௪௨

ஒட்டக்கூத்தர்

தற்கோலிப்பாசப்பூதற்கேதட்டாமற்சாகைக்கேநிற்பீர்
முற்கோலிக்கோலிப்பூசித்தேமுட்டாமற்சேவித்தேநிற்பீர்
வற்றுநெட்டோடைப்பாரச்சேன்மைப்பூகத்தேறித்தர்விப்போய்
நெற்றுளுற்றுலைப்பாகிற்சேர்நெய்த்தானத்தானைத்யானித்தே ௪௩

புகழேந்தி

விக்காவுக்காவித்தாவிப்போய்விட்டானட்டார்சுட்டேர்புக்கார்
இக்காயத்தாசைப்பாடுற்றேயிற்றேடிப்போய்வைப்பீர்நிற்பீர்
அக்காடப்பேய்தொக்காடச்சூழப்பாடத்தீவெப்பாடப்பூண்
டெக்காடக்கானத்தாடப்போநெய்த்தானத்தானைத்யானித்தே ௪௪

ஆகசெய்யுள்-௩௫௨



இப்பதிப்பில் நூதனமாகச்சேர்த்த

பலவித்துவான்கள்பாடியபாடல்கள்

கலித்துறை

நீந்தாவறிஞாபிணியாளர்கல்விநெறியறியார்
பூந்தாரமஞ்சிவிருந்தொளிப்பாரபொருட்கேசிவிகை
யூர்ந்தேசுமைசுமந்துண்போரிவர்களுயிரிருந்து
வீந்தாரிவரைவர்காண்செழியாதிருவேங்கடமே. ௧
கொடுத்தாவிகாக்கின்றகாவேரிவற்றிக்குறைந்திடினு
மடுத்தோண்டிநீருண்ணுவாராதுபோலிந்தமானிலத்தி
லடுத்தாரைரட்சிக்குந்தாதாவென்பார்க்கடையாளம்பிச்சை
யெடுத்தாகினுங்கொடுப்பார்வெள்ளைநாவலிருப்பவனே. ௨

வெண்பா

மாமிக்கோர்மாமியுண்டுவாணருக்கோர்வாணருண்டு
சாமிக்குமேற்றகப்பன்சாமியுண்டு-பூமிக்குள்
எல்லாந்தெரிந்தவருமில்லைதெரியாதவரு
மல்லாமற்கண்டவர்களார் ௧

ஆங்காலமெய்வருந்தவேண்டாமதுவன்றித்
தேங்காய்க்கிளநீர்போற்சேருமே-போங்காலே
காட்டானைதின்றகனியதுபோலாகுமே
தேட்டாளன்றேடுந்தனம். ௨

சொல்லிச்செய்வார்பெரியோர்சொல்லிச்செய்வார்சிறியோர்
சொல்லியுஞ்செய்யாதவர்கசடர்-சொல்லுங்கால்
குலாமாலைவேற்கட்குறிப்பறிந்துபார்க்கிற்
பலாமாநற்பாதிரியைப்பார் ௩

கலித்துறை

முற்றுதல்லையும்வாசமுமுள்ளுமுனையுமெவர்
சற்றுகிலுஞ்செய்துவைத்ததுண்டோவன்புஞ்சர்க்குணமும்
பெறலூர்பிறவிக்குணங்காணதுகண்டுபேதையர்கள்
கற்றல்வராதுகண்டாய்கச்சிமாநகர்காவலனே ௪

வெண்பா

மிக்குப்பெருகிமிகுபுனல்பாய்ந்தாலும்
உப்பொழிதல்செல்லாவொலிகடல்போல்-மிக்க
இனநலநன்குடையராயினுமென்று
மனநலமாகவாங்கீழ். ௫

உடைப்பெருஞ்செல்வத்துயர்ந்தபெருமை
அடக்கமில்நெஞ்சத்தினுடு-நடக்கையின்
ஒள்ளியனல்லான்மேல்வைத்தல்குரங்கின்கைக்
கொள்ளிகொடுத்துவிடல் ௬

சத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமில்லையேயில்லையாகும்
சத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமெய்திடிலெய்துமன்றே ௭
கதிரவனில்லையேற்கண்ணிற்காண்பனமறையுமாபோல்
நிதியமொன்றில்லையேயியார்க்குநீதிமான்ஞானபோதம்
துதிபெறுகீர்த்தியாண்மைச்சூழ்ச்சிமந்திரவிசாரம்
சதிரபிமானமெல்லாந்தன்னிலேமறைந்துபோமால் ௮

கலித்துறை

பாலுக்குச்சர்க்கரையில்லையென்பார்க்கும்பருக்கையற்ற
கூழுக்குப்போடவுப்பில்லையென்பார்க்குங்குத்தித்தைத்த
காலுக்குத்தோற்செருப்பில்லையென்பார்க்குங்கனத்ததண்டி
மேலுக்குப்பஞ்சணையில்லையென்பார்க்கும்விசனமொன்றே ௯

மேவுமெண்பேர்கம்விளம்பில்பெண்ணுடைவியன்கலன்பாற்
றுவியம்போசனந்தாம்பூலம்வீசுசுகந்தமன்பி
னுவெழிற்பாடடலர்மெல்லணையாமிவைநன்கமைந்த
வாவிக்கடவுளருட்பாழிபெற்றவரசிடமே ௰௨

வெண்பா

எண்கோவைமேகலைக்காஞ்சியிருகோவை
கண்கோள்கலாபமிருபத்தொன்று-பண்கோள்
பருமம்பதின்மூன்றுமுப்பத்திரண்டு
விரிசிகையென்றுணரப்பாற்று ௰௩

மன்னவன்குணங்கொடிதெனவருத்தலுமதற்குத்
துன்னுபைங்கொடியடுத்தகொம்பதனையேசூழும்
கன்னிமாதருமன்னருந்தங்களைக்காத்தே
பண்ணுமிங்கிதஞ்செயுமவர்பாற்செய்வர்பரிவு ௰௪

பாவிகளகத்தைப்போலும்பலவிரதியர்கள்போலும்
ஓவருசகாயர்போலுமுறைமுறைசுற்றம்போலும்
மேவுவரவனைச்சேரினமேன்மையரோனுமுய்யார்
பூவையுமுயலுமுன்னோர்ப்பூனையைச்சேர்ந்தவாறே ௰௫

வேந்தருங்கொடுந்தீயும்வெவ்விடம்பொழிபகுவாய்
பாந்தளுஞ்சரியாதலினன்னவன்பக்கல்
போந்துநண்புகொண்டடவிநீபுரக்குமாறென்னும்
மோந்திடும்படிக்கடிப்பதுமன்னர்தம்முறையே ௰௬

ஒருவருக்கமுதளித்தாலுண்பனேலுலகமாளு
மிருவருக்கமுதளித்தாலிந்திரன்பதவிசேர்வார்
மருவியபூசைசெய்துவந்தவரிளப்பையாற்றில்
திருமடவன்னதானஞ்சிவாலயமாகுந்தானே ௰௭

வெண்பா

அருக்கனையுஞ்சோமனையுமைம்மூன்றுநாளதனிற்
பெருக்கவரவந்தீண்டிற்பேசுங்கால் செருக்களத்தின்
மன்னர்மடிவார்மடிவாரோயாமாகில்
அன்னமரிதாயவிடும் ௰௮

பரிதியும்பஞ்சமாகிற்பார்மதிவெள்ளமாகுங்
குரிதியுங்கூச்சலாகும்கொடும்புதன்காற்றதாகும்
பெருததகோர்வியாழம்வெள்ளிப்பேரகமேறவிற்குங்
கருத்தகோர்சனியுமாகிற்கலகமும்பற்றருதே. ௰௯

வெண்பா

கல்லாடர்செய்பதுவல்கல்லாடம்நூறுநால்
வல்லார்சங்கத்தில்வந்தருளிச் சொல்லாடா
மாமதுரைபீசர்மனமுவந்துகேட்டுமுடி
தாபசைத்தார்நூறுதரம் ௨௰

இடுகாட்டுமங்கையெலும்பிற்புரண்மால்
சுடுகாட்டிலாடுவார்சுட்டினெடுகாட்டுஞ்
சம்பந்தாயென்புநின்பாறந்தாக்கிக்கொண்டிலனே
கும்பந்தானென்னுமுலைக்கொம்பு ௨௧

கலித்துறை

அரியெச்சில்போல[illegible]வெச்சிலுமஞ்சரியெச்சிலும்
எரியெச்சிலேலழுமுனியெச்சிலும்போரவேந்திழையாள்
கரியெச்சில்போன்றனள்விக்கிரமச்சோழன்கனைத்தகன்றின்
புரியெச்சிலுண்டபுயல்வண்ணனெச்சிற்புரந்தரனே ௨௨

வாக்குமனமுமுடையானென்னார்தமணிமுடிநீ
ராக்குந்திறமையிருங்கோளன்வெற்பிலயனடுக்கம்
போக்கும்புனிதனுங்கந்தனுமாலும்புரந்தரனும்
நாக்குங்கழுத்துந்தலையுமில்லான்பகைநானல்லவே. ௨௩

காயுங்கடுஞ்சுரமீதென்றுகாட்டியகையுஞ்சொன்ன
வாயும்புகையெழும்பாலையிலேமணிமாமகுடம்
தோயும்புகழ்கச்சிச்சுந்தரபாண்டியன்தோகைவெர்பில்
தாயுந்தமருமில்லானிங்ஙனேநின்றதார்குழலே ௨௪

ஆக செய்யுள்-௯௭௬



கடிகைமுத்துப்புலவர்பாடிய



மடக்கு

கருப்பஞ்சிலையுமோர்கரமே [illegible]ண்டேனுஞ்சுகரமே
காமப்பயலுமோர்க்கரமே கணையைத்தொடுப்பான்சிக்கரமே
வருத்தம்புரிவாரனேகரமே வல்லார்மடவார்நிசகரமே
மாமால்வெங்கடேசுரெட்டன்வருவான்வருவானென்றிரங்கே,

திருத்தும்படிக் [illegible] ரித்திவாகரமே
இனியில்வருவாயெ [illegible] கித்தான்சக்கரமே
பொருத்தந்தருகண்ணுகரமே [illegible] லைவீராகரமே
பூவைமாருஞ்சேகரமே புகழ்ந்தேன்ரத்திஞகரமே க

கையான்முகத்தைத்துடைத்துமலர்க்கண்ணுலெனையும்பார்த்துமலர்க்
காலால்வண்டுகுடைந்தமலர்க்கணியையெனதுகுழற்கணிந்து
மெய்யானதையேதடவியென்றன் மேலேயிலங்குமுடைமையெல்லாம்
வெவ்வேருகக்களைந்ததனை மீட்டுநிறையாத்தரித்துமங்கே
கையாவிடையைத்துகிலாலே நன்ருய்பொதிந்துமனம்விரும்பி,
நகைத்தான்வெங்கடேசுரெட்டன் நானுமகிழ்ந்தவனைப்பார்த்தேன்
மையார்விழியார்தமைக்கலவி வகையாலுருக்கிவசப்படுத்தும்
மார்க்கமவனுக்கல்லாமல் மாரன்றனக்கும்வாராதே உ

தலைவனைச்சேர்ந்தவகைக்குங் கடலுக்குஞ்சிலேடை

மடிமேலேந்திமலர்வாய்த்தேன் வழங்கித்தளபாரத்துகிரும்
வைக்கத்தனமேகசங்குமென்றுமணிவாய்முத்தம்பலகொடுக்கக்
கொடியினிடைசாள்விசைத்தெழும்பிக்கொள்கப்பலைப்பாயசைக்க
வந்து,கூடவரைச்சோமனுந்தோயக்கொட்டுமமிர்தங்கொப்பளி
க்கப்,படியையளந்தகாலாற்கற் பாறைமிதித்துமடையாதைப்
பார்த்துமுனியேதிதுவெனவே பகர்ந்தோன்வெங்கடேசுரெட்ட
ன்,துடியுமுனையும்படைத்தவெற்றித்துறையைச்சேர்ந்தவிதம்போ
லத்,தோற்றுங்கடலேநானுனக்குச் சொல்லிக்காட்டவேண்டாம்

அப்புறத்தொதுக்கடிக்கும் அத்தொழிற்சொருப்படுத்தி
அக்கணத்தினிற்றெருடைக்குள் அப்படிப்படுத்தெழுப்பி
இப்புறத்திழுத்தொருத்திஎப்படிச்சமத்திசெட்டி
இத்தனைக்குமுத்தரித்ததிப்படிக்கெளப்படப்பை
குப்புறக்கிடத்தும்வித்தை குற்றமற்றவித்தைகுத்து
குத்தெனச்சொலச்சொலிக் கொடுத்துளாத்தடுத்தடித்து
மெய்ப்புறத்தொழிற்பயிற்றி வெங்கடேசுரெட்டமன்
விடியுமட்டுமனுபவித்த வித்தைநல்லவித்தையே. ௩

ஒருதரத்தில்விடவிலைப்பின் உபரிவித்தைமுநடத்தி
உகிர்செலுத்துகரிசரத்தில உரகனுச்சிமணியசைத்து
மருவியுப்புமமுதுடைத்து வரவெழுப்பிமதிலெனக்கு
வலுமயக்கம்வரவிரித்த மலரணைக்குள்விழவுயர்த்தும்

இருதொடைக் [torn] ளமலர்த்திமுலைசுவைத்தும்
இதழ்சுவைத் [torn] ுதாரத்தில் இருவருக்குமனம்ருசிக்க
விருதுகட்டியநுபவித்தவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்த வேளைநல்லவேளையே ௫

தந்திதங்கலந்துகண்ட தந்தரங்க மென்றுசந்த
தந்திடம்பரிந்தணைந்த தந்திரந்தெரிந்திசைந்து
பந்தெழும்புகின்றதென்று பந்திகொண்டெழும்பவுஞ்சு
பந்தருஞ்சுகம்பொருந்து பந்தயங்களும்பகர்ந்து
வந்துவந்திருந்தகொங்கை மந்தரங்குலுங்கவண்டு
மண்டிகொண்டைகொண்டலென்று வந்தொதுங்குசண்டைகண்டு
விந்தைவிந்தையென்றியம்பி வெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்த வேளைநல்லவேளையே ௬

மடியில்வைத்துமுலைபிடித்து வலியமுத்தமிடமுகத்தில்
வதனம்வைத்துமதனவித்தை வகைபிறக்கவவனுணாத்து
முடியுறைக்ககமழுத்திமுதுகினிற்கைபடவணைத்து
முறுகிமெத்தவிறுகிவெட்க முழுதும்விட்டுமெலவசைத்து
நெடியபுட்கள்குரலெழுப்பி நிலைதரித்தவிழியிமைக்க
நினைவுமற்றபரவசத்தி னிறைவெனக்குவரமயக்கி
விடியுமட்டுமதுபவித்து வெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்த வேளைநல்லவேளையே ௭

மடக்கு

சுரதஞ்செயவேகடிதடவிச் சுரதந்தனையேதொட்டதுமீ
சுரதந்திரமாமதனேயுமீ சுரதந்திரமென்றெண்ணேனே
சரசஞ்சொலியேநகைத்ததுமிஞ் சரசந்தானேமுடித்ததுபூச்
சரசம்பிரமவேளெடுத்தசரச்சலமுந்தவிர்ந்தேனே
கரகஞ்சமுமென்முலையான கரகந்தொடுமப்போதிலநங்
கரகந்தையும்யோய்விட்டதா கரகந்திருவமணமிதுவே
அரவந்தருபுட்குரன்முழங்க அரவநதனிலேநடித்தபூவில்
ஆமால்வெங்கடேசுரெட்டன்அநுபோகத்தைத்தொடுத்தானே ௮

மடக்கு.

சேலையுரிந்தான்கடிந்துவிழிச் சேலையுருட்டிப்பார்க்கையிலே
செவ்வாயிதழைக்கொடுத்தானென்செவ்வாய்நீவிப்பற்பதித்தேன்
மாலைசரிந்தபிடரினுக்குள் மலையமைந்தபிறைபோல
வைத்தானகத்தைக்கவலையுஞ்சு வைத்தாலயமிதென்றுணாத்தேன்

காலையிடுப்பிலிருக்கியொருக்காலைவகையா [illegible] த்தாற்
கட்டியணைக்கத்தொடுத்தவகைக் கட்டிசொலவுமன்மெருமோ
வேலையெடுத்ததிரைக்கடலே வேலெயெடுத்தமுருகனைப்போல்
வெங்கடேசுரெட்டனெனை மேவச்சமயமவாய்த்ததுவே ௯

மடக்கு

கலசமுலையைதொட்டெனையுங்கலசமதியாமெனிற்பிடித்துக்
கசக்குமுலைக்காம்பையும்பருகக் கசக்குமெனவுநினையாதே
சலவையுரிவேனுயர்ந்தபுயா சலவையினுநான்விடுவேனே
சவாதுவழித்துக்கழுத்தினிற்பூ சவாதுவனாநேரிதழ்பருகு
புலவிதனையேநினைப்பதுநான புலவிதலவோசமயமென்றே
புகழ்சேர்வெங்கடேசுரெட்ட பூபாவுனையேநானினைந்தேன்
நிலவானதுவுங்குளிரமந்தா நிலவாசமும்வந்தடிக்கவுநான்
நினைப்பாயலிலேமருவவுநீ நினைப்பாயலிலேயென்றேனே ௰

கன்வில்வருமன்னவனெனது கையைப்பிடித்துமடியில்வைத்துக்
கார்போற்குழலைக்கோதியவன்கையான்முதுகைத்தடவியுமென்
மனதுகுளிரமுன்புசுருள் வழங்கியவனேபின்புமுத்தம்
வழங்கித்தலையைவளைத்ததர மாறிச்சுவைத்தான்வகைக்காரன்
சனகன்மகளைமணம்பொருந்துந் தாமோதரன்போலிருபுயமுஞ்
சாதிவனசக்கன்மலருஞ் சந்த்ரோதயம்போற்றிருமுகமும்
எனதுவிழியிற்குளிரவுங்கண்டிருந்தேன்வெங்கடேசுரெட்ட
மேந்த்ரன்கலவிதனைக்கடலே இன்னம்புகல்வேன்கேட்பாயே ௰௧

ஆழியிடத்திலிருந்தாளென் றவளுமுரைப்பமகிழ்ந்துகணை
ஆழிகொடுத்தானதனுடனே அதிகவிலைமுத்தமுங்கொடுத்தான்
ஊழிகாலம்வாழியென உரைக்கத்தூதியெமைப்புரக்கும்
உரவோன்வெங்கடேசுரெட்டன் உகந்தவெகுமானமுங்கொடுத்தான்
சூழியானையென்றமுலைத் துணைமேலேற்றிமுரசமெனத்
தொனிக்குஞ்சிலம்புமலம்பவளை துகிலுந்தரிக்கமனைக்குள்வந்தேன்
வாழியெனவேநானிருந்தேன் மாரப்பயலுமபுறம்போனான்
மையலொழிந்துசண்பொருந்தி மன்னன்வரவுங்கண்டேனே

மடக்கு

கடலேயுண்போல்வந்தவளைக்கண்டேன்மகிழ்ந்தேன்வார்த்தையுஞ்சற்
கண்டேநினைப்பதெல்லாநிகண்டே யெனவுங்கண்டேனே
உடலேன்பசந்தாயென்றுளார் உறவேனபசந்தாயுனாக்கவெனக்
கொருவரிலாதவாறென்றேன் உள்ளதெனவேதலையசைத்துத்

திடமேபுகன்றுள்புவிபுரந்த செயமால்வெங்கடேசுரெட்ட
தீரன்கொலுவிற்சென்றுளென் செய்தியுரைத்துன்பவனிகண்ட
தடமென்முலையார்பொதுமாதர்தம்மிலொருத்திபதுமினிப்பெண்
தாமங்கொடுக்கவேண்டுமென்றுள்சாமிகருத்துமிசைந்தானே ௰௩

மடக்கு

கர்மனிவனேயென்னிலவன் கறுப்பனிவனைச்சிவப்பனென்பார்
காளைவேலனென்னிலவன் கண்ணீராறுக்கலந்திருப்பான்
பூமன்னவனாகிகருணையாப் பூமான்வெங்கடேசுரெட்டன்
புகழ்சேரெட்டபுரந்தழைக்கப்புருடனைப்போல்வரக்கண்டேன்
சோமன்றனகுமாமனையே துணையாயிருக்குமாமனையே
சூழும்புவிக்குள்வளைபட்டே துடித்தேன்மதனால்வளைபட்டேன்
ஆமன்மதன்சேர்வைப்பறையே ஆரமணிசேர்வைப்பறையே
ஆழநிலையாப்பயனிலையே அன்னையாலும்பயனிலையே ௰௪

கடலுக்குந்தலைவிக்குஞ்சிலேடை—மடக்கு

கச்சங்கடக்கவடங்காக்கொங் கைக்கும்பசலைபொருந்தியனங்
கைக்கும்படிக்குமிருந்துமடல் கைக்குந்தரிக்கவெண்ணி பதி
உச்சம்பார்க்குமடவார்கள் உள்ளங்கவரக்காமனைப்போல்
உதித்தோன்வெங்கடேசுரெட்டன் உலாவப்பார்த்தேன்பெருங்கடலே
அச்சங்கூருமுன்னிடத்தில் அச்சங்கூருமென்னிடத்தில்
அம்பாலசைவாய்நீயுமதன் அம்பாலசைவுமெனக்குண்டே
மச்சங்கடவாதுன்னையுங்காமச்சங்கடவாதெனக்குமுண்டாம்
வணங்காராகுமுனக்கெனக்கும் வணங்காராகுஞ்சிலதியோ ௰௫

மடக்கு

வருந்துஞ்சனகிமுகம்பார்த்து வரிவிற்பலத்தைப்பின்பார்த்து
மணக்கோலஞ்செய்திருந்தவன்வேள்மணக்கோலஞ்செய்தனைப்பாரான்
திருந்துவளையும்போச்சென ?வதெரிவைமாதர்மயலாகுஞ்
செயவேள்வெங்கடேசுரெட்டதீரனிளசைக்கடறறுறைவாய்
இருந்ததிடனுகக்காவே என்னைத்திடனுககுகாவே
ஏறறதாலத்திடந்துாரோ ஏசுந்தாலத்திடந்துாரோ
பொருந்துமணவினவாய்த்திட்டே பொருப்பேனேதாய்வாய்த்திட்டே
புதிநாமதியாநந்தினமே பொருகாமதியாநந்தினமே ௰௬

மடக்கு

காரியனையகொடைக்குமுப காரிதழ்பாராட்டும்விப
காரிமதியோசனையாலுங் காரியகருமம்பகர்வோன

வேரிவனசத்திருமாதை விழியுளிருத்திப்பகையனைத்தும்
வென்றோன்வெங்கடேசுரெட்டன்மேவுமிசைக்கக்கடற்றுறைவாய்
வாரிமுகட்டிலெழுகலமேவளைபோனதுவுமெழுகலமே
வந்தால்வருமீசுரப்பாறேமேயலெனக்குஞ்சுரப்பாறே
நீரிறுறுமீன்புலவே நெடுநாட்செலுமோநான்புலவே
நெய்தறிபடருங்கொடியாரோநேயரனைமார்கொடியாரோ ௰௭

மடக்கு

கனத்துப்புடைத்துப்பருத்துவிம்மிக்காம்புதிரண்டுகண்கறுத்துக்
காமன்மகுடம்போற்பரந்து கச்சுக்கடங்காககனதனத்தார்
மனத்துக்கிசைந்தவடிவழகன்மதவேள்வெங்கடேசுரெட்டன்
வைகைநதியும்வைப்பாறுமைந்துபெருகுங்கடற்றுறையே
உனக்குமோவாசஞ்சலமே உள்ளத்துளவாசஞ்சலமே
ஒழியாதுப்புமயக்கம்மே உண்டேதுப்புமயக்கம்மே
சினத்துமோதுவரியாரோதெரிந்துமோதுவரியாரே
தேனுக்கோடமலைத்தேனே சித்தங்கோடமலைத்தேனே ௰௮

பாட்டுடைத்தலைவன்குணத்துக்குங்கடலுக்குஞ்சிலேடை

மடக்கு

தெரியவமுதம்பழகுமதி தெரிந்தவாரம்பிரியாமற்
றிரத்திடப்புநீங்காமற் செழிக்கவாய்மைகடவாமல்
வரிசைபுரிந்துதமிழ்புனையவந்தோன்வெங்கடேசுரெட்டன்
மனதுநிறையுங்குணம்போல வளரும்பெரியகடற்றுறைவாய்ப்
பெரியமீனேசினக்சயலே பெண்பாலெவருமெனக்சயலே
பெருகுந்திரையிற்செல்லீரோபிழைக்கத்தூதுசெல்லீரோ
அரியினமனையேமூடலையே அமைத்தாரொவருமூடலையே
அரனார்க்குரித்தாங்கணைக்கூடே அணுகேன்மலர்தாங்கணைக்கூடே

ஆகசெய்யுள்-௯௯௫.



மின்முடுகுவெண்பாவும்-வெண்டுறையும்

கல்விக்குஞானக்கருத்துண்டாஞ்சாயமுறும்
தொல்வினைகளெல்லாந்தொலையுமே வில்லைத
னிற்புயற்றிருக்கணத்தனித்தன்வச்சிரப்புயத்தோர்
கற்பகத்தினைத்துதித்தக்கால்

சிந்தாகுலந்தீருஞ்செய்கருமங்கைகூடும்
சந்தானமென்றுந்தழைத்தேறும்-பைந்தாமத்

தானவயத்தானைமலைப்ப வையவள்த்தானைமகத்
தானைமுகத்தானைநினைந்தால் ௨

செல்வம்பெறலாஞ்செழித்தபுகழ்சேரலாம்
வில்வம்புனைவார்விரிஞ்சேசர்-புல்லுமதன்
கோளைமுடித்தாரிமயக்கோதையிடத்தாகமலத்
தாளைமனத்துடுநினைத்தால் ௩

அண்டர்தமக்கரசாமன்புபடரக்கொம்பாம்
மண்டவுணர்தம்முயிர்க்குவன்னியாம்-பண்டுதிறற்
கஞ்சனஞ்சிடுங்கடம்பணிந்தெழுந்துகந்துசூரை
மிஞ்சிநெஞ்சுறிந்தெழுந்தவேல் ௪

ஆதரவாயென்னருகிலஞ்சலென்றுவந்துநின்று
போதரவுசெய்யுமெப்போதுமே-ஓதுதமிழ்ச்
சந்தமுந்தலங்கிர்தஞ்செறிந்துநன்குயர்ந்துதங்கு
விந்தைகொண்டிலங்குசெந்தில்வேல் ௫

இங்கிதமாநல்வாழ்வெமக்களிக்குமுற்பகல்செய்
சங்கடமாம்வேலைதணிக்குமே பொங்கமுறத்
தற்பரற்கனுக்ரகித்திடக்கருத்தனித்தசத்த
வெற்பினைத்துளைத்தவுக்ரவேல் ௬

ஈட்டும்வினைகளறுத்தின்பமுறவேயெனது
பாட்டுக்குகந்தருளபாலிக்குமே-நாட்டமிகும்
மண்டலங்கலங்ககண்டர்கண்டர்துண்டர்மிண்டராவி
விண்டொடுங்கமண்டியுண்டவேல் ௭

உன்னவினிதாயிருக்குமோங்குசெல்வமும்பெருக்கும்
நன்னலருளைக்கொடுக்குநாடோறும்-பன்னும்
சகடமுருளநெருடுகமலசரணகருணையரியின்மருகன்
விகடகரியினிளையமுருகன்வேல் ௮

ஊழ்வினையைப்போக்குமேபுள்ளொளியைக்காட்டுமே
வாழ்வதற்கோவித்தாயவளருமே-தாழ்வார்
தடபடவெனவதிர்கடலதின்முடிமிசை
விடவதிபொடிசெயும்வேல் ௯

ஓராருசென்னியொருமுருகாவென்றளவில்
தீராதவல்வினைநோய்தீருமே-போராடிக்

கொக்கரித்துவெற்படர்த்துக்சொக்கரக்னைகத்துணித்த
விக்ரமத்திருக்காத்துவேல் ௰

கந்தாகடம்பாகயிலாயமாமலையான்
மைந்தாசுவாமிவடிவேலா சந்தக்
குறம களாசைகொள்கணவா குருபரனாகியகுமரா
அறுமுகவா பழனியின்வேலா ௰௧

அன்பர்பயங்கெடுக்குமத்திகிரியைத்துளைக்கும்
இன்பவல்லிகண்ணுக்கெதிராகும்-மின்பரந்த
வாகுதோளிலேறிமீறிவாகுசாரியோடியாடி
வேகசூரன்மார்பிடந்தவேல் ௰௨

அஞ்சிமயல்சகியாதங்கமுருகுகின்ற
வஞ்சியைச்சேர்தென்றணிகைவள்ளலே-பஞ்சமலர்
அங்கசனுக்குங்கிரணத்தந்திமதிக்குங்கடலுக்
குங்குழலுக்குங்குயிலுக்கும் ௰௩

வாங்குசிலைநுதலார்மாயக்கலவியிலே
ஏங்கிமனமேயிளையாதே-மாங்கனிக்காத்
தம்பியொக்கச்சண்டையிட்டுத்தந்தையைச்சுற்றந்தவொற்றைக்
கொம்பனைச்சுற்றன்புவைத்துக்கூறு ௰௪

தாமரைப்பூந்தேனையுண்டுதாதளைந்துவண்டிமிர்ந்து
காமரஞ்செய்வாவிகள்சூழ்கந்தர்சிவ மாமலைவாழ்
பூவையரங்கந்தங்கம் பூகமிலங்குங்கண்டம்
காவையரங்கஞ்சங்கண் காண் ௰௫

வந்துமழைபொழியும்வானேவெஞ்சூர்தடிந்த
கந்தா திருவிழாக்காலத்தில்-தொந்தரையா
நீர்த்துளியையூற்றிவி-னேர்த்தியலமாற்றிவிடு
கீர்த்திவருநாட்டென்மொழிகேள் ௰௬

போற்றுவார்வல்வினையைப்போக்குமேபூமலர்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமேதோற்றரிய
சந்தந்தங்குஞ்செஞ்சொற்சங்கம்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால் ௰௭

ஆறுமுகமென்றளவிலச்சந்தவிர்க்குமே
வேறுவினைவந்தல்விலக்குமே-கூறுபுகழ்

மாரியொத்தசூரபத்மன்மார்பிளக்கவேதொடுத்த
வீரசத்தியர்ன்மிகுத்தவேல் ௰௮

வேலாவிராலிமலைவீராவுனக்கொருபெண்
மாலாகியேநின்றுவாடுகிருள் நீலான
உற்பலக்கயறகணிச்சியுத்தரித்திடச்சமர்த்தி
அற்பசிற்றிடைக்கொடிச்சியாள் ௰௯

சந்தனென்றும்வேலனென்றங்கானமயில்வீரனென்றும்
செந்தனென்று ீமன்புலவீர்செப்புகிறீர்-முந்தவிளங்
கூனற்பிறைசூடச்சிவனுருக்குபதேசித்தருள்
ஞானக்குருவேடப்பயலே. ௨௰

பன்னிரண்டுதோளாபரங்குன்றுவெப்பொழுதும்
என்னிரண்டுதோண்மீதிலேயிருப்பாய்-பொன்னின்
கதிர்முடியப்பாகுகிடக்கனவளையப்பாபழனிக்
கதிபதியப்பாகுமரப்பா ௨௧

நோகாதோவேலாநீநோக்குமடமானுக்காப்
போகாவனந்தேடிப்போனக்கால்-வாகாத்
தினநினைந்திட்டுனைவணங்கித் திரியுமன்பர்க்கருள்செயும்பொற்
கனகதண்டைச்சிறுசதங்கைக்கால் ௨௨

வாரீர்பழனிவடிவேலரோகடம்பைத்
தாரீரொன்சிந்தையினிற்றுனுறையீர்-சேரீர்நீர்
கன்றுநஞ்சுபிஞ்சுமஞ்சுகண்களுஞ்சிவந்துபொங்க
என்றனங்களுங்கசங்கவே ௨௩

மேகநிறமான்மருகவீறுதணிகேசவிது
வாகடினமேவுமிவளாவிபருள் வாகுவளை
நத்தத்தத்திற்பற்றிநச்சுப்பைக்குட்டத்து
நிர்த்தத்திற்கிச்சித்தநீர் ௨௪

பூவைக்குநண்ணுபகற்போதுகமதாமெலிந்தாள்
வாவிக்கவின்றணிகைவாழ்குமரா-பாவிதன்
அம்புரம்புகுந்தலைக்கவம்பகந்தணந்தெறிக்க
வெம்பிநெஞ்சமுந்திகைக்கவே ௨௫

அம்பிறைக்குமைந்து லரம்பிறைச்குறொந்துமிக
அம்பிறைக்குங்கண்ணுட்கருள்புரிவாய் நம்புதணி

கைக்கிரிக்குளுற்றசித்ரகச்சுடைத்தன்றனக்குறத்தி
யைக்களித்தணைத்ததவத்தனே ௨௬

என்னிடத்திலேகுமாரவென்னுரேதபேதமா
உன்னிடத்திற்கொண்டமயற்காதாயோ-தன்னிரவு
செல்லாப்பசட்டுமென்கண்செல்லாப்புரட்டுமங்கம்
பொல்லாப்பரத்தைவஞ்சிபோல் ௨௭

செங்கமலக்கண்கலங்கிச்சிந்தைநொந்திராமுழுதும்
வெங்கலைக்குஞ்சங்கலைக்கும்வேலோனே-அங்கசன்றன்
பூங்கணைமெத்தைத்தப்பூங்கொடிகத்திபட்டுத்
தாங்கணைமெத்தைத்துத்தான் ௨௮

சங்கரிதியேரகம்வாழ்சண்முகனேநின்மோக
கங்கையெழின்மேனிகளம்வண்மருங்கு-கொங்கைசெங்கண்
முந்தங்கந்தங்கக்கம்பந்தந்தங்கம்
மந்தந்தந்தண்கஞ்சமடார் ௨௯

சீமருவவாமுருகாநிதிலங்களுஞ்சிந்த
காமருதேன்பூட்டிநெடுங்கன்னல்வனைச்-சேமதனன்
வண்டவரக்கண்டுளறிவண்டும்மதியும்பரிபோய்
வண்டுவரவாய்புலம்புவாள் ௩௰

ஆறுமுகமாய்ப்புகழ்ந்துநாறுயிரப்பேர்தம்
வேறுமுகம்பார்த்திருக்கவேண்டாமே-அறுமுகச்
சுத்தனைச்சித்தத்துவைத்துச்செந்தமிழ்ச்சித்ரக்கவிக்குட்
கத்தனைச்சற்றுத்துதித்தக்கால் ௩௧

பங்கயக்கண்வேலவனைப்பஞ்சொடியாட்டிநித
மங்கிமிகவுந்தளர்ந்துவாடுகிறாள்-செங்கைமலர்
அன்னநடைமின்னலொளிசின்னவிடைவன்னமுலை
கன்னன்மொழிமின்னுமிவளகாண். ௩௨

எத்திக்கும்போற்றுமிவளைமெழிற்குமார்
தித்திக்குமின்கனிவாய்த்தேனூறன்-முத்தமிட்டுச்
சித்திரச்செப்புத்தனத்தைச்சிக்கெனக்கட்டிப்பிடித்துச்
சித்தமொத்துப்பொற்பதத்திற்சேர். ௩௩

வேலவர்தாமேற்றணைந்தவிந்தையைநானேதுசெல்லிவன்
கோலவடமோசையிடக்கொம்பனையே-சீலமுடன்

டிமுகாவிட்டணைத்துக்கட்டிமைக்கணைச்சுவைத்து
ரெட்டினைப்பதத்திலிட்டுமேல். ௯௪

வேலவனேநின்கலவிவிந்தையசற்கேற்றமங்கை
கோலவரிக்கண்சுழற்றிக்கொஞ்சுகிளி-போலமுலைக்
சகக்குட்சிக்கச்சொக்கப்பொற்சுட்டிக்கட்டிப்
பச்சைப்பொட்டிட்டத்தைப்பார. ௯௫

ஏவிழிபார்முரலிளநிலாக்கண்டுநாங்
காவமுனையவிரூங்காஞ்சியே-மேவலரூர்ச்
சக்கரக்கரத்துநைதக்கதக்கணைக்கிலக்கெனக்கொள்
நக்கரக்கரச்சகணக்கர்நாடு. ௯௬

நாலாநாள்சேர்ந்தணைந்தகன்னயத்தையெண்ணிமெத்த
பாலாநள்வேலவனேமாரனெய்யும்-கோலாலே
வண்டுதூடியானகுழல்வஞ்சியெனமோபயந்து
வண்டுகுடியாண்மருவ்வா. ௯௭

மானுதித்தயாமதிக்கும்வாரிவிட்டவேள்சணைக்கும்
மீனுதித்தவாரிதிக்குமேதினிக்குள்-நனெருத்சி
சிந்தைவாடிநொந்தசேதிசெங்கைவேலர்பங்கிலோடி
மந்தமாருதஞ்சொலோதுமா ௯௮

செந்தழல்போல்வீசுகிளிச்சேர்ந்தணைவாய்வேலவனே
கந்தமலர்ச்சோலைவண்டுங்கார்க்குயிலும்-தொந்தமுடன்
பாடுதுவம்புர்தும்பும்பார்மதனுந்தும்வந்துஞ்
சாடுதுவம்புந்தும்பிந்தா ௯௯

சந்தாவல்லவென்றல்வாசந்தாகிலுந்தா
சேர்ந்தான்மீறிவளைத்தோய்திடவே-ராசனுசேர்
மலையிந்துசேலைவண்டுமாரனபுகுழ்நொந்திவ்
வேனமுநெஞ்சமேசலங்கிலுள் ௱

பாகருமின்சொல்வள்ளிபாகாதேவேந்திரனருள்
வாகானகுஞ்சரிவிவாகாநீ-யேகாவல்
என்றநப்புமென்றநொந்தசிந்தையன்புபொங்கவந்து
நின்றுகொண்டிரங்குகந்தனே ௱௧

வாதவுன்னலுநடவாராவோராரிரண்டு
காதவுஞ்சிதகமியங்காத-நீதாவென்

சிந்தைக்கிசைந்தபடிசெஞ்சொற்கிரங்கியருள்
கந்தப்ரசண்டமுருகா ௪௨

வந்தனையாமென்றுதுயர்மாற்றிமனவேட்கையெல்லாம்
வந்தனையாத்தந்தருளுமாதவா-பந்தனைய
கொங்கைகுறமங்கையொடுகுஞ்சரிபுணர்ந்தருவு
கங்கையுமைதந்திடுகுகா. ௪௩

அந்தணர்கள்போற்றுமருந்தணிகைவாழ்குமரர்
வந்துகலத்துமருவாரள்-பைந்தொடிக்கு
மேல்படுத்தமுத்தனங்கள்வேல்படப்பொரிந்துதென்றற்
கால்படச்சரிந்தவிதன்பள்காண் ௪௪

மெத்தமயலாகிமெலிந்தயர்ந்துவாடுகிறாள்
சித்தமுவந்தாண்டருளுஞ்செவ்வேளே-இத்தலத்தில்
கண்டுமொழிகண்டஞ்சுங்கங்குல்குழல்கண்டஞ்சுங்
வண்டுவிழிகண்டஞ்சுமான் ௪௫

இருபுறமுங்காவிரிநேர்மாலையாச்சூழ்
திருவரங்காவெங்கள்குலதேவா-வெருவ
எரிபுரிந்துவிழிசிவந்துயமனிருண்டவுருவுகொண்டு
வரவுகண்டுதிகிரிகொண்டுவா ௪௬

ஒருத்திமிகமயல்கொண்டுன்சமுகம்வந்தாள்
திருத்தியணையென்றுவகைசெப்பி-யுரைத்திடுநற்
செப்புமுலைசொற்பழிக்கொத்தவிழ்ச்சித்திரவிற்
பொற்புருவத்துப்பதாரத்தாள் ௪௭

பாலர்பிழைநீக்கியிந்தப்பார்தனிலோர்கள்ளனுக்கா
மாலாழிசங்கொளித்துவந்தருளக்-காலாழி
அன்றதைக்கடித்திழுக்கவங்கவற்களித்தமுதலி
இன்றளிக்கவென்றனக்குநீ ௪௮

பாரோர்புகழுமாரம்பக்குனியுத்திரத்தில்
ஆரூரர்வீதியணிகின்றார்-நேரோ
பணச்சர்ப்பபங்கரித்துப்பொற்பதத்திற்கிண்கிணிச்சத்தங்
கிணுக்குக்கிண்கிணுகிகென்னவே ௪௯

இருவுளவாயிற்பதியிற்சேவேறுமீசா
மருவுளகொன்றைத்தார்வழங்கில்-தெருவுளதோ

சங்கமும்விழுந்திடாதுதங்கமும்மெழுந்திடாது
திங்களுமப்பூன்றிடாதுவேர் ௫௰

செங்கமலமோநீலவண்டோசித்தசன்கைநீலவண்டோ
பங்கயமோமால்வளரும்பாற்கடலோ-தங்கமலி
வச்சிரகச்சிகனவச்சிரவின்மெச்சுபுரு
வச்சினிவிடைச்சிவிழிப்பார் ௫௧

உன்மனதுமென்மனதுமோர்மனதாவொன்றினே
மன்மதனும்வில்லெடுக்கமாட்டானே-நன்மதிதோய்
குன்றடர்த்துபந்தைவென்றுகொம்படைந்ததும்பிகுன்ற
வென்றடைந்தகோங்கைமங்கையே ௫௨

சித்தமுருகினைத்திராவினித்திராவினித்திரையுமற்றுருகி
சித்தசனெடுத்துவடித்தக்கணை-தைத்துருகி
மெத்தமயலுற்றுபிரடித்துதலைசுற்றுதடி
தந்தையொருமுத்தமதுதா ௫௩

வேலோகடலோவிடமோகருவண்டோ
சேலோகணையேசிறுவாளோ-சோலமுடன்
தண்டங்கித்துண்டிருளத்தத்திவிழக்குத்துமுலைக்
கண்டங்கிகாரிகடைசகண் ௫௪

நீலமோவேலோநெடுங்கயலோவாரிதிசேர்
ஆலமோவம்புயமோவைங்கணையோ-நீலநிற
வாவிச்சோலைக்கருகில்வந்துபுனலாடுகின்ற
காவிச்சோலைக்காரிக்கண் ௫௫

சேலோகணையோபிணையோநற்றென்னவன்கை
வேலோநமனோமிளிர்வண்டோ-சாலப்
பளபளென்றுவொளிமிகுந்துபவளமிஞ்சுநகைபுனைந்த
களபகும்பமுலைமடந்தைகண் ௫௬

மூக்கனியிதழ்க்கெட்டாமூக்கதிரையிற்குமரா
விக்கநறைமிக்ககவினிமிக்கமுதுசர்க்கரைரு
சிக்கிலைசககுதுகிசிக்கலையுதிக்கிலதில்
அக்கரையக்குமடடா ௫௭

ஆராபொறுப்பார்சொல்லாதித்தாவஞ்சிமன்று
சோமராராஜசேகர-னே

சினத்தவட்டமி[illegible]த்துதித்[illegible]டெற்
றனத்திலிட்டமுத்துவெக்கிப்புணை ௫௮

இந்நேரமீயவளையின்பமணமேபுரிவாய்
தன்னேரருணசலதனயே-மன்னுமதன்
பூவினம்பையேவலின்றுபோர்செயகின்றாமெலிந்து
கர்வியங்கணாள்கலங்கினள். ௫௯

கோங்கினரும்போகுமிழோபொற்பங்கோ
ஓங்குவரையோவொளிர்செப்போ-மாங்குயிலின்
மன்னுமொழியன்னநடைமின்னலிடையென்னவரு
கன்னிவளர்சின்னமுலைகள். ௬

இத்தலத்தோர்போற்றுமிறைவனேதஞ்சைநகர்
வித்தகனேசிவாஜிவேந்தேகேள்-சித்தசன்றன்
சமரிலங்கக்குழலுஞ்சஞ்சிருமுமபெண்டிறுமுகஞ்செங்
கமலமுஞ்சந்திரமஞ்சுங்காண் ௬௧

பூமிதனிற்பேசுமபுனிதாசிவாஜிமன்ன
காமியின்மேவினறுபகைகண்டதுகேள்-காமனவன்
மாகரமுந்தோகையுமாமதியும்பாலனமும்
சாகரமுங்கோகிலமுந்தாம் ௬௨

மண்டலத்தோர்பேசுகின்றமாவேசிவாஜிமன்ன
கண்டஞ்சுங்கன்னிதனங்கைத்தாளம்-செண்டுசிமிழ்
கும்பமம்புயகிரீடங்குஞ்சரங்குரும்பைமேரு
பம்பரஞ்சிறந்தசூதுபார் ௬௩

மாதங்கவரத்திற்குவட்டமளித்தோதானுசவும்
மாதங்கதாரத்திற்வந்தருகா-மாதங்கந்
தங்கங்கம்பம்பொந்துந்தண்கஞ்சங்கண்களம்
பங்கந்தங்குஞ்சங்கம்பார் ௬௪

கடுமொழிசேர்சூறைவென்றகந்தாவிம்மதின்
நடுமொழிகளங்கண்முனூற்றாள்-ஓங்கேசத்
தந்தஞ்சங்கண்டஞ்சுஞ்சங்கஞ்சுங்வண்டஞ்சும்
பந்தஞ்சும்பஞ்சஞ்சும்பார் ௬௫

என்றுவடிவேலிளங்குமரனைக்கண்டாள்
அன்றுமுதற்சோமலதாகியே-இன்றுநம

திக்கினைத்துச்சொக்கிவட்டத்திக்கிலேபக்கத்தடுத்துச்
சுக்கெடுத்துக்கட்டிவைத்தூது ௬௬

என்னைச்சொல்வாரல்லதென்னைவிதித்தகுகன்
றன்னைச்சொல்வாரிலேபித்தாரணியில்-கன்னி
தனைமறந்தாளனைமறந்தாடுயிர்மறந்தாளணைபொருந்தாள்
எனைமறந்தாளுனைமறந்தாளென்று ௬௭

அன்றபன்மால்காணுவடிமுடியைக்காண்பதற்குத்
தென்றிசைக்கோனென்னதவஞ்செய்தானோ-வென்றிதிகழ்
ஆடரவாளாநீறணிதோளாவாதிரைகளாயாதுமணாளா
தோடாவிர்காதாமாகடவூராசொல் ௬௮

தென்றலுறவுந்திருக்கடவூரெம்பெருமான்
மன்றல்செறிந்தேமதிவூரும்-கென்றைக்காப்
பொன்பரவுந்திண்டோள்களைமேனிபுண்படநொந்துன்
பமிருந்து-அன்புதிரண்டமபெண்கொடிநெஞ்சஞ்சும் ௬௯

பாலனுக்காவன்றுபசடேறிவந்தெதிர்த்
காலனுக்குக்காலாகடவூரா-மேலோர்
கருப்புகொண்டங்கெதிர்ந்துவந்தங்கசன்பெருஞ்சரங்கள்கண்டு
மருண்டுநெஞ்சங்குமென்றன்மான் ௭௰

தொண்டருடன்கூடித்துதித்திரண்டுகண்ணாரக்
கண்டுதொழுவேனோகடவூரா-பண்டோர்
அழுதிநக்குஞ்சிறுகளந்தன்றெழுமுனக்கன்பருணாமருட்டும்
சமனைவெற்றுமபரிபுரச்செந்தாள் ௭௧

என்றுதொழுவேனெளியேனளிமுரலு
கொன்றைபணிதென்கடவூர்க்கோமானை-துன்றும்
கனற்பொறிக்கட்பகட்டிலுற்றுக்கறுத்ததெற்குத்திசைக்குளுக்ரத்
தனைச்சினத்திட்டுதைத்தபத்மாத்தாள் ௭௨

பற்றிபபணிந்துபாவவரந்தருவாய்
கற்றைச்சடையாகடவூரா-வெற்றிநெடுங்
கொண்டலொக்குங்கண்டசத்தங்கெண்டெதிர்த்தங்கருக்குஞ்
சண்டனைககண்டன்றுதைக்குந்தாள் ௭௩

ஆற்றுமோநெஞ்சத்தடங்குமோகொண்டமையல்
கூற்றுதைத்ததென்கடவூர்க்கோமானை-மாற்றுயர்பொற்

கும்பமுலைத்திங்கணுதற்கொந்தளகக்கொம்பைவெறுத்
தம்புதொடுத்தங்கசன்விட்டால் ௭௪

காணப்பெற்றேமிரண்டுகண்ணாரக்கண்டன்பு
பூணப்பெற்றேமனமேபோதாதோ-சேணிற
புரம்புரம்புரிந்திடும்புரந்தரன்பதந்தரும
பரம்பரந்தருஞ்சிதம்பரம் ௭௫

கண்டேன்சிதம்பரத்தைக்கண்குளிரமெய்ஞ்ஞானங்
கொண்டேன்சிவாயவென்றுகும்பிட்டேன்-வண்டேசேர்
நீண்டசெம்பொற்கண்டகுபடவிற்பூண்டசெங்கைப்பாண்டரங்கத்
தாண்டவன்றட்பூஞ்சபுங்கைத்தாள் ௭௬

தேரோடுவீதியொலாஞ்செங்கயலுஞ்சங்கினமும்
நீரோடுலாவிவருநெல்லையே-காரோடும்
சுந்தரத்தரந்தரத்தர்கந்தரத்தரந்தரதசர்
கந்தரத்தரந்தரத்தாகாப்பு ௭௭

வல்லாளகண்டாவடுகநாதாசுவர்க்க
வல்லாளகண்டமயல்கொண்டு-பொல்லாத
சித்தசன்சரததிறைந்துதிர்த்தகண்கண்முத்துடன்கை
நத்திழந்திடத்தயங்கினள் ௭௮

பூவணைமேனாட்டம்பொருந்தாதிருப்பவளைக்
காவடுகநாதாதென்கால்சிறுத்-தாவிவர
இக்குவிலிவிநறசணைகளிக்கணயெடுகதி
அக்கினிதரககவலையாய் ௭௯

தாண்டவாவென்றுதளருங்கனியிருந்தென்
ஆண்டவாவந்தென்னையாளென்று-மீண்டுமதன்
தொட்டனஞ்சம்பிற்கிரங்குஞ்சொற்றளர்ந்தென்றத்தைடக்கம்
சுட்டவெண்டிங்கட்குடைந்தஞ்சும ௮௰

பந்தளவுகந்தகளபந்தனையணிந்தமுலை
கொந்தளகபந்தமுமிகுந்தமுகில்-அந்தமுள
தந்தெனமெலிந்தவிடைதந்தவரியுந்தாளம்
எந்தநகரிந்தமயிலே ௮௧

தேசமதனிற்மேசுந்தேவாசிவாஜிமன்னா
வாசமலர்மாலையணிபார்பாநீ-நேசமொடு

நாடுமடமாதுமதனாலுமதியாலுமிக
வாடுமடவாளையணைவா ௮௨

பாரதனிற்பேசும்பரனேசிவாசின்ன
சீரமைந்தமாதுகொங்கைச்சித்திரங்கண்-டேரமர்கும்
பங்கயக்கிண்ணஞ்சிலம்பம்பங்கிலக்குஞ்செக்குடங்கம்
பங்கயநன்கெடக்குமெஞ்சும்பார் ௮௩

சித்தசனால்வாடுகின்றேன்சேர்ந்தணையவேளையிது
வித்தைசெய்யவேண்டாங்காண்வேலவனே-நித்யப்
படிக்குத்தணித்துப்படித்துத்தவித்துத்
துடித்துத்திகைத்திப்படி ௮௪

எய்யவக்காமாவுனக்கிங்கிடமில்லை
உய்யவந்தானென்றுறவாளுன்-செய்யமலர்த்
தேனைவிடுபூவைமுடிதினறுவிடுகைக்கரும்பை
மீனையொருகாசாகவில் ௮௫

வேலனேவேளூர்வினைதீர்த்தவனுதவும்
பாலனேசேனாதிபவேளே-சீலனே
கோங்கரும்பிற்சொக்குகோமகைக்கூந்தல்கொண்டற்கார்தளங்கைப்
பூங்கரும்பிற்கங்கடம்பிற்பூ ௮௬

சுழிபோவிளங்தென்றல்தோகையின்மேல்ம்பு
படுமோமெய்வசைப்படுமோ-கடவூரா
நீணங்கர்வேணிநம்பாநீலகண்டாமேனியின்பால்
ஆரணங்கர்காலசங்கரா ௮௭

பேதையேன்காணப்பெறுவதென்னாள் வேலவற்சோர்
தாதைபேசெம்பொற்சபாநாதாமாதவத்துச்
சாத்தலக்கணடேத்தவும்பிந்தாப்புபங்கம்போற்றவுந்தித்
தாத்தெயென்றூங்தூக்கிடுஞ்செந்தாள் ௮௮

எல்லாருநன்றாயிருக்கட்டுமேதினிக்குள்
வில்லாருந்தென்பழனிவேலோனே-டொல்லால
பாதகப்பரத்தைவைத்தபாசமெத்தமுற்றுமத்தைப்
பேதகப்படுத்திவிட்டபேர் ௮௯

வையப்புகழ்ப்பழனிவாசன்குமரன்முரு
கையன்தழுவியணைபாராய்-தையல்

மதியழன்றவளைச்சூழ்ந்துமதனனம்புபட வுழன்று
மதிமறந்துமிகவருந்துவாள் ௬௰

வேலா விராலிமலைவித்தகா நின்பீதின்
மாலாகவேயொருபெண்மையல்கொண்டாள் மேலான
வட்டமிட்டபொற்றனத்திலச்சிரபதக்கமொய்த்த
கட்டிவைப்பூக்குறச்சிறுக்கிகாண் ௬௧

மையுமணையும்வனைப்புமிழந்தாண்மாது
செய்யும்விதமென்னசித்தசவேள் எய்யும்
நனிச்சரத்தைத்தடுப்பதற்குத்திருத்தணிகைநாதனுக்கெதிர்க்க
கணத்தினிற்புக்குலாத்திடத்திக்கார் ௬௨

வைத்திடவேளாவிமருமத்திலஞ்சம்பால்
எத்தினனுடரிதைக்காமீசரோ நத்துதிர்த்த
முத்துரத்தினத்தைவதனமுத்தவ திரத்தையுற்ற
மர்தகத்தினத்திமெத்தயால் ௬௩

பாகாகாவின்சொலுடைப்பைந்தொடிமேற்கோபமென்ன
வாசசாமன்கணையால்வாடுகிறாள் சீகாழி
மாநகரிலேநிதமும்வாழவர்கடேவர்டணி
காணரினமானவடுகா ௬௪

அம்புலியூர் தன்னைபடைமின்பணிமின் ள்
அம் லியூர்விண்ணுலகையாள்வீர்கள் அம்போரு
சத்திமையனத்திலகுண த்தலனிவர்க்கரிய
சந்திரையனத்திபிடத்தா ௬௫

வாடுகிறாணின்மாலைவாங்கக்கிளிமொன்று
தேடுகிறாளார்த்தியாக மாடி
அனகனம்புசொரியவிந்துவனேலமொண்டுவிசிறவெம்பி
மனதுநொந்துகலையிழந்தமான் ௬௬

நீரோ திருவழகர்நீரோகரியமுகில்
நீரே திருமலைமேனின்றருள்வோர் நீரோ
வளர்ந்தசெம்பதங்கள்கொண்டெழுந்துமண்டலங்கள்பண்
டளந்துகொண்டடங்கலும்ண மால் ௬௭

சித்திரமாங்கூடற்றிருவரங்கப்பெருமாள்
மெத்தென்றுவேபஞ்சணைக்குள்மேவியநாள் நித்தமுமே

செங்கையுஞ்சங்கும்பொருந்துந்திங்களும்மங்குந்தயங்கும்
கொங்கையெங்குங்குங்குமந்தங்கும் ௯௮

நாராயணரோரகுராமபத்திரரோ
காராம்பசுமேய்த்துக்காளியன்மேல் நீரோமுன்
தொக்கணகதிக்கணகதொந்திமிதிமிந்திமிதி
நக்கணகவென்றாடினார் ௯௯

உறுகிள்ளைமாமொழியீரொற்றித்தியாகர்
சிறுபிள்ளையோவீண்செருக்கோபெருகிருதோ
தொக்கணகதிக் ணகதொந்திமி திமி திமிதி
நக்கணகவென்றாடினார் ௱

பூமாலைபாமாலைபூண்டசட்டைநாயகனே
மாமாலைமின்கொண்டுவாடியன லாமாலை
இந்தாலும்வந்தாலுமின்றுண்மெலிந்தோடி
வந்தாள்கலந்தாளுவாய் ௱௧

பேணக்கொடியானேமின்னையணைவதற்குத்
தானெனவேவந்ததயாபரனே ஏனையவற்
கென்னபலனென்னநடையென்னவிடையென்னவிதழ்க்
கன்னலெனுந்துன்னுமிதழா ௱௨

ஆலமோவேலோவலைகடலோவம்புயமோ
நீலமோமானெடுங்கணையோ சாலச்
சிறுத்தவிடைபருத்தமுலைசிவத்தவிதழ்வெளுத்தநகை
கறுத்தகுழலொருத்திகடைக்கண் ௱௩

நீரோசிதம்பரனார்நும்பதியோதென்புலியூர்
நீரோசுடலைகுணித்தனார் நீரோ
கடத்தடத்தகளிற்றினைக்கறுத்துறப்பிடித்திழுத்
தடர்த்தறுத்துரித்துடுத்தவர் ௱௪

போற்றுவார்வல்வினையைப்போக்குமேபூமலர்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமே சாற்றவிளங்
கந்தந்தங்குஞ்செஞ்சொற்கந்தம்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால் ௱௫

வன்மத்தைநின்மனதில்வையாதேபாவியேங்
கன்மத்தைநீக்கிக்கனாயேற்றாய் சென்மத்து

ஞமலையுண்ஞமலுமின்னார்முலையுண்ஞமலுமண்
ஞமலையின்ஞமுலையம்மா ௩௬

மேகங்கவிந்ததுபோன்மேலெழுந்தகாலனைக்கண்
டாகந்தளர்ந்துநெஞ்சமஞ்சாமுன் மாகடலூர்ப்
பூதநாதாவேதகீதாபூவிநாதாதேடொதா
மாதுபாகாகாலகாலாவா ௩௭

ஆர்செய்தவஞ்சனையோவாறுமுகவேலர்மலர்த்
தாரீயாதுற்றதென்னசர்ப்பனையோ பார்தனிலச்
சூதுகற்றசக்களத்திதோதகத்திபச்சிலைக்குள்
ஓதுசெப்படக்குவித்தையோ ௩௮

கச்சிக்கச்சாலைக்கடவுளடியைத்துதித்தால்
இச்சிக்கச்சாலையிலாவின்பமகார் மெச்சிக்க
நித்தநித்தம்விர்த்தியுற்றநிட்களத்தைப்பெற்றமுதநர்
பத்தியைச்சித்தத்தளிக்கும்பார் ௩௯

அன்னைவடிவம்மையொற்றியந்தரியைச்சிந்தித்தால்
பின்னைவடிவம்மையுற்றுப்பெதுறார் முன்னைவினைப்
பந்தமுந்தவிர்ந்துமேவுசந்தமுந்தவிர்ந்துஞான
சிந்தையுந்தணந்திடாதுநேர் ௪௰

என்றுமேம்காமீசரின்பவடிவைத்துதிக்க
அன்றும்வினைவிட்டகலுமே குன்றுமல்
தொங்கிட்டத்தோதரிகிடதோதரிகிடதோதரிகிட
தங்கிட்டத்தாதரிகிடதா ௪௰௧

முன்முடுகுவெண்பா.

திங்கடும்பைகொன்றையுஞ்சிறந்தணிந்துகொண்டுநின்ற
அங்கியம்பகன்பயந்தவன்பகந்தா தங்கமென்னும்
தேகத்தேனேகுரவர்சேய்நட்டோனேபனிரு
வாகுற்றோனேபெருமானே. ௪௰௨

கன்னிமுகநன்னிலவுகன்னலிதழின்னிலவு
பன்னுநகைபன்னமுலைபன்னிருகை மன்னவநின்
மின்னயிலையன்னவிழிமின்னலிடைபின்னுசடை
அன்னநடையின்னவறிவாய் ௪௰௩

உக்ரகிரியுக்ரகடலுட்கவடவெற்பொடுயர்
சக்ரகிரிக்கப்பாலுந்தாண்டுமே விக்ரமவை

கன்றுதொட்டுக்கனிபுருக்கசீர்த்திவெங்கடேசுரெட்ட,கமலக்கண்ணு, கன்றுதொட்டகத்தனைபுன்னைகநெகிழ்ந்ததறியாயோகலையுஞ் சோர்ந்த,கன்றுதொட்டரவிக்கைகயெல்லாங்காமனம்புகிழித்ததுபார் கருத்துந்தானே,கன்றுதொட்டுபட்டசிட்டுப்போன்மெலிந்து வாடுவதுங்கண்டிலாயே ௨

வளவனைநேராகவிசைவளர்த்தவெங்கடேசுரெட்டன் மருவாநாளில்,வளவனைமாரையுமவெறுத்தாண்மாரனும்பூங்கணையே வவருந்தியேய வளவனைமேபினைத்திருந்தாண்மடலெழுதவறியாளாய்மருங்கிலேது வளவனைபாடையுமிழந்தாள்வண்டினங்காள்கண்டசெய்திவழுத்துவீரே

பாகப்பாவருமைப்பறியிளசைவெங்கடேசுரெட்டாபகாக்கேண்மோ
பாகப்பாமொழிவிழிபாணீயேறிவருங்கலிற்றைப்பார்த்தாளாங்கொம்
பாகப்பாமதிக்கவராவென்றுளமமதியுதிக்கப்பசந்தேயீசன்
பாகப்பாவையினுகமானுள்யானீன்றெடுத்தபாவைதானே ௪

கருக்கோட்டையாளும்வெங்கடேசுரெட்டமேந்தரனென்னைக் கலந்தபோகக்,கருக்கோட்டைகாணுமடிசகியேமுன்போலின்றுங்காமனுந்த, கருக்கோட்டைநிகர்வீசைமுறுக்கிவரக்காணிலவன்சங்குன்மாலைக் கருக்கோட்டையும்பினையும்பறிவெருட்டுதலைவாசல்கடக்கத்தனே ௫

சந்தானமேநிகர்குமாரமுத்துசாமிசகோதரவான்பொன்னே
சந்தானமேருவெனநிறைந்தகுமாரெட்டனெணைத்தழுவாவாயா
சந்தானமேதரிக்கக்கூடுதிலையவன்மருங்கிற்சகியேநீபோம்
சந்தானமேலேறியுபரிசெய்தாற்றிருமடிதனக்குத்தானே ௬

திருமாலைபம்புதொட்டசிலைமாரனம்புவிக்குட்டிடவான்முல்லைத்
திருமாலைபம்புயஞ்சூழ்குமாரவெட்டமனைச்சேரச்செய்தாலுள்ள
திருமாலைபந்தெளிந்துசுபசோபனம்பொருந்திச்சிவனைநேசித்
திருமாலைபந்தொறும்போயுனைநினைத்துத்தெரிசிப்பேன்றிருமின்னுளே ௭

மாதங்கங்கோடிநிலவறைக்குளொளித்தாலுமந்தவழியேகம்ப
மாதங்கக்கோடிவிட்டுச்சென்றடிக்குமுயிர்தரிக்குமாசிவாரா
மாதங்கங்கோடிகளுங் கடலொலிக்கென்செய்வளினிவந்துசேர்வாய்
மாதங்கங்கோடிதமிழ்க்குதவும்வசுவப்பமதிமந்திரிநீயே ௮

தமிட்டராணுவம்பெருக்கிவந்தெதிர்த்தவேண்முரகசத்தங்காது
தமிட்டராவெனப்புலம்புஞ்சிறுபேதைவிரகமதுதணியவேமுத்

தமிட்டராமதிமுகத்தின்முகமழுந்தவேபுணரச்சமயம்வாணர்
தமிட்டராதரநதெரியுமெங்களெட்டேந்திரமகிபாதமிழரோறே ௯

பரத்துவசத்துருத்தாயார்பாயன்மிசைப்பூவைமுலைப்பணைப்பிலே
ம,கரந்துவசப்பாவிமலர் தூற்றுவர்நானுற்றுவனேகாட்டிலேழு,
மரத்துவசத்தொருகணையாலெய்த வெங்கடேசுரெட்டன் மருவாநாளிற்
சரத்துவசக்குரங்கெனவேதனித்திருந்துமுடியாது சாற்றினேனே ௰

நிலமாதுதிலகமெனுங்களிளசைவெங்கடேசுரெட்டநின்னைப்பார்த்த
புலமாதுவதனமும்பொற்பாலைகொண்டாய்மகளே பெண்படையாமே
கங், குலமாதுரங்கமென்றகிள்ளை பின்மேன்மாரன் வருங்குறியைப்பார்த்
துச், சொலமாதுகிலுங்கையிலே தொடுவளையுந்தோற்றுநின்ற துணிவு
தானே. ௰௧

கலக்கடமானத்தொனிமுழக்க மனமலைந்தடையார் கால்சாய்ந்
தோடப், பெலக்கடமாநகக்களிற்றைநடத்தும் வெங்கடேசுரெட்டன் ம
ணைபலிந்நான், சிலக்கடமாமரக்குயிலைபொடுக்குகடற்றொனியடக்குதெ
ன்றற்றேனா, விலக்கடமாமதப்பயலேதலைக்கடைவாசலைக்கடக்கவெருட்
டுவேனே. ௰௨

திருக்கரங்கம்வகுக்கவயில்செலுத்துபடையான் கமலச்சேக்கையா
மா, தருக்கரங்கம்பயிற்றுதுரையிளசைவெங்கடேசுரெட்டன்றழுவாந
ளில், அருக்கரங்கம்புரந்திடவும்புலியும்வெம்புலிபோலாச்சே கண்டா
ய்,உருக்கரங்கம்பரந்துடைக்கவுருக்காமம்பிறந்தானென்றுருகுவாளோ

பொரக்கலக்கமுற்றவருக்கிரங்கும்வெங்கடேசுரெட்டன் புயங்கண்
டான்மேல், உரக்கலக்கமற்றகணைமதன்விடுததாலென்னசெய்வாளோ
கோகிலமனைச், சரக்கலக்கம்மிபன்கடைந்தசெப்பலத்தானே திரண்டத
னத்தினூடே,வரக்கலக்கண்ணீருகுத்தாள்வண்டினங்காள்கண்டசெய்தி
வழுத்துவீரோ ௰௪

இத்தரமேசத்துணிவாரென்சகிமார் பஞ்சகிமாரென்றால்வேளம்
புத்தரமேவத்தனமே புண்படுமேபெண்புகல்வேன் புலவோர்க்கேபோ
தத்தரமேகத்தினையாய்த்தழைத்தவெங்கடேசுரெட்டன்றழுவினாலே
துத்தரமேதித்தனையுமுன்னாலேவிளைந்ததன்றோவொருநிலாவே ௰௫

கோட்டமிடுமருவலர்களிட்டகற்கோட்டைகளனைத்துங்கொழித்தா
ளாச, வட்டமிடும்பரிநகுலனெட்டமராசேந்தா வென்னைமருவாநாளில்

துட்டமதன் கணை துளைத்த துளைவழியே தென்றல்வந்து சுவைத்துந்தள்ளி, விட்டவெறுங்கூட்டையினிச்சுட்ட தனுலென்னபயன் வெண்ணிலாவே ௰சு

புவிக்காதிபதியிளசைப்புரந்தவெங்கடேசுரெட்டன்புலவோர்சொல்லும், கவிக்காதிவள்ளலைக்கண்டாசைகொண்டாளுக்கமுதைச்சுரைத்துப்பால்வார்த், துவிக்காதில்வளவேனும்புகட்டுசகியேமுகத்தைத் துடைதண்ணீரு, தவிக்காதிலேசுக்காளுலும் வைத்துதிவள்காயந்தலை குத்தானே ௰எ

பொருவாசிக்கொருநகுலனிளசைவெங்கடேசுரெட்டன் புயங்கண்டாயோ இருவாசிக்கெனக்கலையையுடுத்துப்பணிதிருத்துவளையெங்கோதடு, மருவாசிக்குங்குழல்முடியுனக்குத்தரிபபிடந்தான் மகளேசிச்சி,தெருவாசிக்கினதுமன்னைகம்மருந்தான்மெய்ம்மறந்துதிரிகின்றுயே ௰அ

பொரவிசையஞ்செலுத்தவெங்கடேசுரெட்டமேந்திரன்பேரம் புதுமால்கொண்டேன், சரவிசையங்கசமாரன்சருப்புவில்லைவளைத்து வலக்கையாலெய்யும்,ச விசையங்கசதில்வந்துதைத்துருவியப்புறம்போஞ் சகிக்கமாட்டேன்,இரவிசையம்புகுந்தொளித்தானிளங்குயில்காள்நீருமெனக்கிரங்குவீரோ ௰சு

புடவிகடகடெனவுடைபட வடவைசிதறவருபொருதார்ச்சிறும்
தடவிகடகளிற்றுயளிளசைவெங்கடேசுரெட்டன்றருவான்முல்லை
அடவிகடவுனதுகுடையகலமதகயமேகவனிலத்தேலா
நடவிகடநிமிர்முகடுதொடுபரிதியுதயமிதோநான்கண்டேனே உ௰

கற்றனமின்றவதென்சொன்முனியென்றுன்றுநயனம்பார்கலங்கித்தாபம்,உற்றனமின்றாமுதங்கசந்தணையாராதநெஞ்சேயுணர்ந்தோர்க்கங்கை, யிற்றனமின்றுளுதவுமிளசை வெங்கடேசுரெட்டனினியரோக்கம்,பெற்றனமின்றுமையின்றேடொழிந்ததயன்மாதரலர்பேசார்தாமே

ஆளுக்கேயழகனெங்களிளசை வெங்கடேசுரெட்டனன்பை யீசன்

தாளுக்கேவிருந்திட்டாஞென்னலர்கள்செங்குருதித் தசையைச் செங்

கை,வாளுக்கேவிருந்திட்டான்மாதராராவியெல்லாமலர்க்கவாளி, வே

ளுக்கேவிருந்திட்டான்வெண்மதிக்கென்பெண்மதியைவிருந்திட்டானே

அனங்கலக்கணந்தெரியாள்சிறுபேதைவிரகமிவட்சகிக்கமையோ

மனங்கலக்கப்பச்சமில்லையுன்னிடன்றியாடவிளுவ்வாராதாலே

இணங்கலக்கநீருகுத்துத்தேடுகிறாள்வாடுகிறாடிரண்டகும்பத்தனங்
கலக்கவருள்புரிவாயிளசைவெங்கடேசுரெட்டதமிழ்க்கோபாலனே ௨௩

என்குடங்கையானவெங்கடேசுரெட்டனருகிலணைத்திருத்திவை
த்துத்,தனக்குடங்கையாரவெணைத்தழுவாதபடிகுறையச்சகியேசொ
ன்னேன், உனக்குடம்பெலாம்பசக்குமபாலனமுங்கசக்குமபூகுரநகொங்
கை,தனக்குடங்காத்தொனிகேட்குமதன்படையும்வந்தினிக்கைகலக்குந்
தானே ௨௪

மாலைமணிமுடிதரித்தமருவலர்கள்சேனைதனைமடியத்தாக்குங்கோ
லமதகளிற்றுதயனிளசைவெங்கடேசுரெட்டன்கூடாநாளில்
பாலனந்தியலையருந்தாள்சிறியாட்குமதிக்கு பென்னபகையோமேனி
வேலைநடுக்கலத்தைவிட்டேயெழுந்தலைந்தகாகமெனமெலிகின்றாளே

ஓங்கியராமாமதியாதவன்போலவரவுமிடையுடையுந்தன்றால்
நீங்கியராமாரசரத்தால்வருந்துவதற்கிரங்கநேமியாத
பாங்கியராமாவெனக்கண்பார்த்துமருவாய்கவந்தன் படக்கையால்வாள்
வாங்கியராமாபூமாவிளசைவெங்கடேசுரெட்டமன்னனே ௨௬

கனத்துவளைபோற்புடைத்த கொங்கைமங்கைகொண்டமையல் க
ண்டுநொந்தா,வனத்துவளைச்சென்றுமலர்கொய்திவளையெய்யவந்தான் வந்
தானெப்போ,துளத்துவளைப்புரந்திதவுசொல்லாளைத்தாக்கிய வர்த்து
ருவனேட்டிற்,சனத்துவளையாக்கும்வெங்கடேசுரெட்டமேந்திரனேதள
சிங்கமே. ௨௭

தரும்பலிக்குமருவலரைத் தாக்கும்வெட்கடேசுரெட்ட சாமிமாலை
வரும்பலிக்குநினைத்தபடிக்கிப்போதுதப்பாதுவலத்திருந்த
திருமபலிக்குரலைப்பார்க்கிற்செயமடிபெண்ணேமதனன்செங்கையாலெ
ய்,அரும்பலிக்குமென்னபயஞ்சுகமாகவாழ்வாயுன்னதிட்டந்தானே

மின்னமருங்கொடியனையசின்ன மருங்கொடியமுலைவிம்மமானுள்
மூன்னமரும்பெடுத்துமதன்றன்னமருந்தொடுக்க வெகுமோகமாகி
அன்ன ருந்தென்னினுமீதென்னமருந்தென்னவுண்ணாதயாகின்றாளே
சொன்னமருந்தமிழ்ப்புலவர்க்குதவும் வெங்கடேசுரெட்டசுகுணமாலே

சடக்கலாமகட்கிள்மாந்தளிரோ மூத்தம்பொரியச்சகிக்குமாவன், ம
டங்கலாலையப்பாயும்வாறு போற்சிறுதென்றல் வருமா சொர்ணத்

குடங்கலாமதிதனமானன்மாஞ்சேர்வாய்மருவார்கூடியுத்தம்
தொடங்கலாற்டவுரிகொண்ட தருமவெங்கடேசுரெட்டசுகுணமாலே

திருவிருக்குமணிமார்பனிளையவெங்கடேசுரெட்டதீரனென்னை
மருவிருக்குமணிகணவனெனச்சேராநாண்மோகமயக்கத்தான்மேல்
விருவிருக்குமணிவளையுமேகலையுஞ் சோர்ந்திடுமேன்மேலுந்தேன்பால்
அருவிருக்குமணியலுங்காந்துந்தரள மெனமருங்கண்ணருவிதானே

குருவடியைவணங்குவெங்கடேசுரெட்டமேந்திரன்முன் கூசாமற்போ
ய், இருவடிவெல்லாம்பாரு வீணையைமீட்டனுராகமிசைத்தனேகந்
தருவடிதெள்ளமுதநவரசமொழுகும்படிபட சவ்வாதுபூசி
மருவடிபெண்ணேயினிமேன்மகராசியாய்ச்சுகித்துவாழ்குவாயே ௰௩

கன்னியுன்றன்மேற்பிரியமையாமற்றேனையிவள் கண்டான்மூன்று
மன்னர்தனிலேயொருவன் பெயனாயடிக்கடிவழுத்து வாளனத்தைத்
தென்னவன்றன்மாலையென்றுண்மதியையதிற் கடையெழுத்தாய்த்தீர்த்
தாளையா, நன்னயகுணகரகுமாரவெட்டராஜேந்த்ரநளினபாலே ௰௪

பொன்னிலங்கைராவணனைவென்றவிடையாட்களகம்புளகக்கொங்கை
தென்னனைநேராயிருக்குஞ்சொல்கார்த்தைகண்டுபயன்றேன்மகாவிற்
பன்னிவடிவூர்கணிதம்பம்மரம்பையாகுமிவட்பரிந்துசேர்வாய்
சொன்னமொழிதவறுதகுமாரவெட்டராசேந்த்ரசுகுணமாலே ௰௫

மெலக்கணக்காப்பொருந்துவோமெனவேளைமனங்குறிக்கும் வேளைபார்
த்து, நிலக்கணக்காமன்னம்புகுந்துகுந்தாப்பாயவெண்மேனிதைத்தானெ
ண்ணிச், சொலக்கணக்காவழக்கானானறிந்தவளா தெரிந்தவளாதுயரமெ
ல்லாம், இலக்கணக்காரிகைதேர்ந்தகுமாரவெட்டபூபதிபாலியம்புவாயே

அனைத்தசந்தனம்பொருந்தாளமளியின்மேற்கண்டுயிலாளரக்கன் மௌ
லி, நினைத்தசந்தனம்பாலேதுடைத்தமருதப்பன்வரநினையாளன்னை
இனைத்தசந்தனம்பசலைக்காற்று மென்றளேபரவையிடத்திலேசென்
றனைத்தசந்தனம்பாருக்குள்ளிலேயோதிவாகரனொளிக்கின்றுரோ ௰௭

அரமியஞ்சேர்த்திளவாழைக்குருத்தைவிரித்ததிற்கிடத்தவதுவுஞ்சுடா
கரமியங்கொள்ளாதெழுந்துதனாயில்விழுந்தாளதனைக்கண்டுதாயார்
சாமியங்குசேதாவிலையோவெனமூக்கிற்கையைவைத்தார்சத்யமாய்மைத

இராமியக்குங்கிளுவைமருதப்பனுக்கிச்செய்திசொல்லித்தெளிவிப்பீரோ

இருந்தலரிகலேட்டக்குங்கிளுவைமருதப்பசெயசிங்கமென்னைப்
பொருந்தலரிநாயீருந்தாற்பூத்தானஞ்செய்யானேபோர்வேளையா
வருந்தலரிகுளையலரிமாவலரிபூவலரிமாதர்கீழ்பால்
இருந்தலரிடாராமுன்னிரவிதனின்பதியம்வந்தாலென்செய்வாளே ௩௪

வரைத்தூர்றுநெடுங்காட்டுவழிப்புலவோரலையாமல்வளர்த்ததாய்போல்
உரைத்தூற்றுமலைபுரந்ததுங்கமருதப்பனொருநாளுஞ்சேரான்
கரைத்தூற்றுநறும்பாலு மன்னமும்வேண்டேனதனைக் கண்டலோமா
தரைத்தூற்றுமெனவிடுத்துத்தாய்க்கிழவிகூடநின்றுசலஞ்செய்தாளே

செருத்தாக்குமதப்புலியேதிருமலைவேலப்பாநின்செவ்வாயூரல்
அருத்தாக்குமரிக்கமுதங்கசப்பாகுமணைவேண்டா ளையோவாழைக்
குருத்தாக்குமதைவிரித்துக்கிடத்தினுஞ்சூடென்வெழுந்து ளொள்வாள்
காமக்,கருத்தாக்குமுதநாதன்கங்குல்வரக்கண்டுமுனைக்கண்டிலாளே.

எடுத்துவரிமுறத்தினிலிட்டிழைத்தகுறிபலித்ததெனவெண்ணித்தந்த
வடுத்துவரிதழுக்கேறு மெனக்கனிவாய்மடுத்துறிஞ்சுமாதைப்பாடு
படுத்துவரிம்மாதரென்றுற்சொல்பவரார்வளத்திலங்கைப்பதிமேற்சென்
று,கடுத்துவரிதனைப்பொருத்திருமலைவேலப்பனிதைக்கண்டிலானே

பொருந்தமரங்கசசரத்துக்கல்லாமலம்புலிக்கும் புறம்போவென்ன
இருந்தமரஞ்சிதமொழியாளிப்பாடுபடமுறையோவெமதுதாணி
கருந்தமருமெனையளியேயென்னளியேயாய்ச்சியர்தங்கலையைவாரிக்
குருந்தமரங்குழைத்தேறுந்திருமலைவேலப்பனிடங்கூறுவாயே ௩௮

திருகலகுவாய்ப்பறந்துசிற கொடுக்கியிருந்துகடற்சேலைவாரிக்
குருகலகுவளையொதுக்குங்கூடலில்வாழ்திருமலைவேல்கொழுவினீபோ
ய்,இருகலகுதலைமொழியாளித்தனைமாலாளென்றிசைத்தேயன்னம்
பருகலகுவளைத்தாரையாகிலுங்கேட்டாளெனச்சோபனஞ்சொன்மானே

சருக்கரையமுதுகனிதேன்கலந்ததமிழ்முனிநிகர்வான்றரியார்பெண் டீர்
கருக்கரையமுனிவிசயகிரிவேலைச்சின்னேபகனவானுனைப்
பெருக்கரையவளவலவென்றலைக்கேறிமயக்கினதுபித்தமூர்ச்சைத்

திருக்கையவுடதமெடுகைத்து மெல்லப்புகட்டமுது செலுத்தென்று
ளே, ௪௫

பொருவதற்குச்சிலைக்காமன்வருமுனமேமதுரையிற்போய்ப்பொறிவண்
டீர்காள், செருவதற்குப்புகழ்விசயன்றிருமலைநரேந்திரன்வரச்செய்வீ ரி
ங்கு, வருவதற்குத்தாமதிந்தான் மாலையொன் றகேளந்தமாலைதானுந், த
ருவதற்குமதியானேன்மையலையாயினுந்திரும்பத்தரச்செய்வாயே ௪௬

நெந்தனம்பேசுங்கொழுநம்மயல்கொள்ளுஞ்சேல்விழியீர் திரண்டமேரு
பந்தனம்போற்றனமுடையீரின்சொல்லுரையானுரைக்கும்படிநீர் கேண்
மின், எந்தனஞ்சேராத வெங்கடேசுரெட்டன் றனையழைக்க வெழுந்து
போன, சந்தனஞ்சும்மாவந்தாற்பூசலாமெனக்குமுன்றனக்குந்தானே

விருத்தப்பாகலித்துறையும் வெண்பாவுங்கொச்சகமும்விரிவாய்ச்சொல்
லக், கருத்தப்பாவெனதுமகள் சாமனரவிந்தமலர்க் கணையானெஞ்சில்
இருத்தப்பாலனம்வெறுத்தா ளனையுமவள்சகிதனையுமேசுறுணீ
வருத்தப்பாத்திரமலவே யணைந்திடுவாய்திருமலைவேல்வரிசைமாலை

வீறுதரமேவலனாவென்றவேங்கடேசுரெட்டன்மேவவேண்டி
நாறுதரமாகவண்டைத்தூதுவிட்டாளனமருந்தானெனுந்தாள்கண்ணீர்
ஆறுதரமேற்பாய்வனங்கன்பூவாளிமுலையானையூடே, ஏறுதரமாச்செவி
யைத்துளைக்குதென்றேயோலமிட்டாளெனச்சொல்மாதே ௪௯

இக்கோடிவளைப்பனெனவிருகோடியிளம்பிறைக்கீற்றெழுந்துவானில்
முக்கோடிவளைப்பமதனுற்கோடிகணைதொடுத்தான்முன்னிற்பாளோ
கொக்கோடியிரையெடுக்குமிளசைநகர்செழிக்கவருங்குமுணவெட்டுத்
திக்கோடிப்புகழ்படர்ந்தவடமலையாகடமலைமுன்சென்றமாலை ௫௰

கஞ்சுமாதங்கமுகம்பார்த்திரங்குந்திருமலைவேற்கிரியினனீர்
அஞ்சுமாதஞ்சுமந்துபெற்றபலன்கிடைத்ததெனக்காறுமாதங்
கஞ்சுமாதந்தனைப்பெற்றிழந்தோர்போற்றிரிந்துகலங்குதேழை
நெஞ்சுமாதமபலுக்குநேர்ந்தொருவன்பின்றொடர்ந்துநேர்கின்றாளே

இடக்குவடக்கடக்களிற்றுன்கம்பளவல்லக்கர்குலன்தெற்குப்பூர்வ
குடக்குவடக்கடற்கரசன்மலையாண்டிராஜன்முல்லைசொடுவந்துன்னை
மடக்குவடக்கனசெய்வன் மதப்பயலேயுனக்கினியொவ்வாதுபேரி
அடக்குவடக்கயமீனின்சடக்குநடக்காதினிமேலறிந்துபாரே ௫௨

இலக்காரமணிநாள்கண்ணிமைபொருந்தாண்மன்மதனுரெய்த புண்ணி
ல், சலக்காரமெய்ததெனக்கதிர்மதியுஞ்சுழன்றெரிப்பக்கனன்று ளென்
றே, சொலங்காரம்மியமாகவிலக்கணநாற்கவிப்புலமைத்தொன்னூலோர்
க்குப், பலக்காரமருள்விசயகிரிவேலாஞ்சின்னேனுபதிச்செவ்வேட்கே

இப்பளப்பாறையிற்படுக்கச்சொல்லுதிநீர்செடிமடைவோவில் ஊ: ௭௯

உப்பளப்பாறையுமாச்சுக்கணவனேவெகுகோபியும்மைக்கண்டால்
கொப்பளப்பார்க்கினும்பார்ப்பன்பேனைப்பார்க்கினும்பார்ப்பன் குணமி
ல்லாத, தப்பளப்பாவிருக்குதை தயாகினுவைமருதப்பம ன்னுதமிழ்க்கோ
மானே ௫௪



கட்டளைக்கலிப்பா

ஆரசந்திரனத்துமண்டெண்டிலாளருவருத்துவிருவிருப்பாகியே
ஊரசந்திரவிற் ாதிசென்றுமேயுறங்கிலாண்மகட்கென்செயுவேனையா
தீரசந்திராகாவியிடக்கயாசிங்கவுத்தண்டதுர்த்தண்டனேரண
வீரசந்திரகிரிநகராதிபாவெங்கடேசுரவெட்டமகராஜனே ௫௫

நடக்கயத்தலமொல்லாமெடுத்துவேள்சரமச்சோலையில்வந்தானொநவதை
அடக்கயத்தையுந்தாயர்கொன்றுல்வெறி யாட்டுத்தானிவ ளாசையைத்
தீாககுமா, சடக்கயத்தடையார்புவிகைக்கொண்டுகட்டுஞ் சந்திராகாவியி
டாலெனும் இடககயத்தன்னிலைநாட்டுமாமண்டலேசுராவெங்கடேசுரெ
ட்டேந்த்ரனே ௫௬

கலக்கைவாளியையார்தடுப்பார்தென்றற்காற்றுக்கார் றுவளோமடவார்வ
சை, சொலக்கைவாய்பொத்தி மெய்சோர்ந்திருக்கவுந் தோகை மோகந்
தொலையா துபாவையா, உலககைவாரியடிக்குங்கடாசலத்துதயனேகணை
யொன்றின்மராமாத், திலக்கைவாலியைப்பார்த்தெய்தமாமண்டலேசுரா
வெங்கடேசுரெட்டேந்த்ரனே ௫௭

குரங்கிக்காய்ந்திளந்தென்றலு மன்றி லுங்கோபங் கொண்டதலுன்மாத
ரோதுசெய், வரங்கிக்காபொரவாவென்றழைப்பர்மறுத்துப்பேசவும்வாயி
லைமாங்குயில, அரங்கிக்காவென்றிருந்திசைபாடவுமாற்று மாமயலாற்று
தபேதைக்கே, இரங்கிக்காவிக்ர மார்க்காரெகமண்டலேசுராவெங்கடேசு
ரெட்டேந்த்ரனே ௫௮

தானவாரணமாமுலையாளுக்குத் தானவாவெண்டளப்பத்திலேமையல்
ஆனவாறுமறியாளிவள்கண்ணீரானவாறுமறியார்மின்னாரன்றே
வானவாகண்டலாமண்டலாதிபானவாவளவாமதுராபுரி
மீனவாவிசையாமீனகேதனுவெங்கடேசரவெட்டமராஜனே. ௫௯

துரையத்தந்திதலைமுலைமேல்வைத்துத்தோயுநாளெந்தநாளோவிரகத்
தை,விரையத்தந்திவளவுஞ்செய்தாலிந்தமெல்லியற்கென்னசொல்லியுந்
தேற்றுவேன்,தரையத்தந்திவரையேந்துமேகம்போற்றணிந்தகொம்புப
டத்தன்னிழலைப்பாய்ந்,திரையத்தந்திநடாத்தியமாமண்டலேசுராவெங்
கடேசுரெட்டேந்தரனே, ௬௰

அந்திராமனமுன்மேலென்றுற்பகலடங்குமோமையலானாலுமையநீ
வந்திராமனம்பேதைக்குவேளம்புவச்சிராயுதம்போல்வந்துதைக்குமே
முந்திராமனம்பாலுண்டவாரிதி முழக்கமேசகியாளேயிளசைவாழ்
இந்திராமனுவேந்தாசெகமண்டலேசுராவெங்கடேசுரெட்டேந்திரனே.

கொடிக்கத்தத்தும்மலையுமடக்கிநெற்குறியும்பார்த்துக்குணம்பார்த்துப்
பார்த்திந்தட்,படிக்கத்தத்துவளைசோரச்சோருமென்பாலனத்துக்குன்
பாலனம்வேண்டுங்காண்,அடிக்கத்தத்துகளையும்பரப்பிமூதண் கூடமு
கடும்படிரென,வெடிக்கத்தத்தும்பரியாதிருமலைவேலுராஜவிவேககுலச
னே. ௬௨

பூசத்தந்திமுலையும்புண்ணாக்கினீர்போதும்புழுகுஞ்சவ்வாதுரா
காசத்தந்திமதியுஞ்சுடுமென்றகாமப்பேய்கொண்டகள்ளிக்கென் சொல்
லுவேன்,மாசத்தந்திசையெல்லாமதிரவேமந்தரத்தைமருப்பிட்டிடித்த
ளி,வீசத்தந்திநடாத்துந்திருமலைவேலுராஜவிவேககுலேசனே. ௬௩

ஊராராவுண்டுமிழுமதிப்பிள்ளையூராரவுரங்காதபெண்பிள்ளைமால்,
கூராராவுகணைகதொட்டான்மன்கும்பராசிகொழிப்பதுமுத்தமாம்
சூராராவிதுடிப்பத்துடிப்பச்திண்டுணைக்கராசலந் துண்டிக்ககண்டிகு
ம்,வீரராகவராமாதிருமலைவேலுராஜவிவேககுலேசனே. ௬௪

சங்கராவையசமும்பழிக்குமாந்தாயர்தூற்றிலெனும்பேதைநெய்முடை
அங்கராவையழைக்குங்கழைக்குரலனங்கவேளையழைகுமென்றேங்கு
மால்,சங்கராவையடர்வதுபோலொருகைக்கடாசலங்கால்சாயத்தாக்கிய
வெங்கராவையிடறுந்திருமலைவேலுராஜவிவேககுலேசனே. ௬௫

சந்தனத்தைவிடுக்குமுன்னேவில்வசந்தனத்தையலைப்பகைத் தெய்வே
ன,சந்தனத்தைத்துளைக்குதுபாலுங்கசந்தனத்தையுமப்படிச்செய்ததே
சந்தனத்தையண்திணிபுயாசலத் தாருவேதண்டமிழ்க்கவிஞோர் தம்வ
சந்தனத்தைத்துசங்கட்டியீந்தருடந்தரனேமுத்துமந்தரிநரேந் தரனே

பூரிக்குஞ்சரமாவாரமார்கொங்கைபூவைதாங்சபபொருதத்தொனிக்கட

ல்,பேரிக்குஞ்சரபம்போலுங்தென்றற்கும்பெருமயக்குற்றுருகச்கண்டா
ங்குவேள்,நேரிக்குஞ்சரமுங்கொண்டுவந்துபோர்நிறைந்திட்டானினீ
வந்துசேர்மத,மாரிக்குஞ்சரமீதாகுமிந்திராவன்யாரயவசுவப்ப தூயனே

நகத்துவாரயிலாங்கண்ணிகொங்கைகணையவாரறத்தைத்தவழிந்தென்ற
ல்,புகத்துவாரஞ்செய்தாலந்தவேளம்பைப்பொறுக்கவாரம்புயக்கன்
ணிதந்துசேர், சகத்துவாரஞ்செயுந் தென்னிளசைராசத்தூ வாரத்துக்
கோர்மந்தரியாய்வந்த,மகத்துவாரஞ்சிதவசனுநரவாகனுந வசுவப்பதிர
னே சுஅ

கருத்தவாவிலேபாள்கரனய்வ ருங்காமனு லுடல்வாடாதின்றின் பத்தை
அருத்தவாவிலையாயினிப்பேனை கயோவாவிதாங்கரிதாகுமையா கண்யார்
திருத்தவாவிலையாத்தன்னைநல்கியசெந்தமிழ்க்குத்தியாகாநிணப் புலால்
மருத்தவாவிலையாரயில்வேற்காராவன்யராயவசுவப்பதிரனே சுகூ

நேற்றிருந்தநிலவுமங் நேரமென்னினை விருத்தநினைப்பு மிளங்தென்றற்,
காற்றிருந்தசுகமுமுன்னுணையென்கருத்திருந்ததும்யாதென்றுசொல்லு
வேன்,சேற்றிருநதசெந்தாமரைப்பூவின்மேற்றிருவிருந்ததுபோலச்சிம்
மாசனம்,வீற்றிருந் ததுரை யேதிருமலைவேலுராஜவிவேககுலேசனே.

நிருதராகவனந்தந்தகங்குலிங்நோத்தேமதனேறியவூர்திமேல்,
வருசராகவனந்தந்தமங்கையைமருவுவாய்மலர்மஞ்சத்தின்மீதிலே
விருகராகவனந்தந் தளஞ்செறிவேந்தன் ராவணன்சென்னிபத்திரந்திட
ப்,பொருதராக வனந்தந்தகுஞ்செய பூபனேவெங் கடேசுரெட்டேந்தர
னே. எக

தடக்கடக்கயலோவிடமோவிழிதாமனாக்குமிழோசிமிழோதிரண்
டிடக்கடக்குடமாமுலைமாமதனெய்யுவாடியுருகுதல்பாரையா
உடக்கடக்குக்ரமாங்கும்பகன்னனையுசிதவிந்திரசித்தைச்செயங்கொண்
ட,திடக்கடக்கயங்காத்தமனோகராசிதாராவெங்கடேசுரெட் டேந்ரனே.

உரைக்கத்தத்துவத்துட்பொருளாகியவொருவன்கைவில்லுக் கொப்பா
மிவள்கொங்கை,வரைக்கத்தத்துவ சக்கரன்போரிதுமட்டுண்டோவந்து
முட்டுதல்பார்க்கிலாய், தரைக்கத்தத்துவளையுமெழுப்பிப்பூச் சக்ரவாள
த்தைத்தாக்கிக்கடல்கடந்,திரைக்கததத்துவயப்பரியாமணடலேசுராவெ
ங்கடேசுரெட்டேந்த்ரனே எங

விகடத்தந்திமதிகாயமாரவேள்விடுத்தவத்திரந்தைத்தூடுருவியென்
பகடததந்திவலையாகுங்கட்புனல்வடித்துத்தந்தியிசை மெறுட்பாவனோ

சகடத்தந்திப்பரித்திரட்கூட்டியசத்துருத்திரட்டைக்குத்திடத்திரும்
புகடத்தந்திக்குதயாசெயதராபூதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே ௭௪

பருதியாகமகமாகமூர்மதிபணையெக்காளம்லெடியாமலரம்பு
விருதியாகமகன்வச்ர மாமிவைமின் பொறுத்திடுமோசேர்திருவருட்
கொருதியாகமகவாசகங்கற்றோர்க்குற்பனுவெங்கள் குப்பணவேண்மைந்
தா,வ ,, தியாகமகபேருநேர்செல்வவன்யராயவசுவப்பதுயனே ௭௫
பண்ணப்பம்பரமன்னமுனைமலேபாற்றுப்பம்பரஞ்சோர்ந்துமயல்கொடு
வண்ணப்பம்பரமாங்குயமீறிமேவவிருமபம்பரக்கண்ணினட்சேலாயா
தண்ணப்பம்பரவைசூழ்பதியரசருங்கப்பம்பரந்தேசொடுவந்தடி
விண்ணப்பம்பரமென்றேதொழுஞ்செக வீரராமகுமார வெட்டேந்த்ர

உன்னக்காவடிப்பூப்பறியாணதியும்புகாள்வடிபாலையருந்தென
என்னக்காவடிவேண்டாமென்றோதினாலேதுக்காவடியக்காமற்சேருவா
ய்,அன்னக்காவடியாற்கழுகாசலத்தாதிக்காவடிமைத்திறம்பூண்டுக
வின்னக்காவடிவேலாவென்றுஞ்செக வீரராமகுமாரவெட்டேந்த்ரனே.

ஆரிச்சந்தநயம்படிப்பார்மதனலச்சந்தனக்குண்டாகியேபினும்
தேரிச்சந்தனமேசொலுவாயெனச்செப்பிச்சந்தனங்கைதனைச்சேருவாய்
பூரிச்சந்தநம்விம்மியமாதரைப்புலப்பச்சந்தனதாகவுளத்தில்லை
வேரிச்சந்தநமார்பகததாய்செக வீரராமகுமாரவெட்டேந்த்ரனே ௭௮

சம்புதைக்குங்கருங்காலன்போற் கங்குல்சாரவேலை யொலிக்குப்பயந்து
நோக், கம்புதைக்குமென்பெண்பிள்ளைமேலினிக்காமராஜ னெடுத்துத்
தொடுத்திடும்,அம்புதைக்குமுன்னேயணைந்தாலிவளாவிதக்கு மிப்பூவி
லிருக்குநம்,பும்புதைக்குணிதியெனவாய்த்தவெம்புண்ணியாவெங்கடே
சுரெட்டேந்தரனே ௭௯



சட்டளைக்கலித்துறை

மர்தானை வேந்தர்க்குயேலோன்பெரியசுவாமினையயென்

மாதானைவேல்வரக்கண்டனள்கண்டுமயங்கியுஞ்சும்
மாதானையோவரக்காணேனென துவளவுக்குளம்
மாதானைபே ச்சென்றுவந்தாளினிச்செல்லவாயில்லையே ௮௰

அச்சங்கபாணிபதம்போற்றிச்செந்தமிழ்க்கன்பியற்றி
அச்சங்கமேவுந்திருமலைராயனணைந்திலனுன்
அச்சங்கலாமதிக்கென்றிருந்தேனெந்தனுகத்தைநூல்
அச்சங்கமாகத்துளைத்தான்மதப்பயலம்புகொண்டே ௮௧

அத்திக்குதையன்றிருமலைவேலப்பனன்புசொல்லத்
தித்திக்குதையன்கருத்தென்னமோமதிசென்றுகுணக்
குத்திக்குதையன்கதிர்காட்டுமோவிருகொங்கையின்மேல்
தத்திக்குதையமட்டேறுதுகாமன்சரங்கள்வந்தே ௮௨

கலவளைக்குண்டிவள்கைவளைபோனதுங்காரிகையார்
சொலவளைக்குந்தத்தரம்போலத்தைப்பதுஞ்சொல்யவரார்
நலவளைக்குஞ்சரியாஞ் செவிச்சானகினாண்புனைய
மெலவளைக்குஞ்சிலையானேதிருமலைவேலபயனே ௮௩

முடிக்குமருப்புக்கிசையாப்பைங்கூந்தலம்மூரிமதன்
பிடிக்கும நப்புக்கிலக்கல்லவேயெதிர்பேசுமொன்னுர்
குடிக்குமருப்புக்கடலேற்றுவித்துக்கொடிமதில்பாய்ந்
திடிக்குமருப்புக்களிற்ருனிளசையிலெட்டமனே ௮௪

தடத்தத்தளிச்சிறுநாண்பூட்டிமாரசரந்தனமு
கடத்தத்தளித்தலைதோற்ருட்குத்தோறறுகடாசலத்தை
நடத்தத்தளிக்குட்பதைத்துக்கிடக்குமொன்னுர்கண்முறை
இடத்தத்தளிக்கப்பொருமவெங்கடேசுரெட்டேந்திரனே ௮௫

செல்லுக்குமல்லுக்குநேரோதிமங்கலச்சித்தசவேள்
வல்லிககிணைபிலைவல்லிக்கிணைகந்தமாதனஞ்சொன்
முல்லைக்குமானுக்குமாந்தளிருக்குமின்மூன்றினுக்கும்
பல்லக்குமேல்வருமன்னுவெட்டேந்திரபாண்டியனே ௮௬

(முல்லை-பல்)(மான்.கண்)(மாந்தளிர்.மேனி)

கவளம்வளைக்குக்களவுசெய்தோன்வஞ்சகப்பிணைமேல்
துவளவளைக்குஞ்சிலையான்மருநப்பதுங்கன்வரான்

தவளவளைக்குத்தடைபிடுவாரில்லைசந்துசொல்ல
அவளவளைக்கும்பிடப்படுமோதண்ணளிக்குலமே ௮௭

இந்திரச்செல்வன்றுணைபூலிக்காத்தப்பனிங்கிவள்பால்
வந்திலனின்னமும்வேள்கணையால்கண்வளர்ச்சிமு
கந்திரப்சானுவில்வைத்ததுமகரகர்கசடக
சந்திரயோகங்களாயடவீர்கணிதந்திடமே ௮௮

வெஞ்சத்தமரந்துளைக்குந்திருமலைவேலுவந்தால்
வஞ்சத்தபரம்பலுக்குமஞ்சேனன்னைவாய்ச்சுமஞ்சேன்
நெஞ்சத்தமரங்கசப்போரை வெல்லுவனீயுமெனை
அஞ்சத்தமரஞ்செய்வாயோவலைசெறியம்பரமே ௮௯

வெண்பா

புத்தியின்பேர்க்குள்ளாய்வேள்பொற்றொடிக்குமுன்புவந்து
சத்தியப்பேர்மீதுசரந்தொடுத்தான்-நித்தம்
குருபதம்பராவுமனுகூலாபொன்மாது
பருவும்வெங்கடேசுரெட்டமா ௯௰

புத்தி-மதி சந்திரன் சத்தியம் மெய் தேகம்

அத்திதனையூர்ப்பசுப்பேராக்கிச்சினந்தடித்துச்
சித்தசனென்மேற்சமரஞ்செய்தானே-முத்தமிழ்க்கெந்
நாளும்பசுங்கனகல்கிமுதல்வள்ளலென
வாழும்வெங்கடேசுரெட்டமா ௯௧

அத்தி-சமுத்திரம் ஊர்ப்பசு நகரா, அது, முரசு.

மன்னன்வெங்கடேசுரெட்டமாநிதிபார்றாதுணைத்துக்
கன்னிதார்வாங்கிவரக்காண்கிலனே,மின்னுபசுஞ்
சொன்னவடிவாயிலங்குந்தோகைரதிகணவன்
கன்னல்வளைத்தெய்யுங் கணை ௯௨
கணைகாண்கிலேன்;

தண்ணமுதபாஷிதவிஸ்தாரன்வெங்கடேசுரெட்ட
புண்ணியவானவந்துபுணராநாள் உண்ணமுது
மாமனத்தையேகுமட்டவர்புவிட்டாள்பால்கொடுக்க
வீமனத்தைபேரொடுத்தாண்மின் ௯௩
வம்பு,கச்சு,அதுகசத்தல்,வீமன்,பிரமன்,அவன்:அத்தை,சத்தி,அதுவாந்தி.

தண்டமிழ்தேருத்தமதயாளுவெங்கடேசுரெட்ட
மண்டலிகன்கூடிமருவாநாள்,செண்டு

முலைமானுட்கின்னமுதுகொடுக்கவாட்டுத்
தலையானுன்மான்மயக்கத்தால்
ஆட்டுந்தலை, வேண்டாமென்று, அசைக்கிறதலை ௬௪

தௌளுதமிழுக்கருடியாகிவெங்கடேசுரெட்ட
வள்ளன்மேலாசைகொண்டமானுன்மேல், துள்ளும்
கயவாளிவேட்குவரிகைமுரசனுற்பங்
கயவாளியேயானேகாண் ௬௫

கயவாளி, திசைச்சொல், அதற்கு, இழிந்தோனென்னும்பொருள்

கொங்கைகும்பகோணமாகூந்தலுமோகூடலா
தங்கும்விழியம்பாசமுத்திரமா, பைங்கனக
மேருவெங்கடேசரெட்டமேந்த்ராயிவள்சசிபுற்
ரு நடையானூரிடையதாம் ௬௬

கொங்கை, கும்பவட்டம், கூந்தல், கூடு, அல்புல், தார், பனைமாலைஊர் வஞ்சி, அது, ஓர். கொடி

மெய்யன்வெங்கடேசுரெட்டவேந்தன்பாற்சந்துரைத்துத்
தையல்கண்ணிவாங்கித்தரவிலையே. கையதிறற்
றண்டித்தாண்மென்றுமென்றுதுப்பினுண்மாரனையும்
கண்டித்தாளச்சமற்றாள்காண் ௬௭

விலை கரும்புவில்லை

பூத்தூக்கிவுண்டவனைப்போர்த்தேறிக்கொண்டவனே
மாத்தூக்கியைத்தூக்கிவந்தானே, நேர்த்திதரும்
பொன்னுபரணுபுயசயிலாதென்னிளசை
மன்னுகுமாரவெட்டமா ௬௮

பூத்தூக்கி ஆதிசேடன் உண்டவன் அவனாலுண்ணப்பட்டகாற்று அதையேறிக்கொண்டவன் மன்மதன் மாத்தூக்கி இலக்குமியைத் தாங்குந்தாமரை

நற்றமிழ்வாணர்க்குநிதிநல்கும்வெங்கடேசுரெட்ட
கொற்றவன்றூரன்றிபரன்கோயிலின்முன் உற்றகொடிக்
காலைவிட்டப்பாலேநீங்காததுமுன்றுண்டுபட
வேலையிட்டதேதுவிடு ௬௯

அரன் கொடிக்கால் பரமசிவன் த்வசஸ்தம்பம் அதைநீங்காதது இடபம் அதன்முன்னிராசிமேடம் அதுஆடு

சன்னன்வெங்கடேசுரெட்டகாண்டிபன்மேன்மாமோக
சன்னதங்கொண்டாட்குமுல்லைத்தாரல்லா தெ[illegible]னசெய்தீர்

தையன்முன்பூமுன்னட்சரமூ றறதைத்தெரியச்
செய்யுமபேரென்னசெயும் ௱

தையலென்னுஞ்சொல்லுக்குமுன் பூமுன் அக்ஷரம்பு அமு உற்ற
துபுதையல் அதைக்காட்டுவது மை அது ஆடு

தாண்டுபரி தூண்டுதிடசாலிவெங்கடேசுரெட்ட
பாண்டியன்மேலாசைகொண்டபைந்தொடிமைய வேண்டியே
லொன்றிரண்டாப்போகவொருத்தனையிங்கேன்கொணர்ந்தீர்
மின்றுயர்க்கென்செய்யும்விடம்(ஒரு ஆடு) ௱௧

கல்வி ரைகண்ட கும்பகம்பன்வெங்கடேசுரெட்ட
வில்விசயன்றென்னிளசைவெற்பிடத்திற் சொல்வதென
கட்செவியுமம்புலியுங்கங்கையுமோர்வெம்புலியிற்
பட்சமுற வைத்தார்பதி ௱௨

கட்செவி அரவு அம்புலி இந்து கங்கை அம் இன்மூன்றுஞ்சேரின் அரவிந்தம் புலி வேங்கைமரம் (வேங்கைமரத்தின்மீது . தாமரைமலரிருந்தது)

சங்கநிதியென்னத்தழைத்தவெங்கடேசுரெட்ட
சிங்கமிளசைச்செழுங்கிரியில் அங்குகண்டேன்
மானிலத்தைமுற்றுமொருவள்ளலடுவாதியந்தந்
தானிருப்பதேந்திங்கத்தான் ௱௩

மால் ரலம் முல்லைவள்ளல் பாரிநடு அப்பாரியென்னுஞ்சொல்லின் நடுவில் ஆதி ஆதியென்னுஞ்சொல்லின் அந்தம்கடையெழுத்தாகிய தி, இருப்பதுபாதிரி (பாதிரிமரத்தின்மேல் முல்லைமலரிருந்தது

தாலமுற்றும்வாழ்த்துமிந்த்ரதாருவெங்கடேசுரெட்ட
வாலகிருஷ்ணவிம்பன்மணிவரையின் மேலு
மருக்கமமூநன்மாமனையுமொருசந்தி
இருக்கவதிற்கண்டுகொண்டேனின்று ௱௪

மாமனை இலக்குமியின் வீடாகியதாமரை சந்தி மூங்கில்மூங்கிலின் மேல்தாமரைமலரிருந்தது.

தங்கள்குலதீபமெனத்தாரணியோர்கொண்டாடும்
எங்கள்வெங்கடேசுரெட்டமேந்த்ரன்வெற்பில் செங்கணரி
உண்டதுடனவனின்றாதினதுஞ்சேர்ந்தவன்பேர்
கொண்டதின்மேற்கண்டேன்குறி ௱௫

அரியுண்டது பூமி அது கு அவனூர்தினது சங்கு அதுவளை இவ்விரண்டுஞ்சேர்ந்தது குவளை அவன்பேர்விண்டு அதுமூங்கில் (மூங்கிலின் மேற்குவளைமலரிருந்தது.

அழகிசக்கதேவிக்கனர்தம்பணியால்
விழையுங்குமாரவெட்டவேந்தே பழகுமொரு
கூந்தல்களமல்குலகடுசொன்னேன்கனகம்
ஏந்துதனமாந்தளிர்மெய்யாம் ௱௬

(சக்கு கண் ஏவு பாணம்)(இக்கு மொழி)(அல் கூந்த ) (நந்தம்களம்) (பணி அக்குல்)(ஆல்அகடு)(கனகம் தனம்)(யாந்தளிர் மெய்)

ஏகாம்பரமிடப்பேரில்லாத தாழ்வுசொல்லப்
போகாதுவேறுபுகலிலையே பாகார்ந்த
சந்தமதுரத்தமிழுககக்கனை
வந்தவெங்கடேசுரெட்டமா (ஏகாம்பரமிடம்-கஞ்சி) ௱௭

திரைக்கலைக்கித்தையலென்பதேயிருபத்தேழென்
னரைக்கலைக்கித்தையலனேகம் உரைக்கவொண்ணு
தந்தம்பரகண்டாவரசர்சிரோரத்னமென
வந்தவெங்கடேசுரெட்டமா ௱௮

திரை.கடல்.கலை.அதிற்றோன்றும் சந்திரன்தையலிருபத்தேழுஅவன் மனைவிகள் இருபத்தேழு நக்ஷத்திரங்கள்.

சென்றலந்தார்சேர்முத்திருளப்பபூபதிபான்
மன்றலந்தாரவாங்கிவருமளவும் குன்றமுலை
ஏழாயிரம்பண்ணையில்லுடம்புவாடாதே
ஏழாயிரம்பண்ணையில் ௱௯

ஏழாய் பெண்ணே இரு அம்புஅண்ணையில் மதன் பாணம்பொருந்துவதனால் ஏழாயிரமபண்ணை ஒரூர்.

கூன்கலைநிலாவின்குளிர்ச்சிபொறுக்காதுகல்வி
மான்கலையில்லாபன்மருளுமா-தேன்கலையச்
சந்தநறுங்காவின்மந்திதாவுமிளசைநகர்
வந்தவெங்கடேசுரெட்டமா ௱௰

கொச்சகம்

நீகாவிதுராநெருப்பாமிவட்குவிலஃ
காகாவிதுராக தம்புரிவார்கன்னியர்கள்

வாகாவிதுராமராமரதிமாரவச்ர
தேகாவிதுராதிருமலைகேலேந்திரனே ௱௰௧
அங்காவித்தாராவணைவதுகண்டின்பமொரு
பங்காவித்தாராபதியேயென்றேங்குவளோ
துங்காவித்தாராதுணைமுலையாராசைசொள்ளும்
செங்காவித்தாராதிருமலைவேலேந்திரனே ௱௰௨

ஆகசெய்யுள்-௲௨௱௨௰௫

—



## நாகூர்முத்துப்புலவர்பாடிய

### கட்டளைக்கலிப்பா

—

தனதனகடாத்தியடர்ந்தபூச்சரத்தைவாங்கித் தனத்திற்றொடுக்கு, தனதனகதவிலான்மின்போன்மெய்பசந்தசந்துசந்தே சொலென்று ண்மினள், தனதனகத்தொம்மெனப்பையினிர்த்தமபுரிந்த சரணசரோருகா, தனதனகவளரும்ப்ரதாபவித் தாரனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே ௧

கனகனங்கம்பிளந்தவிர்கொந்தளகங்களந்திருக்காயமின்மேன்மற்ற கனகனங்கம்பிளந்தலைகண்டுகொங்கைக்குளேவினனசேராத தென்கொலோ, கனகனங்கம்பளாகோததிராவருட்காதலன்றனைககாத் தடிமைகொண்ட, கனகனங்கம்பிளந்த நரசிங்ககாகுத்தா வெங்கடேசுரெட்டேந்த்ரனே ௨

கடகரிக்குமதனனவர்செயுங்காயங்தேர்ந்தனரோவள வன்னைமார்க டகரிக்குமரிவாழ்கவேலன்முன்கட்டினாரதிலென்னுமொன்னார்க்குவி, க டகரிக்குருவிக்கன்றுகண்ணருள்கர்த்தர்தாளிணையைச்துதிநேமகா, கட கரிக்குநிருபாவிளசைவாழ்கருணைமால்வெங்கடேசுரெட்டேந்த்ரனே ௩

தந்தப்பாதுகடீர்மருங்கம்பிருதராயாமிந்தமாதைமின்னார்சந்தம் தந்தப்பாதுகனற்றவரமபுவேடானொளிக்கச்சரமுல்லைதாசா, தரந்தப்பா துகவிப்பட்டம்வாலியைத்தாக்கியேயவன்றமபிக்குத்தந்துதந், தப்பாது கைதம்பிக்குநல்கியதாருவேவெங்கடேசுரெட்டேந்த்ரனே ௪

கனதனந்தனதாவலினலந்தக்கனிக்குமாமலையா மிடைமின்னலும், சினதனந்தனமாற்கூறரிதரிதென்னுமல்குற்றிருவையணைகுவாய், மனத னந்தனமாடைதமிழ்பகர்வாணர்க்கீந்துமகிழும்ப்ரதாபனே, தனதனந்த ணவெனருடுவோரருடங்கிவாழ்வெங்கடேசுரெட்டேந்த்ரனே

இந்தக்காவனங்கோர்கவிகையாவிருந்துகாந்துதியா னென் குமேன் பந்தக்காவனவம்மைகண்டப்பியெப்படியங்கேகுவன்பா னருள்கவி, சிந்தைகாவனசத்திரசோமதியாகசற்குணபாகமனே நதககாவனஞ்சூழிளசைப்பதித்தானமால்வெங்கடேசுரெட்டேந்

இருபந்தந்தமெனும்பொற்பயோதரமென்னசொல்லரதிக் டங்கியவள் சொருபம்தந்தச்சிவிகையில்வந்தனள்சொந்தமாகவு வாய்சுடர் தருபந்தநதமணியவெற்புப்பெற்றிற்றுய் துலங்கித்தன வோரக்கெலாம் நிருபந்தந்தமனதின்படிகருணேசனே வெங்கடே ட்டேந்த்ரனே

தரகலாதனங்கன்சடர்க்கோலஞ்சமைந்துபாணமெய்தான் பூ சரகலாதனகும்பம்பொருக்குமாகன்னியேயெனைக்கண்பாரென்று வரகலாதனன்மார்க்கசிலாக்கியமாவசந்தியாகவரோதயாபிரகலா புள்ளத்திருந்தருள்பெருக்குமால்வெங்கடேசுரெட்டேந்த்ரனே

மாதமந்திரணம்போலிருந்ததைமலைக்கொப்பாகவளர்த்தது கைச் சூதமந்திரவோருகமாமதிசோர்ந்துதாணிந்தவேந்திழைவா பேதமந்திரசக்கினியைக்கவ்விப்பொழிலிற்றுவும்புகள்க் கழுகா தமந்திரயொய்க்குகனைத்தொழும்வேங்கடேசுரவெட்டமதீரனே ௯

வருதுகட்டுமுட்டெலலாங்கடந்துபூவாளிவேள்கயவாழீ முரசம்தி ருதுகட்டுவசனமலைத்தென்றலாங் கொடுந்தேனாடாத்தியே பொருது கட்டுவதனத்திற்சாடவேபூத்தொடுத்தனன் சந்திரகாவிடால்விருதுகட் டுமெதிபாவிளசைவாழ் வெங்கடேசுரெட்டேந்த்ரனே ௰

தந்துகந்துகந்தாகந்தணிக்குநீர்த்தடமருங்குதனமல் குர்றையலே
மூந்துகந்துகந்தாகணபபோதிநுன் மோகத்துத்தூதுமொழிவனென்றே
வந்தேன் வந்துகந்துகந்தாகழுகாசலவாசகாவெனவாழ்த்து முன்பாசட்
டுங், கந்துகந்துகந்தாகப்புரட்டுங்கடாசலவெங்கடேசுரொட்டேந்த்ரனே

நம்பரக்கரையானனராகியநாதர்முன்புநமைவேண்டிச் செல்சவே
ன் றும்பரக்களாயாயனுப்பத்தனதுருவிலாமதன் யுத்தத்துக் கென்செ
ய்லீவன் அம்பரக்களாயானதிற்பாளயமன்றிறங்கியடர்ந்திலங்காபுரி வம்
பரக்களாயாசுசத்தால்வென்றமாதவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே ()

அத்தன்கண்ணுக்குத்தோர்ருன்றன்மாதலா லரிபிரம்மாதிக்குந்
தோற்ருனவன்மகா எத்தன்மாமனேயென்றுந் தமையனென்றே சொல்
வோன் கணையெய்யாமலெய்கிருன் கத்தன்பூவுலகேழையு மேயொரு க
விகைநீழலிற்காத்தருளும்பரி சுத்தன்மன்னுங்குமரா வெட்டேந்திரன்
சோதராவெங்கடேசுரொட்டேநத்ரனே ௰௩

உபையராசியையூரும்பிரான்வளரோங்கனேருந்தனத்தாளுனேமகி
ழ்ந் துபையராசியமாய்க்கூட்டிவாவென்றுசொல்லியென்னையுன்பால்வி
டுத்தாள்பொன்னூர் சண ராசிற்சொருபாவென்றீசனாத்தன்கையாற்றெ
ழுந்துங்கன்கைவிடணற்கபையராசியருள்வல்லவாபுகழாகாரவெங்கடே
சுரொட்டேந்த்ரனே ௰௪

சங்கசாசரளங்கால்கமுகதாதன்சமூத்திணையென்றாட் குன்றுரின்
று, துங்கதாதரத்தாமதஞ்செய்யிலைத்தோகைமேகத்தைமாரன்வருத்து
வான் அங்கதாதரநீதூதுசெல்லென்றவாரியா ணவீரியப்ரதாபனேவெ
ங்கதாதரவிமாசெயதராவெங்கடேசுரவெட்டமபூபனே ௰௫

பூவலாளாமுதலானகற்பங்கள்புரிந்துநிட்டை வசித்திருந்தாலுமெ
ன், ஆவலானாயும்விட்டுவிடாதர்தவரிப்பிர்ம்மாதிகளாணுலுந் தானென
மாவலாளையலரதினுலெய்யின்மங்கையுள்ள மயங்காதிருக்குமாமேலை
ரையடக்கிச்செயம்பெற்றவிசயனேவெங்கடேசரொட்டேந்தரனே ௰௬

அஞ்சக்கஞ்சனங்கைபாலசணைந்தசோகமேவவடரவிடுகுமு தஞ்சக்
கஞ்சனமெல்லாங்களைத்திரு தனத்தைநீதத் தடவனாயாக்கமான, மிஞ்
சக்கஞ்சனந்தாழக்குலக்குமெம்மின்னமேவிவிரகந்தணித்திடாய், வஞ்
சக்கஞ்சனகத்தைத்துணித்தவாவாசவா வெங்கடேசுரொட்டேந்த்ரனே

கந்தரப்புயருஞ்சடையார்பகைக்காமன்வந்துகணையேவவேமினள்
அந்தரப்புயலின்பேர்மிகுத்தனளணையின்மீதணைவாயணைவாய்பர ந்த
ரபபுயங்கப்பணிமீதுதெய்தத்தென்றுடுன்சரணமைபுயாதிட மந்தரப்புய
பாரசெயதரவாசவாவெங்கடேசுரொட்டேந்த்ரனே ௰௮

அந்தர்ச்சலவன்பன் றிபோற்பகையார்ப்பரிக்கவவாக் கிசைந் தெய்
துமின் பந்தராச்சலனேபயந்தாள்வெறுப்பாயுரைக்கிற்பலமொன் சொல்லா
ருல கந்தராசலவாவூரின்வாய்மறைக்கவுலை மூடியுண்ட காதல்தீர்மந்தரா
சலவாகாசயதராவாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே ௰௯

முனசங்கைமுகன்கண்ணீருந்துறமுற்றும் வெந்தவன் வந்திகல்
செய்யவே தினசங்கைக்குதுகஞ்சிதட்டுதுசேலைசோர்ந்திருதாலையும்பி
ன்னவே இனசனங்கையதுகொட்டிக்கொட்டிவந்தேசவேமயன்மீசுரமா
குதுவனசங்கைமருவும் புயாசலவாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே,

படங்குமாதங்கரேக்கார்ச்சமைத்திட்டபாரக்கொங்கைக்குறியுஞ்சமீ
பந்தான் சடங்குமாதங்கழிக்குமுன்னுமிதுசமயங்கட்டிததழுவா விடில
வா அ!ங்குமாதங்கள்சித்தமென்பாக்கியமணையவேண்டுமுன்னுண்மூல
மென்னவே தொடங்குமாதங்கமுன்வந்தமாதவாதுங்கனே வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே ௨௧

வாசக்காந்தன்மலாக்கையினுலையைவாரிவாரிப்பன்னீரொடுசந்தனம்
பூசக்காந்தலபொருமலயர்ந்துவாய்புலம்பத்தாமமும் வெம்ப மின்னார்க
ளும் ஏசக்காந்தமுனைக்கிலென்செய்குவாளெய்துவாய்குறமாதுதெய்வா
னைக்கோர் நேசக்காந்தராருள்பெற்றுவாழ்மனுநீதனே வெங்கடேசுரெட்
டேந்த்ரனே. ௨௨

வந்துவாரவைவ்யநடத்திச்சிலைவளைத்துச் சித்தசன்மாங்கணை யேவ
ப்பு குந்துவாரவளவுபபிதிரந்திடக்குடைந்துகொங்கைக்குடத்தையுமே
யனே கந்துவாரமதாக்கிவிட்டாலிந்தக்கன்னியென்செய்குவாள்கான் க
வியினுல்சிந்துவாரமதிலணைகண்டவாசீதரா வெங்கடேசு ரெட்டேந்த்ர
னே ௨௩

அரிசிராவணத்தாலடைந்துந்தொனியமருதில்லை யதைமுனியுண்
ணவும் கரிசிராவகலப்பகலோன்வருங்காலமானதெக்காலமென்றுடரும்
பரிசிராமுழுலோயகுடாரிநீபாரவில்வளைத்துக் கரதூஷண திரிசிராவி
ழவோர்பாணந்தொட்டவாசீதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே ௨௪

தொடுக்கவத்திரம்வேளதுதானிந்தத்தோகைமெய்யைத்துளைத்தீர்
ருருவவே- கடுக்கவத்திரண்மேலவிழுநீயெனக் கலங்குவாட் குன்னலங்
கலீன்நீருவாய். இடுக்க வத்திரங்கா வென்றழைக்க வந்திடங்களை

த்திகிரிக்கிறையிட்டவா, உடுக்கவத்திரமில்லாதவர்க்கருளுத்தமாவெங்க
டேசுரெட்டேந்த்ரனே ௨௫

சீதமாரம்பனங்கன்றொட்டான்றனத் தினைந்துளைந்துத் தடாரிக்குதந்த
ம்பு சூதமாரம்பம்ராமாராமாவெனசொல்லுவேன்சந்துசொல்லவிம்மா
தர்க்குள்,நீதமாரம்பலாதிசெய்வாரெந்தன்னேமக்காமந்தணி மூலமென்
னவே,போதமாரம்பஞ்செய்யமுன்வந்தவாபோசனே வெங்கடேசு ரெட்
டேந்த்ரனே ௨௬

பூசுகந்தந்தனத்திற்பொரிந்தது பொருக்கெழும்பி யிப்பூவைதன்மாலுக்
கே, நீசுகந்தந்தடங்கலின்றித்தர நேமஞ்செய்திவள்காமந்தணித்திடாய்
தேசுகந்தந்தராவணன்சேய்தலை சிக்கெனக்கொண்டுவாவென்றிலக்குவற்
காசுகந்தந்தராமாபெரும்புகழாகராவெங்கடேசுரெட்டேந்த்ரனே ௨௭

பொருப்புக்குஞ்சரியாகப் புடைத்தெழும்பூண்முலைக்கன்னிமீதே சமர்
செய்யத், துருப்புக்குஞ்சரியேறிமெய்யெங்கணுந் துளைக்கமாரன் வளைக்
கவவன்செங்கைக்,கருப்புக்குஞ்சரிசாமநிழற்றுந்திங் கட்குடைக்குங்கல
ங்குவளோமன;விருப்புக்குஞ்சரிகாந்தற்குவைத்தவாவீரனேவெங்கடே
சரெட்டேந்த்ரனே ௨௮

அடிதங்கச்சியிவளென்னமே தெரியாதுசிந்தையயருகிறாளிந்தா
பிடிதங்கச்சிவிகையிலிருந்துநம்பிள்ளைதான்கிளிப் பிள்ளையல்லோமயல்
கொடிதங்கச்சிப்பரிபோற்சென்றேவரக்கூறென்றாளிகல்கொண்டோ ர
மர்கண்டு, துடிதங்கச்சிமையப்புயங்கொட்டுமுத்துங்கனே வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே ௨௯

அரகதத்தைமதன்சிந்தைதன்னில்வைத்தம்பரத்தையடித்தார்ப்பரித்து
மே,துரகதத்தைநடத்தியம்பாலுமென்றுவதனத்தைத்துளைத்துவிட்டா
ன்கொண்ட, விரகதத்தையெவர்தணிப்பார்மலர்மெத்தைமீதினில் வை
த்தணைவாய்மணி,மரகதத்தையணியும்புயாசலாவாசவாவெங்கடேசு ரெ
ட்டேந்த்ரனே ௩௰

அனங்கனம்பனந்தொடமெய்பசந்தசந்துவாடுவதல்லாலிடைக்கிரு
தனங்கனம்பனந்தாராநிருக்குநற்றலத்தின்பேர்க்கொடிதாங்காது பெற்
றதாய்,மனங்கனம்பனம்பின்போமிகுத்தந்தமாகர்சொல்லும்வசைக்கில
க்காகிய, மினங்கனம்பனஞ்சேர்சுதமாயினுள்வெங்கடேசுர ரெட்டேந்த்
ரனே ௩௧

மாதவாவினமட்டலர்நின்புயமாலைமாலையகற்றுவதாசடை
யாதவாவின்சொல்லுந்துராகதவன்னைவாயையடக்குவதார்மலர்ச்
சிதவாவினந்தங்கந்தரமெனுஞ்செல்விக்கோர்மொழி சொல்லியணைந் தி

டாய்,போதவாவிளங்காத்தருள்மாதவா போசனேவெங்கடேசுரெட்டே
ந்த்ரனே ௩௨

இருதனங்கனிக்குச்சிலைபோர்புடைத்தெழுந்துவிம்மியிறுமாந்திடக் க
ய ், விரு ளங்கனிக்குச்சிலைவாங்கிமாவிசைகொண்டுருவிப்பாயவாளி
யாம்,பொருதனங்கனி ர்க்கமுன்னுமன்மால்பூண்டிருக்கச்செய்தான் ற
மிழ்வாணர்க்கு, வருதனங்கனிவாயத்தருமன்னவாவாசவா வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே ௩௩

என்னிலங்குச்சலராசராசருக்கேற்றதாமவரிங்கேவருகப்போய்
முன்னிலங்குநங்காரியமயாவதுமொழியென்றுள் பைங்கிளிதான் மருவு
வாய்,நன்னிலங்குவலையத்திலிதெனநாட்டுந்தென்கருக்கோட்டைக்கதிப
னே, பொன்னிலங்குமணிமார்பனேதிடபோசனேவெங்கடேசுரெட்டே
ந்த்ரனே ௩௪

அரகராசலங்கொண்டபுண்போன்முலையானைவிம்மவதிற்றென்றருவவே
உரகராசலவன்குளிராதனலுக்கிருனந்தமாரற்கிம் ாதருந்
தரகராசலராசியதாமயரானெனைப்புணர்வாய்மூலமென்றதோத்
திரகராசலங்காத்தசக்ரோஸ்வராசிதராவெங்கடேசுரெட்.டேந்த்ரனே

கஞ்சரஞ்சப்பெடைபோலுமென்னடைகமலத்தாளிருகண்ணிணையான
து,பஞ்சரஞ்சர்க்கரைவட்டுமாமுலைப்பருபதத்திலறுபதத்தான் றெட்
டான்,வெஞ்சரஞ்சப்பிரமஞ்சகோளகைமீதிருந்திந்தமின்னுளைமேவுவா
ய்,வஞ்சரஞ் ப்பொருஞ்செயதோர்த்தண்டாவாசவாவெங்கடேசு ரெட்
டேந்த்ரனே ௩௬

மாமனுக்குமகனுகவந்தகாமனுக்கும்பெற்றுவளர்த்தவட்குங்கலைச் சோ
மனுக்கு,மினத்தார்க்குமஞ்சிமெய் சோர்ந்துவாடினள்சேர்ந்தணை வாயி
னி தாமனுக்குமினியகுமாரெட்டகருமனுக்குங்குமாரமுத்தேந்திர,பூம
னுக்குஞ்சகோதரனே திடபோசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே௩௭

என்னவாவிதுராசியமாநடை யேலுமாமகள்காலொடுகொன்மிகப்
பின்னவாவிதுராவனறாவவா பிரமனிப்படிச்செய்தானென்னுர்கள்வாய்
கொன்னவாவிதுராகதத்தென்றிசைகுடிபுகக்கையிற்சோதண்டம்வாங்கி
ய, மன்னவாவிதுராபுகழாகரா வாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே

சொலங்கக்காகொண்டமோகத்தினல்வருஞ் சோபதாபந்துலைக்க வென்
றுட்டுமே, விலங்கக்காமசரத்தாலும்பூந்தளிர்மெய்யிளைத்தன ளல்லாம
லொப்பிலா,நலங்கக்காரிசுகக்காரிமேவவிந் நாளுமே நல்லநாளடையார்
மனம்,மலங்கக்கால்கொண்டடர்பரிமேல்வரும்வாசவாவெங்கடேசுரெட்
டேந்த்ரனே ௩௯
சரந்தாரதரங்கண்டாமதன்விடுத் தானேனதுகுழந்தைதனியேமால், ப

ரந்தராத ளக்கச்சிறுக்கும்பொற் பார்பயோதரபாரத்தைத்தாங்கவே, உ
ரந்தராதரவம் 'பாற்றுவண்மருங் கொசியுமுள்ளம்வசியாயணைந்திடாய்,
புரந்தராதரணிக்கதிபாசெய்பூதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே ௪௰

பீலிக்குஞ்சரவங்களைக்கொத்திப் பிடித்துத்தாக்கப்பெரும்பகை யின்றி
க்கா, லாலிக்குஞ்சரபஞ்சிங்கமீதுசென்றடிப்பபோல்வந்தடிக்குதுதாயெ
ன்ற, நீலிக்குஞ்சரசப்பேச்சுமாச்சிவணினைவுங்காணுங்கனவுமிங்கேயொ
ரு, வாலிக்குஞ்சரமேவியராகவாவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே

அராவு:கேகணையேசெவியென்பர தல்லபெற்றவனைக்கேமின்னுருவம்,
பராவுக்கேகணையேகுழலாக்கிய பண்ணுக்கேநொந்தபெண்ணுக் கிரங்கி
யின், றிராவுக்கேகணைமேற்சென்றிருந்துநல்லின்பலீலைசெய்தன்பாய் ம
ருவுவாய், மராவுக்கேகணையேவியராகவாவாசவாவெங்கடேசு ரெட்டேங்
த்ரனே. ௪௨

அல்லைமாலைமருதங்கிளியையின் னுரைகால்வகைத்தானையதாக்கிவிட்
டெல்லைமாலையும்விட்டடர்ந்தேறிநாளிருக்குமாலயத்துட்புகுந்தே தன்
கை, வில்லைமாலைவிளைத்துவளைத்தம்பைவிட்டுவேண்மட்டுமீறினன்மே
வுவாய், குல்லைமாலையணிமாலைப்போறறிய குமுணனே வெங்கடேசுரெ
ட்டேந்த்ரனே ௪௩

தடிக்கவில்லைமுலைதிரண்டேமகள்சமையவில்லைமணந்தான்குமுகுமென்
றடிக்கவில்லைபொடிபுனுகத்தர்சேர்த் தணியவில்லையதற்குமுன் மாரன்
போர். முடிக்கவில்லைவளைத்தாறகுழந்தைதான்மோகந்தாங்கவு முற்று
தொன்னுர் துடி, துடிக்கவில்லைவளைக்குமகோரவுத்துங்கனே வெங்கடே
சுரெட்டேந்த்ரனே ௪௪

மஞ்சலக்கணங்கன்புறவே கட்டிமருவுதற்குளவாவைத்திருக்குநாள்,
அஞ்சலக்கணலார்க்கேதெரியுநின்னுவலோவடங்காதிரங்காதவன்
நெஞ்சலக்கணபபெற்றியின் வெண்ணெயாநிலவில்வந்து கலவிசெய்வா
யையா;பஞ்சலக்கணமுத்தமிழாகரபாஷிதாவெங்கடேசுரெட்டேந்ரனே

சத்திக்கும்பணிலக்கையினான்பெற்ற தனையன்போர்க்கு வினையமின்னு
ரைச்சு, மத்திக்கும்பணியாய்நிரைத்துச் சரமாரிபெய்யவென் மானுனை
தானுனைக், கத்திக்கும்பணிசோர்ந்ததுங்காண்கிலாள்காதல்தீரவிபபோ
தனைவாயையா, எத்திக்கும்பணிவேந்தாமகாமண்டலேசுராவெங்கடே
சுரெட்டேந்த்ரனே ௪௬

தனதுமெய்க்குமலரணையானது தழலிறைக்குந்தனச்சுமையாலிடை. மி
னதுமெய்க்குந்துவளுமிம்மானந்த மேனகைக்கும். வெகுமிச்ச நானுண்
மை, சொனதுமெய்க்குமரன்பொற்பதாம்புயங் தொழுந்தொழும்பன்கு

மாரொட்டபாண்டியன்.மனதுமெய்க்குமுயிர்த்துணைவாபுகழ்வாசவாவெ
ங்கடேசுரொட்டேந்த்ரனே ௪௭

இட்டங்கட்டியவாறேயல்லாதுவே றில்லைசிந்தையிதெல்லாஞ்சுவாமிய
திட்டங்கட்டியபரஞ்சியாற்செய்த சித்ரமஞ்சத்திற்சேர்வாய்தினஞ்சட்ட
வட்டங்கட்டியங்கக்குடிக்கின்ற ராவணனைவென்றன்புவைத்தவன்றம்பி
க்குப்,பட்டங்கட்டியராமாநவரச பாஷிதாவெங்கடேசுரொட்டேந்த்ரனே

பருதியானவரீராறுபேருங் கோபாக்னிமிஞ்சிவருவதுபோன்மதி
வருதியானதற்காற்றேனென்றுளேயோ மலடிருந்துபெற்றேனிந்தப் பிள்
ளையை,ஒருதியானமதுகுலதீபம்போலுதித்துமோகத்துக்குள் ளாகினை
னையா, குருதியானமறவாதவாபுகழ்க் கொற்றவா வெங்கடேசுரொட்டேந்
த்ரனே ௪௯

அம்புமாமுனிவாய்மூலைக்கண்ணைச்சல் லடைக்கண்ணாகவனங்கனெய்ய
ச்சொர்ன,விம்பமாமுனிருந்தபடிக்கிலைமேனிமாகலைக்யானியிவளையா
கம்பமாமுனிதம்பெறவந்துதற் காத்தவாவெகுநேர்த்திய தாந்தமிழ்க்
கும்பமாமுனிபோல்வந்துதித்தவா கொற்றவாவெங்கடேசு ரொட்டேந்த்
ரனே, ௫௰

ஆகசெய்யுள் ௲௨௭௩



இராமநாதபுரம்சமஸ்தானம்

மானேஜரவர்களாகிய

# பொன்னுசாமிதேவர்மேற்

சந்திரசேகரகவிராஜபாண்டிதர்பாடிய



வெண்பா

திருமகட்குதன்னிறமாஞ் செய்யம்புயமும்
பொருமகட்குப்பொன்னம்புயமுந் தருபொன்னு
சாமிவள்ளன்மாலைதந்தான் றண்கமலதானேநற்
சாமிவண்ணமாலைதரா தான். (நிறம்-மாயு) ௧

இய்யூர்தகரவெடுத்திரு மான்மருகன்
மையுர்குமரன்மலரடிக்கு-மெய்யூர்
மனத்தையளித்தபொன்னுசாமிக்குமானே
அனத்தைமறைந்தாளென் றறை இய்யூர்தகரம்-திகிரி ௨

வெறிவிலக்கல்

ஆடிமாதம்பவனிபுயத்தாரன்றியே
ஆடிமாதம்பார்கண் ணீர்மாற்றி-னீடுமயல்
போக்குமோவன்னுய்புலவர்மிடியைக்கொடையான்
நீக்குபொன்னுசாமிநிருபன் ௩

பின்முடுகுவெண்பா

பொன்னாரம்பூணும்புகழ்ப்பொன்னுசாமிவள்ளல்
துன்னுநாள்ராமன்றுயர்புரிவான்-மன்னளிதேன்
நககருமபுமற்சுரும்புறக்கரும்புங்கைக்கொளும்வேல்
எறகரும்புண்ணுய்க்கவெய்யவனே ௪

அளகைப்பொறித்தகொடியண்ணலடிபோற்றும்
அளகைக்கோ னும்பொன்னுசாமி-துளிமதுத்தார்
தந்தான்மதனடங்கத்தண்மதியந்தானடங்க
இந்தாவிந்தாமுகத்தாயீது ௫

புறங்காட்டல்-கட்டளைக்கலித்துறை

செவ்வேறிகழ்தரன்மாமலர்ச்சேவடிசிந்தைசெய்யும
செவ்வேறிகல்பொன்னுசாமிபூபாலனற்சீர்க்கிரிவாய்
வெவ்வேறினமணிமேவமுதக்கடநீர்வறைத்து
உவ்வேறினமதகவ்வினைக்காட்டலென்றெண்டொடியே ௬
(உவ்வேறின-மதக முதுகு)
கைக்கார்நிதிதருதேனுசிந்தாமணிகன்னன்கார்த்தி
கைக்கார்நிகரலவாங்கொடையோன்பொன்னுசாமிகடக்
கைக்கார்வரையிற்பவனிவந்தான்கண்டுமால்கொள்காரி
கைக்கார்துணைபுரிவாரிறவாதுகருணைசெயதே ௭

கலிப்பா

என்றுசண்டவிந்துவைப்போலிவன்முகஞ்சோர்ந்தாளமமா
என்றுகண்டனம்பாலுமெனவயிலாளென்கண்ணே
என்றுகண்டங்கம்மவழைத்திடினுமுனாயாக்கிளிக்கே
என்றுகண்டன்நீர்தடுப்பாயெழிற்பொன்னுசாமிமன்னு ௮
வாராரகொங்கைமிசைமருவபொன்னுசாமிவள்ளல்
வாராராவெல்லாமதியழலாந்தென்றலன்றில்
வாரார்கலியொலியும்வருத்தமனநொந்தனள்சொல்
வாரார்நீயல்லாலம்மன்னர்பெருமான்றனக்கே ௯
போதம்புடனேமதியளிநற்பூங்குயிறென்
வாதம்புரிதுயராலவாடிமிவளைப்புரப்பாய்
போதம்புரமெரித்தோர்க்கோதும்வேள்பொற்கமல
பாதம்புனைபெனும்பொன்னுசாமியெனும்பார்த்திபனே

கட்டளைக்கலிப்பா

அச்சுப்போற்புலவோரைகதித்திடுமெண்ணலே பெருமங்கசன்வாளியாம், நச்சுப்போதுதுரக்கத்துறந்தனணும்பூணுந் துகிலுமிவடனங்கச்சுப்போனதுங்காணன்முகவைவாழ் காவலாவளகேச விவள்கண்டுங், கைச்சுப்போனகமுண்டிலளகொண்டை நேர் கண்ணியைப் புரப்பாய் பொன்னுசாமியே ௰௧

அத்திகத்தவடுத்துக்காவினையட்டவாழிகெடுமான்மருகனற், சத்திசத்தன் சந்தாசலச்செந்தூர்வாழ்தாருகாரிவலாரிமகணகைப், பத்திமுத்துக்குறத்திமணாளனைப்பணியுநம்பொன்னுசாமி கிபனேத, தித்திக்கத்தகுமென்மொழிகூறிநீசேரச்செய்திடுவாய்மடக்கிள்ளையே. ௰௨

ஆரம்பூணும்வரைக்குயமீதிலேயனங்கவேடனல்ர்க்கணை தூவவே, ஆரம்பூணுண்டுகிலுந் துயிலுநல்லம்மனைகழங்கும்மடக்கிள்ளையும், ஆரம்பூணுமுந்துமெயசேர்ந்தன ளவளைக்காத்தணைத் தாள்வதுன்பாரமே, ஆரம்பூணுடைநறகுந்தவீரனேயண்ண பொன்னுசாமிகுபேரனே. ௰௩

எங்குந்நம்புகழோங்கவளித்தமூவேழுவள்ளல்களுமிவனீகையால்
தங்குந்தங்குமிவற்கேபுகழெனச்சாற்றுஞ்சற்குணனும்பொன்னுசாமிமா
தங்கமேற்கொடுபோந்தனனோர்தினஞ்சாரும்வீதியிற்கண்டார்மயல்கொ
டு,சங்குந்தங்கலையுந்தரியாதுளந்தளர்ந்து நாணமுந்தாமிழந் தார்களே.

மட்டுத்தார்க்கணையான் மதன்மாதினைவருத்தத்தான்மன நொந்தும
யங்கிப்பொற்,சட்டுத்தார்ப்புரவிக்கொருவீயநின்கருத்துத்தா னிரங்கிப்
புய மவுபூ,மொட்டுத்தார்தரவாங்கிவரச்சொன்னுண் முத்தத்தார் நிரை
யொத்தமுறுவலாள்,நட்டுத்தானுவாயாமலருளரிச்சந்த்ரனேபொன்னு
சாமிநரேந்த்ரனே ௰௫

பாலனத்தைவிடுத்துநின்கண்ணிவள்பாலனத்தைவிடுத் தனள்வே
ணிகோ,பாலனத்தையுடையோன்மருகன்கோபாலனத்தையல்பாகனரு
ள்பரன்,பாலனத்தையணிநாசிவள்ளிகோபாதபற்பம் பணிபொன்னுசா
மிநீ,பாலனத்தைப்புரிசிலைமாரனம்பால்வருத்தப்படாமலிப்பாவையே

விருத்தம்

மானேசரந்தொடுத்தமதனங்கட்விழித்தெரித்தோன்மான்மலர்க்கோ
மானேசாதவர்பரவும்பானன்பன்சேதுபதிமன்னன்வாயில்
மானேசராம்பொன்னுசாமிவள்ளலென்னையவர்மருவாநல்ல
மானேசராகும்வகைநீபுரிந்தால்லிவ்வுலகில்வாழுவேனே (௰௭)

கொச்சகக்கலிப்பா

சுரர்க்கோர்சுவையமுதைத் தூநெடுமாலீந்தனின்று
சுரர்க்கோரறுசுவைசேர் தூவமுதையீந்தனைநீ
மண்டலத்தின்மூன்றடிமண் மாலிரந்தான்றீனர்கள்க
மண்டலத்தினல்குறவுமாறநிதிசொரிந்தனைநீ

இதுதரவு· எனவாங்குதனிச்சொல்

சக்கரத்தானிருதர்களைத்தான்றுணித்தானாரணனுஞ்
சக்கரத்தானுட்பகையைத்தான்றுணித்தாய்நீசபையில்
எல்லார்வலைககாடையீந்தரிமானங்காத்தான்
எல்லார்க்குநீயாடையீந்தபிமானங்காத்தாய்
நல்லாரணிகவர்ந்தானாராயணனிந்த
நல்லாரணியவணிநல்கினைநீநானிலத்தில்

இவைமூன்றுந்தாழிசை

வான்றருவெளவேவழங்குகொடைபோய்
மீன்றருகண்ணினள்விழுவெனுநறவை
உண்டுகளித்தேயொளிவளைசோரக்
கண்டுபாலனமுங்கொண்டிவளணைமேற்
கண்டுயிலாதுதொண்டைவாய்துடிப்பக்
காவிநீர்வாரவோவியம்பேரன்றனள்
கருப்புக்கழையக்குழைத்துத்தேற்றுளி
அருப்புக்கணையைவிடுத்தனனங்கவேள்
வெம்புலியேறெனவிண்மிசையூர்தரும்
அம்புலியோவிவளாலிமேற்றுவின
தோவறுதென்றலுங்காவிறுகுயிலும்
தண்ணுறுஞ்சிந்தும்பெண்ணைவாழன்றிலும்
சந்ததமுடற்றும்வெந்துயர்தணிப்பாம்
நன்னயவிராமநாதபுரம்வாழ்
பொன்னுசாமியெனும்பூபதியே ௰௮

ஆக-செய்யுள்-௲௨௱௯௧



தனிப்பாட்டிறரட்டு

முற்றிற்று.





உ

# செய்யுளகராதி.

## செய்யுளகராதி.

முற்றிற்று

